# தோப்பில் முகமது மீரான் படைப்புகளில் வட்டார வழக்குகளின் பதிவுகள்



பாரதிதாசன் பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (Ph.D.)
பட்டத்திற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு


*ஆய்வாளர்:*

**ம.பரிமளா,** எம்.ஏ., எம்.ஃபில்.,
(*பதிவு எண்:* **27257/Ph.D.K8/Tamil/Full Time/January 2018/Confirm/Dt: 10.03.2020**)

*ஆய்வு நெறியாளர்:*
**முனைவர் மெ.சிவசங்கரி,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
*உதவிப் பேராசிரியர்*






**தமிழ்த் துறை**
## இதயா மகளிர் கல்லூரி
**கும்பகோணம் 612 001**


நவம்பர் 2021

**முனைவர் மெ.சிவசங்கரி,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
உதவிப் பேராசிரியர் – ஆய்வுநெறியாளர்,
தமிழ்த் துறை,
இதயா மகளிர் கல்லூரி,
கும்பகோணம்–612 001.

# நெறியாளர் சான்றிதழ்

**தோப்பில் முகமது மீரான் படைப்புகளில் வட்டார வழக்குகளின் பதிவுகள்** என்னும் தலைப்பில் அமைந்த ஆய்வேடு, கும்பகோணம், இதயா மகளிர் கல்லூரித் தமிழ்த்துறையில் 2018 முதல் 2021 வரை என் மேற்பார்வையில், முனைவர் பட்ட ஆய்வாளர் **திருமதி ம.பரிமளா** (*பதிவு எண்:* **27257/Ph.D.K8/Tamil/Full Time/January 2018/Confirm/Dt: 10.03.2020**) என்பவரால் ஆய்வு செய்து அவரது சொந்த முயற்சியால் உருவாக்கப்பட்டது என்றும், இந்த ஆய்வின் மீது வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு வழங்கப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

இடம் : கும்பகோணம்,

நாள் :

ஆய்வு நெறியாளர் கையொப்பம்

**முனைவர் மெ.சிவசங்கரி,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
உதவிப் பேராசிரியர் – ஆய்வுநெறியாளர்,
தமிழ்த் துறை,
இதயா மகளிர் கல்லூரி,
கும்பகோணம்–612 001.

# கருத்துக் களவின்மைச் சான்றிதழ்
# (Plagiarism-Free Certificate)

என் மேற்பார்வையில் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொண்ட **ம.பரிமளா** (*பதிவு எண்:***27257/Ph.D.K8/Tamil/Full Time/January 2018/Confirm/Dt: 10.03.2020**) அவர்கள் தம் ஆய்வேட்டில் சான்றுகளுக்கு மட்டுமே அறிஞர்கள், வல்லுநர்கள் போன்றோர் கருத்துக்களைப் பயன்படுத்தியுள்ளார். அச்சான்றுகள் மிக இன்றியமையா இடங்களில் மட்டும் மேற்கோள்களாகக் காட்டப்பட்டுள்ளன. பல்கலைக்கழக விதிமுறை 10.3இன்படி Urkund (Analysis Result) மென்பொருள் சோதனைக்குட்படுத்தப்பட்டு பெறப்பட்ட அறிக்கை **(D640253188)** இவ்வாய்வேட்டில் இணைக்கப்பட்டுள்ளது எனச் சான்றளிக்கிறேன்.

**முனைவர் மெ.சிவசங்கரி**

**ம.பரிமளா,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
*பதிவு எண்:* 27257/Ph.D.K8/Tamil/Full Time/January 2018/Confirm/Dt:10.03.2020,
தமிழ்த் துறை,
இதயா மகளிர் கல்லூரி,
கும்பகோணம்–612 001.

# ஆய்வாளர் உறுதிமொழி

**தோப்பில் முகமது மீரான் படைப்புகளில் வட்டார வழக்குகளின் பதிவுகள்** என்னும் தலைப்பில் அமைந்த ஆய்வேடு, கும்பகோணம், இதயா மகளிர் கல்லூரித் தமிழ்த் துறையில் 2018 முதல் 2021 வரை முனைவர் பட்ட ஆய்வாளராக ஆய்வு செய்த காலத்தில் என் சொந்த முயற்சியால் உருவானது என்றும் இதற்குமுன் வேறு எந்தப் பட்டத்திற்கும் இந்த ஆய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

இடம் : கும்பகோணம்,

நாள் :

ஆய்வாளர் கையொப்பம்

துறைத்தலைவர் கையொப்பம்

## நன்றியுரை

**தோப்பில் முகமது மீரான் படைப்புகளில் வட்டார வழக்குகளின் பதிவுகள்** *என்னும் தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்ள அனுமதியளித்த பாரதிதாசன் பல்கலைக்கழகத்திற்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.*

*கும்பகோணம், இதயா மகளிர் கல்லூரித் தமிழ்த்துறையில் முழுநேர முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்ள அனுமதி அளித்து, எனக்கு எல்லாத் தருணங்களிலும் ஆக்கமும், ஊக்கமும் அளித்து வரும் எம் கல்லூரியின் முதல்வர்* **அருட்சகோதரி முனைவர் யூஜின் அமலா, எம்.எஸ்.சி., பி.எட்., பிஎச்.டி.,** *அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.*

*தமிழ்த்துறைத் தலைவர் அருட்சகோதரி* **முனைவர் மோ.லூர்துமேரி, எம்.ஏ., எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,** *அவர்களுக்கும், ஏனையத் தமிழ்த்துறைப் பேராசிரியர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.*

*என் ஆய்வு செம்மையாக அமைய பல வகைகளிலும் உதவி புரிந்து அறிவுரைகள் பல நல்கிய ஆய்வு நெறியாளர்* **முனைவர் மெ.சிவசங்கரி, எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,** *அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.*

*என் ஆய்வு செம்மையுடன் அமைவதற்கு ஆய்வறிஞர் குழு உறுப்பினர்களாக இருந்து நெறி புகட்டிய திருவையாறு, அரசர் கல்லூரி முதல்வர்,* **முனைவர் சு.இரவிச்சந்திரன்** *அவர்களுக்கும், கரந்தை, தமிழவேள் உமாமகேசுவரனார் கரந்தைக் கலைக் கல்லூரி, தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர்,* **முனைவர் சே.தெய்வக்கன்னி** *அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.*

*என் ஆய்விற்குத் தேவையான நூல்களைக் கொடுத்து உதவிய எம் கல்லூரி நூலகர்* **செல்வி க.லதா, எம்.ஏ., எம்.ஃபில்., எம்.எல்.ஐ.எஸ்.,** *அவர்களுக்கும், கும்பகோணம், தஞ்சாவூர் மாவட்ட கிளை நூலகம், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக நூலகம், மற்றும் கும்பகோணம் கோபாலராவ் பொது நூலக நூலகர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.*

என் முன்னேற்றத்திற்காக உழைக்கும் உயிரினும் மேலான என் பெற்றோர் **திரு.மகாலிங்கம், திருமதி. சுசீலா** அவர்களுக்கும் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வு எவ்வகையிலும் தடைபடா வண்ணம் ஒவ்வொரு நாளும் என்னை ஊக்கப்படுத்தி என்னை வழிநடத்திய என் அன்புக் கணவர் **திரு.சு.கலியபெருமாள்** அவர்களுக்கும், என் குழந்தைகள் **அபிநிஷாந்தினி, அனுவர்ஷினி, ஆதேஷ்** ஆகியோருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

ஆய்வேட்டினைச் சிறப்பாக வடிவமைத்துத் தந்த தஞ்சாவூர், **நாகு கம்ப்யூட்டர்ஸ்** நிறுவனத்தாருக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**ம.பரிமளா**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அ.தெ. | – | அஞ்சுவண்ணம் தெரு |
| ஒ.க.கி.க. | – | ஒரு கடலோர கிராமத்தின் கதை |
| க.ஆ. | – | கட்டுரை ஆசிரியர் |
| கு. | – | குடியேற்றம் |
| கூ. | – | கூனன்தோப்பு |
| சா.நா. | – | சாய்வு நாற்காலி |
| து. | – | துறைமுகம் |
| தொ. | – | தொகுதி |
| வே.பே. | – | வேர்களின் பேச்சு |
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள் |
| மு.கு.நூ. | – | முன்னர் குறித்த நூல் |
| மேலது. | – | மேலே குறிப்பிட்டது |

# பொருளடக்கம்

# முன்னுரை

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே தனக்கென ஒரு வாழ்வையும் வரலாற்றையும் வகுத்து வாழ்ந்து கொண்டிருக்கும் தமிழ்மொழி பழைமைக்குப் பழைமையாய் புதுமைக்குப் புதுமையாய் விளங்கி உலக அரங்கில் தனியொரு நிலையை எய்தி நிற்கிறது. எந்த நாட்டிற்கும் இல்லாத இயற்கை வளமும் தட்பவெப்ப நிலையும் காற்று, மழை, ஆற்றுப்படுகை போன்ற இயற்கைச் சூழலும், அரசியல் அமைப்பும் மக்களின் சமுதாய வாழ்க்கை முறையும், உணவு வகைகள், தொழில்கள், அவர்களின் இலக்கிய இலக்கணப் படைப்புகள் என்று எல்லாமே தனக்கெனத் தனியொரு பாரம்பரியத்தைக் கொண்டு தமிழ் இனம் விளங்குகிறது.

தமிழ் இலக்கிய வரலாற்றில் குறிப்பாகச் சிறுகதை, புதின இலக்கியம் பெரும் வளர்ச்சி பெற்றுள்ளது. இவ்விலக்கியம் பல்வேறு புதிய வடிவங்களிலும் நாளும் வளர்ந்த வண்ணமே காட்சியளிக்கின்றது. புத்திலக்கியமான இவை அந்தந்தக் காலத்தில் வழங்கி வருகின்ற பண்பாட்டுக் கூறுகளை எடுத்துரைப்பதில் தவறியதில்லை. அவ்வகையில் நவீன வடிவமான புதினங்கள், சமூகச் சிந்தனைகளில் இசுலாமிய மக்களின் கோட்பாட்டிற்கு எவ்வகையில் உறுதுணையாகத் திகழ்கின்றது என்பதை ஆய்வதாய் அமைகிறது இவ்வாய்வு. தற்கால இலக்கிய வகைகளுள் சிறுகதை, புதினங்கள் தொடர்பான பார்வைகள் நுட்பமானவை. இலக்கியப் படைப்பாளர்கள் பெரும்பான்மையோர் இவ்வடிவத்தையே தங்களின் கருத்துக்களை வெளிப்படுத்துவதற்குரிய களமாகப் பயன்படுத்துகின்றனர். நவீன படைப்பாளர்களுள் ஒருவரான தோப்பில் முகமது மீரான் தன் படைப்புகளின் வாயிலாகச் சிறந்த கருத்துக்களைச் சமூகத்திற்கு வழங்கியுள்ளார்.

இலக்கியங்கள் மனித வாழ்வியலைப் பதிவு செய்கிறது. ஏழை, பணக்காரர் என்னும் வேறுபாடு பாராமல் மனித உணர்வுகளின் வெளிப்பாட்டு ஊடகமாக இலக்கியங்கள் உருவெடுத்தது. நாளடைவில் சாமான்ய மனிதர்களும் தங்கள் வாழ்வியல்சார் நிகழ்வுகளை இலக்கியங்களின் வழியே பதிவு செய்திட

விரும்பினர். கேட்போரின் பொழுதுபோக்கிற்காக முதலில் கூறப்பட்டு வந்த கதைகள் நாளடைவில் வளர்ச்சி அடைந்து மக்கள் சிந்திப்பதற்கும், விழிப்புணர்வு அடைவதற்கும், அறியாமையைப் போக்குவதற்கும் ஒரு கருவியாகப் பல மாற்றங்களைத் தன்னுள் ஏற்படுத்திக் கொண்டு இலக்கியங்கள் வாழ வழிவகை செய்தது.

ஒவ்வொரு காலகட்டத்திலும் வெவ்வேறு விதமான தன்மையுடன் இலக்கியங்கள் தோன்றியுள்ளன. அந்த வகையில் இருபதாம் நூற்றாண்டு இலக்கியமாக விளங்குகின்ற தமிழ் இலக்கிய வரலாற்றில் குறிப்பாகச் சிறுகதை, புதின இலக்கியம் முதலானவை பெரும் வளர்ச்சி பெற்றுள்ளது. புத்திலக்கியமான இவை அந்தந்தக் காலத்தில் வழங்கி வருகின்ற பண்பாட்டுக் கூறுகளை எடுத்துரைப்பதில் தவறியதில்லை.

முகமது மீரானின் புதிய அணுகுமுறைகள், இவருடைய படைப்புகளில் மேன்மை தங்கிய எழுத்து நடை இல்லாமல் மக்களின் பேச்சினையே பேனாவாக்கிக் கொண்டு எழுதும் அவரது படைப்பாளுமை குறிப்பிடத் தகுந்தவை. சுற்றம் மறந்து, தன் இருப்பு மறந்து, நான் என்பதும் மறந்து, அவருடைய படைப்புகள் அதோடு வாழ வைக்கிறது என்று சற்றே தெளிந்த மனதோடு ஆராய முற்பட்டோமானால், அங்கு ஓங்கியுயர்ந்து நிற்கிறது அவரது வட்டார வழக்கு. எந்தச் சமரசமும் இல்லாமல் நெடுந்தீர்க்கமாக வட்டார வழக்கில் தொடர்ந்து ஒலிக்கும் மொழிநடை, கதைப்பாங்கு, கதாப்பாத்திரம் இவைகள் தான் பின்வரும் தலைப்பினைத் தேர்ந்தெடுப்பதற்குரிய காரணங்களாகவும் அமைந்தன.

## ஆய்வுப் பொருள்

**தோப்பில் முகமது மீரான் படைப்புகளில் வட்டார வழக்குகளின் பதிவுகள்** என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

## ஆய்வின் நோக்கம்

இவ்வாய்வு தோப்பில் முகமது மீரான் புதினங்கள் கன்னியாகுமரி மாவட்ட இசுலாமியர் இனவரைவியல் எவ்வாறு புதிய கோணங்களில்

*அமைந்துள்ளது என்பதையும் அவரது புதிய படைப்புத் தளங்களையும் வெளிக்கொணர்வதை நோக்கமாகக் கொண்டுள்ளது. மேலும் இனவரைவியல் வட்டார வழக்குகள், படைப்பாளுமை, மொழிநடை, உத்திகள், படைப்பும், கதைக்களங்களும், இசுலாமியச் சமுதாய வாழ்வியலும் பண்பாடும், படைப்பாளர் கையாண்டுள்ள மொழிநடை போன்ற பன்முக நோக்கினை இப்படைப்புகளில் காணப்படுகின்றன. இவற்றுடன் படைப்பாளரின் தனித்தன்மையை அறிவதற்கும், இசுலாமிய மக்களின் சமூக வழக்காறுகள், பண்பாட்டியல் சிறப்பினை வெளிப்படுத்த வேண்டும் என்பதும் இவ்ஆய்வின் தலையாய நோக்கமாகக் கொண்டு இவ்வாய்வு நிகழ்த்தப்பட்டிருக்கின்றது.*

**கருதுகோள்**

*தோப்பில் முகமது மீரானின் படைப்புகளில் குமரி மாவட்ட இசுலாமிய மீனவ மக்களின் வட்டார வழக்காறுகள், பண்பாடு, வாழ்வியல் முறைகள் போன்றவற்றை தம் படைப்புகளில் வெளிப்படுத்தியிருக்கிறார் என்பதே இவ்வாய்வின் கருதுகோளாகும்.*

**ஆய்வு எல்லை**

*தோப்பில் முகமது மீரான் எழுதி வெளிவந்தவை 6 புதினங்கள், 6 சிறுகதைத் தொகுப்புகள் மற்றும் இரண்டு மொழிபெயர்ப்பு நூல்களாகும். இவற்றில் 6 புதினங்கள் மற்றும் 1 சிறுகதைத் தொகுதி (வேர்களின் பேச்சு) மட்டும் இவ்வாய்வின் எல்லையாகக் கொள்ளப்பட்டுள்ளது.*

**ஆய்வு ஆதாரங்கள்**

*இவ்வாய்வின் ஆதாரங்கள் இரண்டு நிலைகளில் முதன்மை ஆதாரம், துணைமை ஆதாரங்கள் என அமைந்துள்ளன.*

**முதன்மை ஆதாரங்கள்**

*1998 முதல் 2017 வரை வெளிவந்துள்ள தோப்பில் முகமது மீரானின் படைப்புகளில் ஆறு புதினங்கள், ஒரு சிறுகதைத் தொகுதி (வேர்களின் பேச்சு) மட்டும் முதன்மை ஆதாரங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன. அவை பின்வருமாறு:*

**புதினங்கள்**

1. *ஒரு கடலோரக் கிராமத்தின் கதை (1988)*
2. *துறைமுகம் (1991)*
3. *கூனன் தோப்பு (1993)*
4. *சாய்வு நாற்காலி (1997)*
5. *அஞ்சு வண்ணம் தெரு (2010)*
6. *குடியேற்றம் (2017)*

**சிறுகதைத் தொகுப்பு**

1. *வேர்களின் பேச்சு*

**துணைமை ஆதாரங்கள்**

*முகமது மீரானின் படைப்புகள் தொடர்பாக வெளிவந்துள்ள திறனாய்வு நூல்கள், கட்டுரைகள், பதிவு நேர்காணல்கள், பிற அறிஞர்கள் எழுதிய நூல்கள், கலைக்களஞ்சியங்கள், அகராதிகள், வாழ்வியற் களஞ்சியங்கள், ஆங்கில நூல்கள், பதிப்பிக்கப்படாத ஆய்வேடுகள், மலர்கள், இதழ்கள் போன்றவை இவ்வாய்வுக்கு துணைமை ஆதாரங்களாகக் கொள்ளப் பட்டுள்ளன.*

**ஆய்வேட்டின் அணுகுமுறை**

*ஆய்வின் நோக்கத்திற்கு ஏற்பச் சமூகவியல் அணுகுமுறை, விளக்கமுறைத் திறனாய்வு, கள ஆய்வு அணுகுமுறை முதலியன பின்பற்றப்பட்டுள்ளன.*

**ஆய்வேட்டின் அமைப்பு**

*இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாகப் பின்வரும் நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது.*

1. *தோப்பில் முகமது மீரானின் படைப்பும் கதைக்களங்களும்*
2. *படைப்பாளுமையும் மொழிநடை உத்திகளும்*
3. *இன வரைவியலும் வட்டார வழக்குகளும்*
4. *இஸ்லாமியர் சமுதாய வாழ்வியலும் பண்பாடும்*

**இயல் விளக்கம்**

**இயல் 1: தோப்பில் முகமது மீரானின் படைப்பும் கதைக்களங்களும்**

*தற்கால இலக்கியங்களுள் ஒன்றான சிறுகதை, புதினம் வாயிலாக மனித சமுதாயத்திற்குத் தேவையான சிந்தனைகளை வழங்க முடியும் என்ற நிலையில் ஒவ்வொரு மண்ணிற்குரிய கலாச்சாரம், பண்பாடு, சமயம், கலைகள் காக்கப்பட வேண்டும் என்ற உயர்ந்த சிந்தனையும் மக்களிடையே இருக்கும் நம்பிக்கையால் விளையும் விளைவுகள் எத்தகையது என்ற விழிப்புணர்வும் வட்டார மண் மணம் பேசுகின்ற இயற்கை சார்ந்த நிகழ்வுகளும் இசுலாம் மக்களின் வாழ்வியல் கூறுகளையும் தோப்பில் முகமது மீரான் படைப்புத் தளங்கள் எடுத்துரைக்கின்றன. இவருடைய படைப்புக்களான சிறுகதை, புதினங்கள் ஆகிய இவற்றில் அமைக்கப்பட்ட கதைக்களங்கள், கதைமாந்தர்கள் போன்றவை இவ்வியலில் அறிமுக நோக்கில் ஆராயப்பட்டுள்ளது.*

*தமிழ் நாவல் உலகில் ஒரு புதிய வருகை (காலச்சுவடு சிறப்பிதழ்) - மீரானின் படைப்புகளில் நோக்கும் பின்புலமும் - மரபும் மாற்றங்களும் - மேலைநாட்டு வழிகாட்டிகள் - தற்கால வளர்ச்சிப் பாதை - சாதனையும் சோதனையும் - தற்காலச் சிறுகதை, நாவல் நோக்கும் போக்கும் - தோப்பில் முகமது மீரானின் கதைகள் - புதிய கொள்கைகள் - கருப்பொருள் உத்திமுறைகள் - மீரானின் படைப்பு நோக்கங்கள் - கதைக்களங்கள் - புதினங்களின் கதைக்களங்கள் - துறைமுகம் - கூனன்தோப்பு - சாய்வு நாற்காலி - அஞ்சுவண்ணம் தெரு - குடியேற்றம் ஆகிய நாவல்களின் கதைக்களங்கள் - படைப்பு வகைகள் - விளக்கமுறை - நாடக முறை - கதைப்பின்னல், மாந்தர் ஆக்கம் - கதைமாந்தர் படைப்பின் முதன்மையும் சிறப்பும் - பாத்திரங்கள் அறிமுகம் - தோப்பில் முகமது மீரான் படைப்புகளில் கதைமாந்தர்கள் - இவ்வகை உட்தலைப்புகளில் முதல் இயல் ஆராயப்பட்டிருக்கின்றன.*

**இயல் 2: படைப்பாளுமையும் மொழிநடை உத்திகளும்**

*ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு தனிப்பட்ட குணம் உண்டு. ஒரு சிலர் அந்தத் தனிப்பட்ட குணத்தால் ஒருவரிடமிருந்து வேறுபட்டு தனித்தன்மையுடன் திகழ்வர். ஒருவரின் குணத்தினை வைத்து அவரது ஆளுமை மதிப்பிடப்படுகிறது.*

அவ்வகையில் தோப்பில் முகமது மீரானின் படைப்புகளின் வழி இவருடைய தலைமைப் பண்புகள், ஒருமைப்பாடுகள் திறன் காரணிகள், தனிமனித ஆளுமைகள், சமூக உறவுகள், நடுநிலைப் பற்றிய ஆளுமைகள், மனோபாவம், இளமைக் குறித்த ஆளுமைகள், ஒருமைப்பாடுடைய ஆளுமைகள், மொழிநடையும் உத்தியும், இவருடைய படைப்புகளில் பொதிந்துள்ள பாங்குகள், இன்ன பிற ஆளுமைப் பதிவுகளும் இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

ஆளுமை பொருள் விளக்கம் - உளவியலறிஞர்கள் கருத்து - ஆளுமையின் கூறுகளும் சிறப்பும் - ஆளுமையைக் கண்டறிதலும் அணுகுமுறைகளும் - யூங்கின் ஆளுமை வகைக் கோட்பாட்டில் தோப்பில் முகமது மீரான் - தலைப்பண்பு நோக்கில் முகமது மீரான் - ஒருமைப்பாடு ஆளுமைத்திறன் கொண்ட முகமது மீரான் - மீரானின் ஆளுமைத்திறன் - மீரானும் ஆளுமைக் காரணிகளும் - தனிமனிதர் நோக்கில் முகமது மீரானின் ஆளுமை - உடல் சார்ந்த ஆளுமை - புலன் வழி அறியும் ஆற்றல் - மன எழுச்சியும் சூழ்நிலைக்கேற்ற இணக்கமும் - சமூக உறவும், நடுநிலையும் பற்றிய ஆளுமைகள் - மனோபாவம், இளமைக் குறித்த ஆளுமைப் பதிவுகள் - ஒருமைப்பாடுடைய ஆளுமையும் முகமது மீரானின் பங்களிப்பு - மொழிநடை உத்தி - நடை பற்றி அறிஞர்கள் விளக்கம் - நடையின் வகைகள் - முகமது மீரானின் படைப்புகளில் நடை - உவமைகள் பயன்பாடு - காட்சி உவமைப் பயன்பாடு - உணரும் உவமைப் பயன்பாடுகள் - உரையாடல் பயன்பாடுகள் - வடமொழிச் சொற்கள் - ஆங்கிலச் சொற்கள் - பேச்சு வழக்குச் சொற்கள் - அடுக்குத் தொடர்கள் - உணர்ச்சி நடை பயன்பாடுகள் - கவிதை நடை - ஒலிக்குறிப்புச் சொற்கள் - உத்தி விளக்கம் - உத்தி பற்றி அறிஞர்களின் கருத்து - உத்தியின் இலக்கணம் - கதை கூறும் முறையில் பயன்படுத்தும் உத்திகள் - சூழலைத் தலைப்பாக அமைக்கும் உத்தி - கதைமாந்தரின் பெயரைத் தலைப்பாக அமைக்கும் உத்தி - தொன்ம உத்தி - வருணனை உத்தி - கடித உத்தி ஆகியன இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன.

### இயல் 3: இனவரைவியலும் வட்டார வழக்குகளும்

சமுதாயத்தின் குறிப்பிட்ட மனித இனம் அல்லது குறிப்பிட்ட சமூகத்தின் பண்பாட்டினை அறிவதற்கு அப்பண்பாட்டை உடைய இனமக்களின் பிறப்பு

முதல் இறப்பு வரையிலான வாழ்வியற் கூறுகளை அவர்களோடு குறிப்பிட்ட நாட்கள் தங்கி வாழ்ந்து, கள ஆய்வு முறைகளின் வழிப் பெறப்படும் முதன்மையான தரவுகளைக் கொண்டு விளக்கமாகக் குறிப்பிடப்படுவது இனவரைவியல் ஆகும். அம்மக்களிடையே மரபு ரீதியாகப் பேசப்பட்டு வழக்கத்தில் பயன்பட்டு வருகின்ற சொல்லாடல்களில் இருப்பது வழக்குச் சொற்கள் ஆகும். எனவே தோப்பில் முகமது மீரான் படைப்புக்களை வரையறுத்துக் கொண்டு அப்படைப்புகள் உருவாகியுள்ள கன்னியாகுமரி மாவட்டத்தையும், அங்குள்ள மக்களின் வழக்காறுகளைப் பொதுவாகவும் இசுலாம் மக்களின் வழக்குச் சொற்களையும் சிறப்புக் கூறுகளாகவும் தொடர்புடைய இன்ன பிறவும் இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

இனவரைவியல் சொற்பொருள் விளக்கம் - இனவரைவியல் குறித்த வரையறை - இனவரைவியல் கூறுகள் - இலக்கியம் - இலக்கியம் சொற்பொருள் விளக்கம் - இலக்கியம் பற்றிய அறிஞர்கள் விளக்கம் - இலக்கியம் தோன்றுவதற்குரிய காரணங்கள் - இலக்கியமும் வாழ்க்கையும் - இலக்கியமும் இனவரைவியலும் - இலக்கியங்களில் காலந்தோறும் இனவரைவியல் பதிவுகள் - இலக்கியம் - இனவரைவியல், வேறுபடும் இடங்கள் - மானிடவியல் தோற்றம், வளர்ச்சி - மானிடவியல் வளர்ச்சி - ஆய்வு எல்லையும் வரையறையும் - குமரிக்கண்டம் - பெயர்களும் சொற்பிறப்பியலும் - பண்டைய இலக்கியங்கள் காட்டும் மூழ்கிய நகரங்கள் - கன்னியாகுமரி மாவட்டத்தின் வரலாறு - கன்னியாகுமரி மாவட்டத்தின் சுருக்கமான கால வரிசை - கன்னியாகுமரி மாவட்டம் சிறு புள்ளி விவரங்கள் - வட்டார வழக்கு - தமிழ் வட்டார மொழி வழக்குகள் - தோப்பில் முகமது மீரான் படைப்பும் வழக்குச் சொற்களும் போன்றவை இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

**இயல் 4: இஸ்லாமியச் சமுதாய வாழ்வியலும் பண்பாடும்**

நிறைவு இயலில் குமரி மாவட்ட இஸ்லாமியர் வாழ்வியலை சமூகவியல் நோக்கில் அணுகும் போது சமுதாயம், சமுதாயத்தின் அங்கமாகத் திகழும் நிறுவனம் அவற்றுள் ஒன்றான சமயம், சமுதாயக் கூட்டமைப்பு, குடும்பம் வாழ்வியல் முறைகள், உறவு நிலைகள் இவற்றோடு தொடர்புடைய வாழ்வியல்

நம்பிக்கைகள், தொழில் முறைகள், கல்வி, பொருளாதாரம், வழிபாட்டின் இன்றியமையாமை, அரசியல் மரபு ரீதியான வரலாறு போன்ற இசுலாமியர் சமூகத்தில் காணப்படுகின்ற வாழ்வியல் பண்பாட்டுக் கூறுகளைத் தோப்பில் முகமது மீரான் படைப்புகளை முதன்மை ஆதாரமாகக் கொண்டு குமரி மாவட்ட சமுதாய மக்களிடையே கள ஆய்வு அணுகுமுறையிலும் இவ்வியல் ஆராயப்பட்டுள்ளது.

சமுதாயம் - சமூகப் பார்வையின் தன்மைகள் - சமூகவியலும் இலக்கியமும் - பண்பாடு - சொல் பொருள் விளக்கம் - குமரி மாவட்ட இசுலாமியர் அறிமுகம் - இசுலாம் சமய மக்களின் வாழ்வியல் நிலைகள் - மீரான் படைப்புகளில் சமுதாயப் பண்பாட்டுத் தாக்கங்கள் - பெண்களும் குடும்ப நிலையும் - குடும்பமும் அமைப்பும் - சமய, சமுதாய பாதிப்புகள் - பண்பாடும் நம்பிக்கைகளும் - பண்பாடும் அவற்றின் கூறுகளும் - இசுலாமியர் நம்பிக்கைகளும் பண்பாடும் - நம்பிக்கை வாழ்வியல் - வகைமை நோக்கில் நம்பிக்கை - கண்ணேறு கழித்தல் நம்பிக்கை - ஆவிகள் குறித்த அச்சமும் நம்பிக்கைகளும் - மந்திரம் குறித்த நம்பிக்கைகள் - மருத்துவம் குறித்த நம்பிக்கைகள் - குழந்தைப்பேறும் குழந்தை வளர்ப்பும் - வருவதை உணர்த்தும் குறிகள் - இசுலாமியர் தர்க்காக்களும் வழிபாட்டு நம்பிக்கைகளும் - அரேபியப் போர் தொடர்பான வரலாறுகள் - அன்றைய அரேபிய சமூகச் சூழல் - இசுலாமிய நவீன சீர்திருத்தம் - தற்கால சமுதாய நோக்கில் இசுலாமியரின் கல்வி, பொருளாதார நிலை - கல்வி முன்னேற்ற நிலைகள் - சமூக முன்னேற்றத்திற்கான தீர்வுகள், கல்வித்துறை - மருத்துவத்துறை, சமுதாயத் தீர்வுகள் - அரசியல் சிந்தனைகள் முதலியன இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளது.

**முடிவுரை**

ஒவ்வொரு இயலில் கண்ட மெய்மைகள் அவ்வவ்வியலின் இறுதியில் தொகுப்புரையாகத் தரப்பட்டுள்ளன. இவை அந்தந்த இயல்களில் வெளிப்படும் சிறந்த கருத்துக்களை வெளிப்படுத்துகின்றன. இயல்கள்தோறும் கண்ட மெய்ம்மைகளின் அடிப்படையிலான கருத்துக்கள் தொகுக்கப்பட்டு முடிவுரையாகத் தரப்பட்டுள்ளது.

**துணைநூற் பட்டியல்**

*இவ்வாய்விற்குப் பயன்பட்ட முதன்மை, துணைமைச் சான்று நூல்கள் அகர நிரலில் தொகுக்கப்பட்டுத் துணைநூற் பட்டியலாகத் தரப்பட்டுள்ளது.*

**பின்னிணைப்பு**

*தோப்பில் முகமது மீரான் பயன்படுத்திய ஆய்வாளர் களத்திற்குச் சென்று வந்த புகைப்படங்கள் பின்னிணைப்பாக இடம்பெறுகின்றன. இவ்ஆய்வின் மூன்றாம் இயல்* **இனவரைவியலும் வட்டார வழக்குகளும்** *என்பதாகும். இவ்வியலில் கன்னியாகுமரி மாவட்டத்தில் வழங்கும் வழக்குச் சொற்கள், தோப்பில் முகமது மீரான் எழுதிய எல்லா நாவல்களிலும் கையாண்டிருக்கின்றார். அது பற்றிய உண்மை விவரம் அறிந்து கொள்ளும் விதமாக ஆய்வாளர் களத்திற்கு நேரில் சென்று அவ்வழக்குச் சொற்கள் பற்றிய செய்திகளைத் திரட்டினார். அந்த நிகழ்வின் புகைப்படங்கள் இவண் பின்னிணைப்பாகத் தரப்பட்டுள்ளன.*

## இயல் 1

# தோப்பில் முகமது மீரானின் படைப்பும் கதைக்களங்களும்

### முன்னுரை

*தற்கால இலக்கியங்களுள் ஒன்றான சிறுகதை, புதினம் வாயிலாக மனித சமுதாயத்திற்குத் தேவையான சிந்தனைகளை வழங்க முடியும் என்ற நிலையில் ஒவ்வொரு மண்ணிற்குரிய கலாச்சாரம், பண்பாடு, சமயம் கலைகள் காக்கப்பட வேண்டும் என்ற உயர்ந்த சிந்தனையும், மக்களிடையே இருக்கும் நம்பிக்கையால் விளையும் விளைவுகள் எத்தகையது என்ற விழிப்புணர்வும், வட்டார மண்மணம் பேசுகின்ற இயற்கை சார்ந்த நிகழ்வுகளும் இஸ்லாம் மக்களின் வாழ்வியல் கூறுகளையும் தோப்பில் முகமது மீரான் படைப்புத் தளங்கள் எடுத்துரைக்கின்றன என்னும் நோக்கில் இவருடைய படைப்புக்களில் சிறுகதை, புதினம் இவற்றின் கதைக்களங்கள், கதைமாந்தர் படைப்புகள், சமுதாய நோக்கும் போக்கும் குறித்து இவ்வியல் அறிமுக நோக்கில் ஆராய்கிறது.*

### வாழ்க்கைக் குறிப்பு

*முகமது மீரான் கன்னியாகுமரி மாவட்டத்தில் தேங்காய்ப்பட்டினம் என்ற ஊரில் 1944 ஆம் வருடம் செப்டம்பர் 26 ஆம் நாள் பிறந்தார். இவரது மனைவியின் பெயர் ஜலீலா மீரான். இவர் தமிழ், மலையாள எழுத்தாளர். இவர் ஐந்து புதினங்களையும், ஆறு சிறுகதைத் தொகுப்புகளையும் சில மொழிபெயர்ப்புகளையும் எழுதி வெளியிட்டுள்ளார். இவரது புதினம் 'சாய்வு நாற்காலி' 1997இல் தமிழுக்கான சாகித்திய அகாதமி விருது பெற்றது. தனது 74 ஆவது வயதில் (மே 1, 2019) உடல்நிலைக் குறைவு காரணமாக திருநெல்வேலி மாவட்டம் பேட்டை எனும் இடத்தில் இறந்தார்.[1]*

### முகமது மீரான் பெயர்க் காரணம்

*மீரானின் மூதாதையர்கள் குடியிருந்த இடத்தின் பெயர் தான் தோப்பு. தோப்பு என்ற அந்த இடம் ஊரில் பிற்படுத்தப்பட்ட மிக மோசமான இடமாகக் கருதப்பட்ட காரணத்தினால் எழுத்துலகத்திற்கு வராததற்கு முன்பே தன் பெயரை, புரட்சியாக தோப்பில் என்று சேர்த்துக் கொண்டார் (தோப்புஆள்) தோப்பில் ஆனது.*

**முகமது மீரான் எழுத்துத் துறைக்கு வரக்காரணம்**

*உயர்வர்க்கத்தினரால் மீரான் குடும்பங்களுக்கு இடையூறு ஏற்பட்டுக் கொண்டே இருந்தது. அதை அவருடைய வாப்பா சொல்லிக் கொண்டே இருப்பார். அவர் அடிமடத்தில் இல்லை என்றாலும் அடிமட்ட மக்களின் அனுபவம் அவருக்கு கிடைத்தது. அங்கிருந்தே அவருக்கு ஒரு கலக மனப்பான்மை உருவானது.*

*எப்பவும் ஒரு சமூகத்தை இன்னொரு சமூகம் ஒடுக்கனும்னு நினைக்கின்ற போது ஒடுங்கிய சமூகத்தில் ஒரு கலக உணர்ச்சி உண்டாகும். அந்த கலக உணர்ச்சி ஒன்று கலையாக வெளிப்படலாம் (அல்லது) சமூகப் புரட்சியாளராக உருவாகலாம். அவர் கலையாக வெளிப்படுத்துவதற்கு எழுத்துத் துறையில் கால் பதித்தார்.*

**விருதுகள்**

1. *சாகித்திய அகாதமி விருது - சாய்வு நாற்காலி (1997)*
2. *தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்ற விருது*
3. *இலக்கியச் சிந்தனை விருது*
4. *வில்லி தேவசிகாமணி விருது*
5. *தமிழக அரசு விருது*
6. *அமுதன் அடிகள் இலக்கிய விருது*
7. *தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்க விருது.*

**படைப்புக்கள்**

1. *புதினங்கள்*
2. *சிறுகதைத் தொகுப்புகள்*
3. *மொழிபெயர்ப்பு*

**புதினங்கள்**

1. *ஒரு கடலோரக் கிராமத்தின் கதை - 1988*
2. *துறைமுகம் - 1991*

3. *கூனன் தோப்பு - 1993*
4. *சாய்வு நாற்காலி - 1997*
5. *அஞ்சு வண்ணன் தெரு*
6. *குடியேற்றம் - 2017*

**சிறுகதைத் தொகுப்புகள்**

1. *அன்புக்கு முதுமை இல்லை*
2. *தங்கராசு*
3. *அனந்தசயனம் காலனி*
4. *ஒரு குட்டித் தீவின் வரைபடம்*
5. *தோப்பில் முகமது மீரான் கதைகள்*
6. *ஒரு மாமரமும் கொஞ்சம் பறவைகளும்*

**மொழிபெயர்ப்புகள்**

1. *தெய்வத்தின் கண்ணே (என்.பி.முகமது)*
2. *வைக்கம் முகமது பஷீர் வாழ்க்கை வரலாறு (ஆய்வுக் கட்டுரை) (எம்.என்.கரச்சேரி)*

**தமிழ் நாவல் உலகில் ஒரு புதிய வருகை (காலச்சுவடு சிறப்பிதழ்)**

*படைப்புலகில் ஒரு படைப்பாளன் அறிமுகம் ஆகின்றபொழுது அவனுக்குப் பல்வேறு இடங்களில் பல கோணங்களில் அறிமுகம் கிடைக்கின்றது. அந்த வகையில் காலச்சுவடு சிறப்பிதழில் "தோப்பில் முகமது மீரானை எனக்கு முதலில் அறிமுகப்படுத்தியவர் கேரளப் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த டாகடர் நாச்சிமுத்து அவர்கள். 1989 ஆம் ஆண்டு நான் கேரளா சென்றிருந்த போது மீரானின் ஒரு கடலோர கிராமத்தின் கதை நாவலைப் பற்றிக் கூறினார். ஒரு வித்தியாசமான நாவல் படித்துப் பாருங்கள் என்றார். அதன் பதிப்பகத்தாரின் விலாசத்தையும் தந்தார். அப்போது மீரான் இலக்கிய உலகில் பரவலாக அறியப்பட்டிருக்கவில்லை. அவரது நாவலும் புத்தகக் கடைகளில் கிடைக்கவில்லை. அடுத்த ஆண்டு நான் தமிழகம் சென்றிருந்த போது ஓராண்டு கால இடைவெளியில் மீரானின் பெயர் உயர் இலக்கிய வட்டாரத்தில் மிகவும்*

*பிரபலம் பெற்றிருப்பதைக் கண்டேன்" என்று சுந்தரராமசாமி மீரானையும் அவரது நாவலையும் மிகவும் சிலாகித்துச் சொன்னார். கீழக்கரைக்குப் போகும் வழியில் திநெல்வேலியில் அவரைக் கட்டாயம் சந்திக்கும்படி கேட்டுக் கொண்டார். அவரே மீரானுடன் தொலைபேசியில் தொடர்புக் கொண்டு எமது சந்திப்புக்கும் ஏற்பாடு செய்தார்.*

*மீரான் திருநெல்வேலிக்கு அண்மையில் பேட்டை என்னும் கிராமத்தில் வசித்து வருகிறார். திருநெல்வேலி நகரில் அவருக்கு ஒரு கடையும் உண்டு. மிளகாய் வத்தல் வியாபாரம் செய்கிறார் என்று நினைக்கிறேன். பேட்டை வீட்டில் பலமணி நேரம் மீரானுடன் பேசிக் கொண்டிருந்தேன். வயது ஒருமை மட்டுமின்றி பல விசயங்களில் எமக்குள் கருத்தொருமை இருப்பதையும் உணர்ந்தேன்.*

*மீரான் நீண்ட காலம் தமிழ் இலக்கியத்தோடு தொடர்புக் கொண்டிருந்த போதிலும் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்புவரை வெளி உலகில் பரவலாக அறியப்படாதவராகவே இருந்திருக்கிறார். இதற்கு முக்கியமான ஒரு காரணம் இவரது படைப்புக்கள் அனைத்தும் இஸ்லாமிய சஞ்சிகைகளில் வெளிவந்தமை எனலாம். இவரது முதலாவது கதை பிறையில் பிரசுரிக்கப்பட்டது.*

*இவரது முதலாவது நாவல் முசுலிம் முரசில் தொடர் கதையாக வந்தது. துறைமுகம், சாய்வு நாற்காலி ஆகிய இரண்டு புதிய நாவல்கள் முறையே 'மதிநா', 'முஸ்லிம் முரசு' ஆகிய இதழ்களில் தொடராக வெளிவந்தது. இச்சஞ்சிகைகள் முற்றிலும் மதச் சார்பானவை. மத உணர்வு மிக்க முஸ்லிம் வட்டாரத்தில் உலவுபவை. பாரம்பரியச் சிந்தனை மரபைப் பேணுபவை. சில கம்யூனிசம் சார்பான பத்திரிகைகள் இலக்கியத்தை அரசியல் பிரச்சாரச் சாதனமாகக் கருதுவது போல இவை இலக்கியத்தைச் சமயப் பிரச்சார, சமூகச் சீர்த்திருத்தச் சாதனமாக மட்டும் கருதுபவை இலக்கியத்தை ஒரு வாழ்க்கைத் தரிசனமாகக் காணும் நல்ல கலைஞர்கள் யாரும் இச்சஞ்சிகைகள் மூலம் உருவாகியதில்லை. மீரான் இதற்கு ஒரு விதிவிலக்காகக் காணப்படுகிறார்.*

*மீரானின் ஒரு கடலோர கிராமத்தின் கதை முஸ்லிம் முரசில் தொடராக வெளிவந்த போது இலக்கிய உலகில் யாரும் அதனைக் கண்டு கொள்ளவில்லை. 1988 ஜனவரியில் அது நூல் உருப்பெற்ற போதும், ஓராண்டுக்கு மேலாக*

இலக்கியப் பிரம்மாக்களின் கவனத்தில் அது படவில்லை. அடுத்த ஆண்டில் இந்நாவலுக்கு சுக்கிர திசை அடித்தது என்று சொல்லலாம். 1989 பிற்பகுதியில் தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றம் இதனைச் சிறந்த நாவலாகத் தேர்வு செய்தது. தொடர்ந்து கேரளப் பல்கலைக்கழகம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், கோவை பாரதியார் பல்கலைக்கழகம் என்பன இதனை பி.ஏ., எம்.ஏ. வகுப்புகளுக்குப் பாட நூலாக்கின. தயாரிப்பாளர்கள் இக்கதையைத் தொலைக்காட்சி நாடகமாக்குவதற்காக ஆசிரியருடன் ஒப்பந்தம் செய்து கொண்டார்கள். முதல் இரண்டு ஆண்டுகளுக்குள் நாவல் மூன்று பதிப்புகளுக்குப் பாடநூலாக்கின. தயாரிப்பாளர்கள் இக்கதையைத் தொலைக்காட்சி நாடகமாக்குவதற்காக ஆசிரியருடன் ஒப்பந்தம் செய்து கொண்டார்கள். முதல் இரணடு ஆண்டுகளுக்குள் நாவல் மூன்று பதிப்புகள் கண்டது. இத்தகைய ஆரம்பகால பிரபலங்களை அடிப்படையாகக் கொண்டு ஒரு நாவலின் முக்கியத்துவத்தை, அதன் இலக்கியத்தை நாம் மட்டிட முடியாது என்பது உண்மை. எனினும் இத்தகைய பிரபலத்துக்கு இந்நாவலின் தனித்துவம் ஒரு காரணம் என்பதை மறுக்க முடியாது.

தமிழ் நாவலுக்கு ஒரு புதிய களத்தையும் ஒரு புதிய வாழ்க்கை முறையையும் அறிமுகப்படுத்தி அதன்மூலம் ஒரு புதிய பரிமாணத்தை அளித்தது. இந்நாவலின் முக்கியத்துவத்துக்கு ஒரு காரணமாகும். தமிழ் நாவலுக்கு நூறு வயது கடந்துவிட்ட போதிலும் இதுவரை தமிழ்ப்பேசும் சமூகத்தை அது முழுமையாகப் பிரதிபலிக்கவில்லை என்றே கூறவேண்டும். தமிழ்ப் பேசும் முஸ்லீம்களின் சமூக வாழ்வு தமிழ் நாவலில் பிரதிபலிக்கப்படவே இல்லை. முஸ்லீம் வாழ்க்கைப் பின்னணியில் நாவல் என்ற பெயரில் எழுதப்பட்டவை எல்லாம் கற்பனைப் புனைவுகளும், சீர்த்திருத்தப் பிரச்சாரக் கட்டுக் கதைகளும் தான். முஸ்லீம் சமூகம் பற்றிய ஒரு யதார்த்தப் படிமம் தமிழ் நாவலில் இடம்பெறவே இல்லை. தனது கடலோர கிராமத்தின் கதை மூலம் முதல் முதல் மீரான் அந்த வெற்றிடத்தை நிரப்பி இருக்கிறார். இதன்மூலம் தமிழ் நாவல் ஒரு புதிய பரிமாணத்தைப் பெறுகின்றது. 70களில் ஹெப்சிபா ஜேசுதாசனின் புத்தம் வீடு செய்தது போல இது அமைந்தது.

ஒரு புதிய களத்தையும் புதிய வாழ்க்கை முறையையும், அறிமுகப்படுத்துவதனால் மட்டும் ஒரு நாவல் முக்கியத்துவம் பெற்று

*விடுவதில்லை. ஒரு படைப்பைப் பொறுத்தவரை உண்மையில் இவை இரண்டாம் பட்சமானவைதான் ஒரு படைப்பின் அடிப்படையானவெற்றி அது. வாழ்க்கையை அணுகும் முறையிலும் அது காட்டும் வாழ்க்கைத் தரிசனத்திலும் தங்கியுள்ளது. இத்தரிசனம் குறிப்பாக அப்படைப்பு சித்திரிக்கும் வாழ்க்கைப் பற்றியதாக மட்டுமன்றி பொதுவாகமனித வாழ்க்கை முழுமையையும் தழுவி அமைகின்றது. அவன் தன் படைப்பில் சித்தரிக்கும் அவனது காலம், சமூகம் என்னும் ஜன்னலூடாக வெளி உலகம் முழுவதையும் பார்க்கிறான். அவ்வகையில் ஒவ்வொரு சிறந்த படைப்புக்கும் ஓர் இரட்டைத்தன்மை இருக்கிறது எனலாம். ஒன்று குறிப்பானத் தன்மை* (Particularity) *அதாவது அப்படைப்பு சித்தரிக்கும் சூழலின் ஒரு உண்மையான படிமத்தைத் தருவது, மற்றது பொதுவானத் தன்மை* (Generality) *அதாவது முழு மனித வாழ்வுக்கும் ஒரு பொதுக் குறியீடாக அமைவது ஒவ்வொரு சிறந்த நாவலாசிரியனுக்கும் அவனது படைப்பு ஒரு ஜன்னலாக அமைகின்றது. அவன் தன் படைப்பில் சித்தரிக்கும் அவரது காலம், சமூகம் என்னும் ஜன்னலூடாக வெளி உலகம் முழுவதையும் பார்க்கிறான். முழு வாழ்க்கையையும் தரிசிக்கிறான். ஒரு பண்பட்ட வாசகனுக்கும் அப்படைப்பு ஒரு ஜன்னலாகவே அமைகின்றது. அதனூடே அவன் முழு வாழ்க்கையையும் காண்கிறான். வாழ்வு பற்றிய ஒரு தரிசனத்தைப் பெறுகிறான். இவ்வாறுதான் ஒரு படைப்பு கால, தேச, வர்த்தமானங்களைக் கடந்து செல்கிறது. ஒரு குறிப்பிட்ட காலத்தில், இடத்தில் சமூகத்தில் தோன்றினாலும் உலகப் பொதுமையாகின்றது. இவ்விரட்டைத் தன்மை இல்லாவிட்டால் ரஷ்ய நாவல் ரஷ்ய நாவலாகவும், ஆப்பிரிக்க நாவல் ஆப்பிரிக்க நாவலாகவும், இந்திய நாவல் இந்திய நாவலாகவும் மட்டுமே இருக்கும். தன் வட்டார எல்லைகளைக் கடந்து செல்லாது. ஆனால் டால்ஸ்டாயும், ஹெமிங்வேயும், மஹப்பூசும், சிவராம கருத்தும் நமது உணர்வோடு கலக்க முடிகின்றது என்றால் இந்த இரட்டைத் தன்மைதான் காரணம். ஒவ்வொரு உண்மையான கலைஞனும், பிரக்ஞை பூர்வமற்ற இவ்விரட்டைத் தன்மைக்குத் தன் படைப்பில் இடம்கொடுத்து விடுகிறான்.*

தோப்பில் முகமது மீரானைப் பற்றிப் பேசும்போது இந்த உண்மையை வலியுறுத்துவது அவசியமாகின்றது. அவர் காட்டிய வாழ்க்கைப்புலம் தமிழ்நாவலுக்கு மிகவும் புதியது. அரை நூற்றாண்டுக்குமுந்திய தமிழ்நாட்டு முஸ்லீம் கிராமம் ஒன்றை (தேங்காய்ப்பட்டினம்) அவர் தம் படைப்புக்குக் களமாகக் கொள்கிறார்.[2]

பாரம்பரியமிக்கப் பழக்க வழக்கங்களும், அறியாமையும் மூடநம்பிக்கைகளும் கொண்ட கட்டிறுக்கமான சமூகம், பொருளாதார வலுமிக்க ஒரு சிலரின் பிடியில் நசுங்குண்டு மூச்சுத்திணறிக் கிடக்கும். சமூகம், நவீன நாகரிகத்தின் ஒளிக்காற்றுப் புகமுடியாத மூடுண்ட சமூகம், இச்சமூகத்தின் மனிதர்களையும் அவர்களின் வாழ்க்கைச் சலனங்களையும் நாம் இந்த நாவலில் காண்கிறோம்.

மதம் பற்றிய மூடநம்பிக்கைககள் மனிதர்கள் மீது கவிழ்ந்து ஆட்சி செலுத்துவதைக் காண்கிறோம். ஒவ்வொரு மனிதனும், தன் கண்ணுக்குத் தெரியாத தளைகளில் கட்டுண்டு கிடக்கிறான். அடக்கியும் அடக்கப்பட்டும் சுரண்டியும் சுரண்டப்பட்டும், ஏமாற்றியும் ஏமாந்தும், நோவித்தும் நொந்தும் தன் வாழ்க்கையை வாழ்ந்து கழிக்கின்றான். இத்தகைய சமூகம் நிலைத்திருக்க முடியாது. அதன் கட்டிறுக்கம் குலைந்து மெல்ல மெல்லச் சிதிலம் அடைந்து, தன் சிதைவுக்குக் காரணமான புதிய வித்துக்களுடன் மூர்க்கமாக மோதி அழிந்து விடுகின்றது. இவ்வாறு ஒரு மூடுண்ட சமூகத்தையும் அதன் சிதைவையும், மீரான் தன் நாவலில் சித்திரமாக்கியுள்ளார். அவ்வகையில் இது இறந்த காலத்தின் கதை மட்டுமல்ல, நிகழ்காலத்தின் கதையும் தான், ஒரு குறிப்பிட்ட சமூகத்தின் கதை மட்டுமல்ல, எல்லோருடைய கதையும் தான். நல்ல நாவல்களுக்குரிய இந்த இரட்டைத் தன்மை மீரானின் நாவலையும் அந்த வரிசையில் சேர்த்து விடுகின்றது.

அவரது தாய்மொழி தமிழே எனினும் அவர் முறையாகத் தமிழ் படித்தவரல்ல. அவரது சொந்தக் கிராமம் கேரள எல்லைப் புறத்தில் உள்ள தேங்காய்ப்பட்டினம் என்பதாகும். பள்ளியிலும் கல்லூரியிலும் இவர் பயின்றது மலையாள மொழியில், இதனால் தமிழைவிட மலையாளத்தில் இவருக்கு அதிகப் புலமை உண்டு. தமிழ் எழுத்துக்களைப் பயன்படுத்தி இவருக்கு வேகமாக எழுத முடியாது. தனது நாவல்களை மலையாள எழுத்திலேயே இவர் முதலில் எழுதுகின்றார். பின்னரே தமிழ் எழுத்துக்கு மாற்றிக் கொள்கிறார். வளமான மலையாள யதார்த்த நாவல் மரபில் இவருக்கு அதிகம் பரிச்சயம் உண்டு. அதன் சாதகமான செல்வாக்கை இவரது நாவல்களிலும் காணமுடிகின்றது. வேறுவகையில் சொல்வதனால் மலையாள யதார்த்த நாவல் மரபை இவர் ஓரளவு வெற்றிக்கரமாக தமிழுக்குக்கொண்டு வந்திருக்கிறார் எனலாம். கிராமத்தில் சுறா

இறகு வாங்கி விற்கும் மஹ்முது, இங்கிலீஸ் பள்ளி ஆசிரியர் மஹ்பூப்பான் ஆகியோரிடம் இத்தகைய திமிறல்களைக் காணமுடிகின்றது. இருந்த போதிலும் மீரானின் நாவலில் அமைப்பும், பண்பாடும், மொழியும் இரத்தமும் சதையுமாக வடிவம் பெற்றுள்ளன என்றே கூறவேண்டும். முக்கியப் பாத்திரங்கள் எல்லாரும் வடக்கு வீட்டு அகமதுக்கண்ணு, முதலாளி மோதினார், அரசனார் லெப்பை, செய்யிதீனா, முகமது முஸ்தபா, இம்பிச்சி கோமாதங்கள், நூகு பாத்திமா ஆயிசா. உண்மை மனிதர்களாக இயல்பாக இருக்கின்றார்கள். இது இந்த நாவலின் வெற்றிக்கு அடிப்படையாகும்.

**மீரானின் படைப்புகளில் நோக்கும் பின்புலமும்**

19 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து தமிழ் இலக்கியத்தின் பரப்பிலும் வடிவத்திலும் பல்வேறு மாற்றங்கள் ஏற்பட்டன. அச்சுப்பொறி இயந்திரம் உபயோகத்திற்கு வந்ததும், ஆங்கில மொழியின் பயன்பாடு செல்வாக்கு, தமிழ்மொழியின் பேச்சு வழக்கிலும், எழுத்து முறையிலும் பல மாற்றங்களைத் தரத்தொடங்கின. முக்கியமாக மக்கள் தொடர்புச் சாதனங்களாகிய பத்திரிகைகள் தொடங்கப்பட்டன. தமிழ் உரைநடை வழக்கில் மிகப்பெரிய மாறுதலைக் கொண்டு வந்தது. இப்பத்திரிக்கைகளின் தோற்றம். கருத்துப் பரிமாற்றத்தை விரிவாக்கியது. அதுமட்டுமன்றி அதுவரை செய்யுள் வடிவில் இயற்றப்பட்டு வந்த தமிழ் இலக்கிய வசனத்தில் பெயர்த்து எழுதப்படவும் உதவின. அந்த வகையில் தமிழில் புதுமையாக வளர்ந்த இரு வடிவங்கள் கதையும் கட்டுரையும் ஆகும். கதை வகைகளில் நாவலும் சிறுகதையும், கடந்த ஒரு நூறு ஆண்டுகளுக்கு மேலாகச் செழித்து வளர்ந்து, இன்றைய நிலையில் உலகத்துப் பல்வேறு மொழிகளில் வளர்ந்திருக்கும் இவ்விரு கிரந்த வகைகளுக்கு இணையாக மதிக்கப்படுவது பெருமை தரும் செய்தியாகும். அந்த வளர்ச்சியின் வரலாற்றை ஆய்வதே தலையாய நோக்கமாகும்.

மேலைநாட்டில் நாவல் இலக்கியம் தோன்றி நூறு ஆண்டுகள் சென்ற பின்னர்தான் அங்கே சிறுகதை இலக்கிய வடிவம் பிறந்தது. தமிழ் மொழியில் நாவல் பிறந்தது. ஆங்கில நாவல் தோன்றி நூறு ஆண்டுகள் கழித்துத்தான் தமிழில் நாவல் தோன்றி ஐம்பது ஆண்டுகள் கழித்தே சிறுகதை ஒரு தனியான இலக்கிய வடிவம் என்ற உணர்வுடன் அங்கீகரிக்கப்பட்டது. பிறநாட்டு மொழிகளில்

நாவலும் பெரும் வளர்ச்சி அடைந்தது போல, தமிழிலும் இந்த இருவகை இலக்கிய வடிவங்கள் பெருகியதற்குத் தமிழ் எழுத்தாளர்கள் பங்கு இன்றியமையாதது ஆகும்.

கடந்த நூற்றாண்டின் மத்தியிலேயே ரஷ்யா, பிரான்ஸ், அமெரிக்கா ஆகிய மூன்று நாடுகளிலும் சிறுகதைக்கு இலக்கிய மதிப்பு ஏற்பட்டிருந்தது. அதிலும் அமெரிக்காவில்தான் சிறுகதை ஒரு தனிவடிவம் என்ற கொள்கை பிறந்து, அதற்குத் தனி இலக்கணம் வகுக்கப்படலாம் என்ற உணர்வு, முதலில் ஏற்பட்டது. அமெரிக்க எழுத்தாளரான நாதானியல் ஹாதோன் (Nathanial Hawthorn) என்ற ஆசிரியர் தாம் அவ்வப்போது எழுதிய சிறுகதைகளைத் திரட்டி திரும்பச் சொன்ன கதைகள் (Twice Told Tales) என்ற தலைப்புடன் ஒரு தொகுப்பாக வெளியிட்டார். மற்றொரு சிறுகதை ஆசிரியரான எட்கார் ஆலன்போ (Edgar Allanpoe) என்பவர், இந்தக் கதைத் தொகுதியை கிரஹாம்ஸ் மேகஸின் (Grahams Magazine) என்ற சஞ்சிகையில் விமர்சனம் செய்த போது அவர் எடுத்துக்கொண்ட ஆய்வு நெறியை, சிறுகதை பற்றிய இலக்கியக் கொள்கையாக இலக்கிய உலகம் ஏற்றுக் கொண்டது. எட்கர் ஆலன்போ கருத்தையும் அவருக்குப்பின் வந்த பிராண்டர் மாத்தியூஸ் (Brander Mathews) என்ற மற்றொரு திறனாய்வாளர் வகுத்தளித்த இலக்கணத்தையும் சிறுகதை என்ற இலக்கிய வடிவத்துக்கு ஆதாரமாகக் கொள்வது இலக்கிய ஆராய்ச்சியாளரின் வழக்கமாகிவிட்டது.

சிறுகதை என்பது அரைமணியிலிருந்து ஒரு மணி அல்லது இரண்டு மணி நேரத்திற்குள் ஒரே மூச்சில் படித்து முடிக்கக் கூடியதாயிருக்க வேண்டும். அது தன்னளவில் முழுமை பெற்றதாயிருக்க வேண்டும். அது தரும் விளைவு ஒரு தனி மெய்ப்பாடாயிருக்க வேண்டும். கதையைப் படித்து முடிப்பதற்குள் புறத்தேயிருந்து எவ்விதக் குறுக்கீடுகளும் பாதிக்காமல் வாசகனின் புலன் முழுவதும் கதாசிரியனின் ஆதிக்கத்தில் கட்டுப்பட்டதாயிருக்க வேண்டும்.

ஆலன்போ வகுத்தளித்த இந்த இலக்கியக் கொள்கையில் நாம் இரண்டு அம்சங்களை முக்கியமாகக் காணலாம். சிறுகதை ஒரே மூச்சில் படித்து முடிக்கக் கூடியதாக இருக்க வேண்டும் என்பது ஒன்று, மற்றது கதையின் சம்பவக்

*கோவையில் ஒரு முழுமை தரும் பண்பு இருக்க வேண்டும் என்பது இந்த இரு அம்சங்களையும் ஆலன்போ வரையறுத்தார். பிறகு ஏறக்குறைய அறுபது ஆண்டுகள் கழித்து 1901இல் பிரான்ஸ்டர் மாத்தியூஸ் தம்முடைய அனுபவத்தில் கண்ட கருத்தை, சிறுகதை என்பது ஒரேயொரு பாத்திரத்தின் நடவடிக்கைகளைப் பற்றியோ, ஒரு தனிச் சம்பவத்தைப் பற்றியோ அல்லது ஒரு தனி உணர்ச்சி தரும் விளைவையோ எடுத்துக் கூறும் வடிவம் என்றார்.*

*எட்கார் ஆலன்போவுக்குப் பிறகு சிறுகதையின் இலக்கணத்தைப் பற்றி மிகத் தெளிவாகவும் ஆழமாகவும் சிந்தித்து ஆராய்ந்தவர்களில் முதன்மையாகக் கருதப்பட வேண்டியவர் பிரான்டர் மாத்தியூஸ். 1901இல் இவர் எழுதிய சிறுகதையின் தத்துவம்* (Philosophy of the short story) *என்ற நூலில் சிறுகதைக்கும், நெடுங்கதையாகிய நாவலுக்குமுள்ள பேதத்தை விளக்கி சிறுகதையின் இலக்கணத்தைத் தெளிவாக்க முயன்றார். நாவலுக்கும் சிறுகதைக்குமுள்ள வேறுபாடு மெய்ப்பாட்டொருமை என்ற உணர்வு நிலையைப் பொறுத்தது என்கிறார்.*

**மரபும், மாற்றங்களும்**

*காலம் காலமாகக் கதை சொல்வதும் கதைகேட்பதும், எல்லாத் தேசங்களிலும் எல்லா மக்களிடையேயும் வாய்மொழி மரபாக இருந்து வந்திருக்கிறது என்பது யாவரும் அறிந்த உண்மைதான். நாகரிகம் தோன்றுவதற்கு முன்பே மக்கள் இனக்குழுக்களாக இயங்கி வந்தபோது, ஓய்வு நேரங்களில் சக மனிதர்களுடன் தொடர்பு கொள்வதற்கும் குடும்ப உறவினர்களுடன் அளவளாவுவதற்கும் ஆதிமனிதன் புதிய சாதனமொன்றைக் கையாள வேண்டியிருந்தது. அந்த நேரத்தில்தான் கதை சொல்லும் மரபு உதயமாயிற்று.*

*தன்னுடைய கற்பனையின் வளத்தாலும் அனுபவத்தின் பயனாலும் தான் கண்டதையும், கேட்டதையும் விரித்துச் சொல்லி கேட்போரின் பொழுது போக்குக்கு வழி செய்தான். இவ்வகையில் புனைந்துரைக்கும் பண்பு கொண்ட கற்பனையின் அடிப்படையிலான கதைச்சொல்லும் திறன் வளர்ச்சியடைந்தன எனலாம்.*

*கதைகள் ஆதிகாலத்தே உண்டானது என்பதும், அவை ஒரு ஒருங்கான இலக்கணம் அமையாது மாந்தர்க்கும் இன்பமளிக்கும் எல்லா விஷயங்களையும் தன்பாலணிந்து கவினுற விளங்கின என்பதும் நாள் முழுவதும் உழைத்து ஓய்ந்த மாந்தரால் மாலையில் அல்லது முன்னிரவில் சிறிது காலப்போக்குக்காகச் சாற்றப்பட்டவையாக, அச்சிறுகாலத்தே முடிய வேண்டியிருத்தலால், உருவிற் சிறியவை என்பதுமே தாம் கூறலாம்.*

**மேலைநாட்டு வழிக்காட்டிகள்**

*சிறுகதை வடிவ உணர்வைக் கொண்டு திறம்படக் கதை புனைந்தவர்களை ரஷ்யா, பிரான்ஸ் அமெரிக்கா ஆகிய நாடுகளில்தான் சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில் அதிகமாகக் காணக்கூடியதாயிருந்தது.*

*ரஷ்யாவில் செக்கோவ்* (Chekhov), *துரக்கனெவ்* (Turgenev), *கொகொல்* (Gogol) *ஆகியவர்களின் பெயர்கள் பிரசித்தி பெற்றிருந்தன. இவர்களில் கொகொல் என்பவரின் பெயர்தான் சிறுகதையின் தந்தை என்ற மதிப்பைப் பெற்றிருந்தது. அவர் எழுதிய மேலங்கி* (Overcoat) *என்ற கதையை முன்மாதிரியாகக் கொண்டுதான் தாங்களும் சிறுகதை படைத்து முன்னுக்கு வந்தார்கள் என்ற கருத்தில் கொகொலின் மேலங்கியில் நுழைந்துதான் நாங்கள் எல்லோரும் வந்தோம் என்று ஏகலைவ நன்றி பாராட்டுகிறார்.*

*மற்றெல்லா நாடுகளையும்விட அமெரிக்காவில்தான் சிறுகதை மிக அபிமான இலக்கிய வடிவமாக அன்றும், இன்றும் ஓர் இடத்தைப் பிடித்துக் கொண்டிருக்கிறது. முதன் முதலில் தாமேதான் சிறுகதை இலக்கியத்துக்கு ஓர் அந்தஸ்தைக் கொடுத்து நிலைப்பெறச் செய்தவர்கள் என்றும், உலகத்திலே வேறு எந்த நாட்டையும் விட தமது நாட்டிலேயே சிறுகதை நாவலைவிட அதிக செல்வாக்குள்ளது என்றும் அமெரிக்கர்கள் பெருமையோடு சொல்லிக் கொள்கிறார்கள்.*

*மற்ற எல்லா மொழி பேசுபவர்களைக் காட்டிலும் அமெரிக்கர்கள்தான் சிறுகதைக்கு ஒரு முழுமையான வடிவம் கொடுப்பதில் வெற்றியடைந்தார்கள்*

என்று சொல்வதில் சந்தேகமில்லை. அமெரிக்க மக்களிடையே வாழ்க்கையில் நிலவும் வேகமும் பொறுமையின்மையும் காரணமாக இந்த வடிவம் அமெரிக்க இலக்கிய உணர்வுக்கு ஏற்புடையதாயிருந்தது என்று வில்லியம் டீன்ஹவெல்ஸ் (William Dean Howells) என்ற விமர்சகர் மிகத் தெளிவாகச் சொல்கிறார்.

அமெரிக்காவிலும், ரஷ்யாவிலும், பிரான்சிலும் சிறப்பாக மதிக்கப் பெற்ற சிறுகதை, ஆங்கிலமொழியின் தாயகமாகிய இங்கிலாந்தில் அதிக செல்வாக்குப் பெறவில்லை.

**தற்கால வளர்ச்சிப்பாதை**

வ.வே.சு.ஐயரும் மாதவய்யாவும் 1925இல் மறைந்தனர். தமிழ்ச்சிறுகதை வரலாற்றைப் பற்றி சிலர் வ.வே.சு.ஐயருக்குப் பிறகு மணிக்கொடி மூலம் பெயர் பெற்ற புதுமைப்பித்தன் முதலியோரை மட்டுமே கணக்கில் எடுத்துக்கொண்டு இடைப்பட்ட பத்தாண்டு காலத்தில் சிறுகதைப் பற்றி குறிப்பிடும் படியாக எதுவும் வெளியானதாகச் சொல்வதற்கில்லை என்றும், இச்சிறு இடைவெளியில் ஒரு தேக்க நிலையே தெரிந்தது என்றும் எழுதியிருப்பதைப் பார்க்கலாம்.

சிறுகதை இலக்கிய உருவத்துக்கு வ.வே.சு.ஐயர் சில சின்னங்களைக் காண்பித்தார் என்பதையும், மணிக்கொடி எழுத்தாளர்கள், பிச்சமூர்த்தி, கு.ப.ரா., புதுமைப்பித்தன் போன்றவர்கள் மேனாட்டு இலக்கிய ரீதியில் அந்தச் சிறுகதை வடிவத்தைச் செம்மைப்படுத்தினார்கள் என்பதையும் அறியமுடிகிறது.

இந்த நூற்றாண்டின் முப்பதுகளின் ஆரம்ப நாள்களில் ‘ஆனந்த போதினி’ அமிர்தகுண போதினி, ஆனந்த விகடன், பிரசண்ட விகடன் போன்ற பத்திரிகைகளின் செய்திகள், கட்டுரைகள், இலக்கிய விளக்கங்கள் முதலிய அம்சங்களுடன் அவ்வப்போது சிறுகதைகளும் வந்து கொண்டிருந்தன.

தமிழ்ப் பத்திரிகைகளின் பெருக்கத்தையும் அவற்றில் வெளிவந்து கொண்டிருந்த பல்வேறு வகையான பொருளடக்கத்தையும் கவனித்த சில நண்பர்கள் அந்தப் பத்திரிகைகளைவிட வேறான வடிவத்திலும்

பொருளடக்கத்திலும் சில படைப்புகளை வெளியிட விழைந்தனர். இலக்கிய வகையில் அன்று ஆதிக்கம் செலுத்திய சிறுகதை வாசகர்களை மட்டுமன்றி எழுத்தில் ஈடுபட்ட மற்ற அறிஞர்களையும் கவர்ந்தது என்பதை சாதாரணமாகக் கதாசிரியர் என்று உணரப்படாத இலக்கியவாதிகள் கூட இந்தச் சோதனையில் ஈடுபட்டிருந்தார்கள் என்பதிலிருந்து அறியலாம்.

பேராசிரியர்கள், வக்கில்கள், நீதிபதிகள், அரசியல் தலைவர்கள் என்று பலரும் பத்திரிகைகளின் வேண்டுகோளுக்கு இசைந்து கதைகள் புனைந்தார்கள். அன்று தோன்றிய இலக்கிய மறுமலர்ச்சிக்கு ஒரு சிறந்த களமாக விளங்கிய மணிக்கொடி பத்திரிகை குறிப்பிடத்தக்கதாகும்.

இப்புதிய சூழ்நிலையில் பத்திரிகைகளின் பெருக்கமும், வாசகர்களின் பெருக்கமும் ஏற்பட்டபோது எழுத்தாளர்களும் பெருகத் தொடங்கினர். இதுவரை கதை எழுதியவர்கள் எல்லாருமே தமது எழுத்துப் பத்திரிகைகளில் பார்த்துவிட வேண்டும் என்ற ஆசையில்தான் எழுதினார்கள். ஆனால் சிறந்த எழுத்தாளர்களைத் தேடுவதில் பத்திரிகைகள் முயன்றன. இந்த முயற்சியில் சிறுகதைக்கானப் போட்டிகளைப் பத்திரிகைகள் ஏற்படுத்தின என்பது ஒரு முக்கியச் செய்தி என்று சொல்லவேண்டும்.

இக்காலத்தில் சற்று அனுசிதம் என்று சிலர் நினைக்கக்கூடிய விஷயத்தைப் பற்றியதாயிருந்தாலும் இச்சிறுகதை வருங்காலத்தில் தமிழ் நூல்களில் முன்னணியில் நின்று விளங்கும் என்பதும் அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் கூட இம்மாதிரிக் கதை எழுதக் கூடியவர்கள் வெகு சிலரே என்ற கருத்தும் பேசப்பட்டன.

**சாதனையும், சோதனையும்**

தமிழ்ச் சிறுகதைகளின் வடிவ உணர்வு வளர்ச்சிக்குக் களம் அமைத்துக் கொடுத்து புதிய இலக்கிய மதம் தோன்றக் காரணமாயிருந்த ‘மணிக்கொடி’ சஞ்சிகை முதலில் ஒரு செய்திப் பத்திரிகையாகத்தான் ஆரம்பித்தது.

*மகாத்மா காந்தியடிகள் தேச விடுதலை இயக்கத்தை ஆரம்பித்த பின்னர், முக்கியமாக அவர் முன்னின்று நடத்திய உப்புச் சத்தியாக்கிரகத்துக்குப் பிறகு நாட்டிலே அரசியல், சமூகம், மொழி ஆகிய எல்லாத் துறைகளிலும் மக்களுடைய கருத்துப் பரிமாற்றமும் விழிப்பும் ஏற்பட வேண்டும் என்ற ஆவல் சில அறிவாளிகளிடையே உதயமானது. தமிழ்த் தென்றல் திரு.வி.கல்யாணசுந்தரனார் தான் இதைப் பற்றி முதலிலேயே சிந்தித்துத் தமிழ்ப் பத்திரிகைத் துறையில் ஒரு புதுமையைப் புகுத்தினார். எளிய தமிழில் மக்கள் உள்ளங்களைக் கவரும் நடையில் செய்திகளைத் தொகுப்பதிலும், அமைப்பதிலும் தாம் நடத்திய தேசபக்தன் (1917-1920) என்ற நாளிதழில் ஒரு புதிய முறையைக் கையாண்டார்.*

**தற்காலச் சிறுகதை, நாவல் - நோக்கும் போக்கும்**

*சிறுகதை நாவல் எழுதுபவர்களின் எழுத்து எடுபடாததற்கு மூன்று காரணங்கள் இருக்கின்றன. ஒன்று நடை நன்றாயில்லாமலிருக்கலாம். இரண்டு கதை சுவாரஸ்யமில்லாமலிருக்கலாம். மூன்று தவறான பத்திரிகைக்கு அனுப்புவதால் ஏற்படலாம். இது ஒரு காலநிலை, பின்பு தமிழில் சிறுகதைக்கென்று தனியாக பத்திரிகை ஏதும் இல்லை. ஆனால் இன்று தமிழ்நாட்டில் பிறநாட்டவரும் கண்டு வணங்கும் படியாகக் கதைகள் எழுதக் கூடியவர்கள் பலர் இருக்கிறார்கள். கலாரசனையும், கதாருசியும் கலந்து மனவெழுச்சியை உண்டாக்கக்கூடிய பல கதைகள் பிரசுரிக்கப்படாமலே இருந்து விடுகின்றன. கிட்டத்தட்ட நான்கு ஆண்டுகாலம் தொடர்ந்து நடந்த மணிக்கொடிதான் தமிழ்ச் சிறுகதை இலக்கியத்தின் பெருமையை நாட்டி அதன் வரலாற்றில் சாகாவரம் பெற்று விட்டது.*

*சிறுகதை வாழ்க்கையின் சாளரம் என்றால், நாவல் வாழ்க்கையப் பிரதிபலிக்கும் கண்ணாடி எனலாம். வாழ்க்கையின் சிக்கல்களை, உலாவும் பாத்திரங்களான மனிதக்கூட்டத்தின் சலனத்தில் அவற்றின் குணத்தன்மையுடன் படைப்பது தான் நாவல். சிறுகதை வாழ்க்கையின் ஒரு பகுதியை, மற்றவற்றின் கலப்பை மறந்து ஏன் விட்டுவிட்டு கவனிக்கிறது.*

*நாவல் அல்லது சிறுகதையில் ஒரு கதையை எடுத்து அதன் கட்டுக்கோப்பைப் பிரித்துப் பார்த்தால் அதில் ஆரம்பரம், மத்திய சம்பவம் அல்லது உச்சம், வளர்ச்சி அல்லது வீழ்ச்சி என்ற மூன்று பகுதிகள் உண்டு.*

**தோப்பில் முகமது மீரானின் கதைகள்**

*வறுமை நிறைந்த வாழ்க்கையின் பல இன்னல்களை அனுபவிக்கும் ஏழை மக்களின் துயரங்களைப் புதுமைப்பித்தன் பல கோணங்களில் நின்று எடுத்துக்காட்டினார். இத்தகைய பதிவுகள் சிறுகதைக் களங்கள், கதாப்பாத்திரங்கள் வழி அறியமுடிகிறது.*

*பொருளாதார நிலை வசதியின்மையை எதிர்த்துச் சமாளிக்க வேண்டிய நிர்ப்பந்தங்களால் ஏற்படும் குடும்பச் சூழ்நிலையை மிக நுட்பமாகச் சித்தரிப்பதும், அவற்றை எதார்த்த நிலையுடன் எடுத்துரைக்கும் பாங்கும் இவர் கையாளுகின்ற புதிய நோக்காகவும், உத்தியாகவும் கருதமுடிகிறது.*

*தனிமனித வாழ்க்கையின் மற்ற அம்சங்களையே அகதிமாகச் சித்தரித்துள்ளார். இந்த நிலையில் சமகாலச் சமுதாய உணர்வைத் தன்னுடைய படைப்புகளில் கையாண்டுள்ள திறத்தினைக் காணலாம். இலக்கியத்தில் கலையம்சத்தை விட சமுதாய உணர்வுதான் மேலோங்கின என்பதை இவருடைய படைப்பாக்கங்கள் எடுத்துக்காட்டுகின்றன. சாதி வேற்றுமை, பொருளாதார ஏற்றத்தாழ்வுகள், ஏழ்மைநிலை அதற்கான காரணங்கள் போன்றவைகளைக் காணமுடிகிறது.*

*சமுதாய உணர்வு, சமுதாயப் பொறுப்பு, சிக்கல்கள், தீர்வுகள், ஏழ்மை நிலைக்கான காரணங்கள் போன்றவைகளை முன் வைக்கிறார். உத்தி, உள்ளடக்கம், நடை ஆகிய கூறுகள் மூலம் அணுகும் திறன்களை இவருடைய படைப்புகளின்வழிக் காணமுடிகிறது. சமுதாய உணர்வு கதைக்களங்களில் மேலோங்கி நிற்கிறது. அன்றாட வாழ்க்கையின் பல நிலைகளில் நிகழும் சம்பவங்களின் ஒருமை உணர்வுகளை தன்னுடைய அணுகுமுறைகளில் பதிவு செய்துள்ள பாங்கினை அறியலாம்.*

**புதிய கொள்கைகள்**

*சிறுகதை இலக்கியத்தில் கலை கலைக்காகவே என்னும் சித்தாந்தம் (முப்பதுகளில் மணிக்கொடி நூல்களிலிருந்து வளர்ந்தது) அர்த்தமற்றது, சமுதாயமில்லாமல் மனிதனில்லை, மனித உணர்ச்சிகளைச் சமுதாயம் எவ்வாறு பாதிக்கிறது, மனிதனுடைய வளர்ச்சிக்கும், வீழ்ச்சிக்கும் சமுதாயம் எத்தகைய பொறுப்பு வகிக்கிறது என்ற அடிப்படையில் படைப்பு இலக்கியத்தை அணுக வேண்டும் என்னும் ஒரு போக்குத் தோன்றியது. இத்தகையப் போக்கு அவசியமானது. இதுதான் முற்போக்கு இதைப் பின்பற்றும் இலக்கியம்தான் சமுதாய வாழ்வில் நிலைக்கும் என்ற இந்தக் கருத்தை முகமது மீரான் முதலானோர் ஏற்றுக்கொண்டனர்.*

*சமுதாயத்தின் பல கூறுகள், வாழ்க்கையின் பல நிலைகள், அடிமனத்தின் சொல் உணர்வுகள் இமையத்தின் படைப்புகளில் பரிணமிக்கின்றன. சிறுகதையில் வடிவத்துக்கு உரம் கொடுத்த புதுமைப்பித்தன், கு.ப.ரா., பிச்சமூர்த்தி போன்ற முன்னோடிகள் வகுத்த பாதையில் மிகச் செறிவாக நடைபோடுவது தெரிகிறது.*

*காலத்தின் துரித நடையுடன் ஓடிஓடி நடக்க வேண்டிய நிர்ப்பந்தத்தின் இலக்கியச் சிற்றேடுகள் தங்கள் பாதை புரண்டவாறு இழுபட்டுப்போகின்றன. சிறுகதைகள் ஒரு தலைமுறையின் தரிசனங்கள், வெளிப்பாடுகள், கோபங்கள், புழுக்கங்கள், முறுவல்கள், முணுமுணுப்புகள், தன்னுணர்வுகள் இவைகள் இந்தத் தலைமுறையின் நிஜங்களாகச் சுட்டப்படுகின்றன. ஏறக்குயை இதே நடையில்தான் கதைகளும் எழுதப்பட்டுள்ளன. சிறுகதைகளில் தாம் எடுத்துக்கொண்ட கருப்பொருளை ஒருவித உறுதியுடன் கையாள்வதில் புதிய தலைமுறையைச் சேர்ந்த மீரான் சமுதாயத்தில் ஏற்படும் சிக்கல்கள், தீர்வுகளை எடுத்துக்காட்டுகிறார் என்பது குறிப்பிடத்தக்கது. தலைமுறை இடைவெளியின் துன்பம், புதிய சூழ்நிலையின் பொருத்தமற்ற தன்மைக் காரணமாக வயது முதிர்ந்த காலத்தில் குடும்பத்திலுள்ள பெரியவர்கள் தவிக்கும் நிலைமையைக் காணமுடிகிறது. சிறுகதை, புதினம் இரண்டு படைப்பாக்கங்களிலும் இதனைக் காணமுடிகிறது.*

**கருப்பொருள் உத்திமுறைகள்**

*சிறுகதைகளில் பல எழுத்தாளர்கள் கருப்பொருளிலும் சொல்லும் உத்தியிலும், அவ்வப்போது சில சாதனைகளைச் செய்திருப்பதைக் காணமுடிகிறது. கதைமாந்தர்கள் கூற்றை வேறுபடுத்தும் விதங்கள், வாக்கியத் தொடர்ச்சிகள் போன்றவற்றில் புதிய உத்திகள் பொதிந்துள்ளன. சமுதாயப் பிரச்சினைகள், பலவிதநடை, பலவித உத்தி, பயன்பாடுகள் வழி வாசகர்களைக் கவரும் நுட்பங்களை அறியமுடிகிறது. சிறுகதையின் வடிவ உணர்வில் நமது எழுத்தாளர்கள் முன்னேற்றம் அடைந்திருக்கிறார்கள் என்பதும் தெரிகிறது. மற்றது வாசகர்களின் இலக்கிய ரசனையும், பகுத்துணரும் பண்பும் வளர்ச்சியடைந்திருக்கிறது என்பதையும் அறியமுடிகிறது.*

*சிறுகதையின் பரிணாம வளர்ச்சி வாசகர்களின் பரிணாம வளர்ச்சியுடன் நெருங்கியத் தொடர்பு கொண்டது என்கிறார் ஆங்கில விமர்சகர் எச்.ஈ.பேட்ஸ். அதற்குக்காரணம், இன்றைய தொடர்புச் சாதனங்கள் மூலம் வாசகர்களின் கல்விமுறை, பயண வசதிகள், சமுதாய உறவுகள் நடை, உடை, பாவனைகள், எல்லாம் அவர்களுக்குப் பரந்த அனுபவத்தைக் கொடுத்திருப்பதால் வாசகர்களுக்கும் பகுத்தாராய வசதிகள் ஏற்பட்டன.*

*சிறுகதை இலக்கியச் சிந்தனையின் முயற்சியில் புதிய தலைமுறை சிறுகதை எழுத்தாளர்களில் ஏற்கெனவே குறிப்பிட்டவர்களைத் தவிர மற்றும் பலரை இப்போது இனங்காணக் கூடியதாக இருக்கிறது.*

*வண்ணதாசன், வண்ண நிலவன், ஐராவதம், ஆதவன் ராஜ நாராயணன், கொ.மா.கோதண்டம், பிரபஞ்சன், வீரவேலுசாமி, நாஞ்சில்நாடன் இன்னும் எத்தனையோ முன்னணி எழுத்தாளர்களின் பாரம்பரியத்தில் வந்தவர் மீரான் ஆவார். அவ்வகையில் இலக்கியச் சிந்தனையின் பட்டியலில் இடம்பெற்றிருக்கின்றார் எனலாம். சிறுகதை எழுதுவது என்பது அன்றைய இலக்கியப் பயிற்சி என்பதை நன்றாக உணர்ந்த இந்தப் பிரமுகர்கள் அந்த வடிவத்தில் தங்களுக்கு அனுபவம் இல்லாத போதும் அத்தகையப் படைப்பில் ஈடுபட்டிருப்பது. இவர்கள் எழுதிய கதைகளில் இலக்கியத் தரமும்,*

வடிவச்சிறப்பும் காணப்படுவதையும், உற்சாகத்தையும், ஈடுபாட்டையும் அறியமுடிகின்றது.

மேலும் நாவலாசிரியர்கள் வெவ்வேறு சமூகப் பிரிவுகளைக் கொண்ட மக்களின் வாழ்க்கை முறைகளையும், சம்பிரதாயங்களையும் விளக்கும் கருப்பொருளைக் கொண்ட சிறுகதைகளைப் படைக்கும் உத்தியை மேற்கொண்டனர்.

சமூகப் பிரிவுகளைப் பற்றிய கதைகளில் சமூகம், சாதி, ஏற்றத்தாழ்வு, பொருளதாரச் சிக்கல்கள், அடித்தட்டு மக்களின் வாழ்வியல் போராட்டங்களை எடுத்துச்சொல்லும் பாங்குகள் இவர்களுடைய கதைகளில் சுட்டப்பட்டன. இவர்களுடைய நோக்கும் போதாது என்ற உணர்வையடைந்த இளைஞர்கள் சமுதாயத்தையும் அதைச் சார்ந்த சூழ்நிலையையும் தாண்டி, தனிமனிதனின் பிரச்சினையைக் கதையின் உள்ளடக்கமாகக் கொள்ள முன் வந்தமையும், தனிமனிதன் சமுதாயத்தின் உறுப்பினன் என்றாலும் சமுதாயச் சூழ்நிலை ஒருபுறமிருக்க, அவனுக்கென்று தனிப்பட்ட ஆசைகள், நம்பிக்கைகள் ஏமாற்றங்கள் இவைகளின் விளைவான புதிய நோக்குகள் உண்டென்பதைத் தங்களுடைய படைப்புகளில் எடுத்துக்காட்டியுள்ளது புதிய நோக்காக அமைந்துள்ளது.

கதை சொல்லப்படும் புதிய உத்தி, கதையின் உட்பொருளின் அடியாகப் பெறப்பட்ட வாக்கிய அமைப்பு, இன்றைய சிறுகதையின் அமைப்பு முன்னைய கதையம்ச அடிப்படையில் வேறுபடவில்லை. கதை சொல்லப்படும் உத்தியில் தான் வேறுபடுகிறது. பரம்பரையாகக் கதை சொல்லும் பழக்கத்தைத் தன்னுள் கொண்டிருக்கும் தமிழ் மரபில், சிறுகதையின் தோற்றம் சம்பிரதாயங்களை எதிர்த்துப் புதிய வழிகள் வகுப்பதற்கும் உதவியிருக்கிறது. இவ்வகையில் ஆரம்பகாலச் சிறுகதை எழுத்தாளர்கள் ஏற்கெனவே கோடிட்டுக் காட்டிய புரட்சி, விடுதலைப் போக்குகளை இன்றைய இளம் தலைமுறையினர் பயனுள்ள முறையில் கிரகித்துக் கொண்டு, தம்முடைய நோக்கிலும், சமுதாயத்தின் போக்கிலும் தனிமனிதனுடைய மன உணர்ச்சிகளைக் கதைகளில் பிரதிபலிப்பதில் முக்கிய இடத்தைப் பெற்றுள்ளனர். இத்தகைய முயற்சியின் விளைவுகள் தான் தோப்பில் முகமதுமீரானின் புதிய பரிணாமங்களுக்கு வழிவகுத்தன.

**மீரானின் படைப்பு நோக்கங்கள்**

இலக்கிய உருவம், உள்ளடக்கம், வெளிப்பாடு ஆகியன இயக்கங்களில் தனித்தனிக் கொள்கைகளைப் பெற்றதோடு அவற்றிற்கேற்ற வரையறைகளையும் கொண்டன. மேலைநாட்டில் தொடங்கிய இவ்விலக்கிய இயக்கங்கள் தமிழ் இலக்கியத்தில் தாக்கத்தை ஏற்படுத்தின. மேலைநாட்டு இலக்கியச் சாயலோடும் இயக்க வரையறையோடும் ஏதாவது ஒருவகையில் இம்மண்ணில் பிறந்த இலக்கியம் தொடர்புடையதாக உள்ளது.

இலக்கிய இயக்கங்கள் ஒன்றிலிருந்து ஒன்றாகக் கிளைத்துப் பல்கிப் பெருகின. ஒன்றைப் பிறிதொன்று அடுத்தூர்ந்தும், மறுதலையாக மாறி நின்றும் கலை இலக்கியம் பற்றியச் சிந்தனைகளை வளர்த்தன. இவ்வாறு தோன்றிய இலக்கிய இயக்கங்களின் கோட்பாடுகளை உள்ளடக்கி மீரானின் சிறுகதைகள், புதினங்கள் நோக்காகவும், போக்காகவும் கொண்டு அமைந்துள்ளன.

1. அழகியல் சிந்தனைப் போக்கு
2. செவ்வியல் மரபுகள்
3. இயற்பண்பியல் முறைகள்
4. நடப்பியல் போக்குகள்
5. வெளிப்பாட்டியல் பயன்பாடுகள்
6. கருத்துப் பதிவு, புனைவியல் பதிவுகள்
7. மீ மெய்ம்மைக் கூறுகள்
8. குறியீட்டியல் பதிவுகள்

மேலைநாடுகளில் 19 ஆம் நூற்றாண்டளவில் தோன்றிய கொள்கையான இது, அழகை முன் வைக்கும் இச்சிந்தனையில் வெறும் காட்சி இன்பமே தலைமையானது. ஓர் இயற்கைக் காட்சியில் தோய்ந்து வேறு புற உணர்வுகளுக்கு ஆட்படாது அழகில் மனதைப் பறிகொடுத்து நிற்கும் மனநிலையை இதில் காணலாம். இத்தகைய போக்குகள் கிராமியச்சூழல் அமைப்புகளில் காணப்படுகின்றன.

பண்டையக் கிரேக்க, உரோமானிய இலக்கியத்தில் உயர்பண்பு, செம்மையான பாங்கு செம்மாந்த கட்டுக்கோப்பு, கலைநயம் ஆகியன அமைந்ததனைச் செவ்வியல் சார்புடைய இலக்கியம் என்பர். இலக்கியத்திற்கு

உரிய பெருந்தகுதியைக் குறித்த இச்சொல் நாளடைவில் பல்வேறு பொருள்களை உணர்த்தத் தொடங்கியது.

அறிவாழம் மிக்கதும் மரபு வழிப்பட்ட இணையற்ற பாங்குடையதுமான பண்புகளைக் கொண்டிருப்பதோடு நிலைப்பேற்றுத் தன்மையும் கொண்ட பழமொழி, புராணச்சான்றுகள், சமயச் சிந்தனைகள், காப்பியம், திருக்குறள், இதிகாசப் பயன்பாடுகளை மீரான் தன்னுடைய மாந்தர்கள் படைப்பாக்கத்தின்வழி எடுத்துக்காட்டுகிறார்.

மரபு வழியாக வரும் படைப்புகளில் மரபு பாதுகாக்கப்படுவதும், மரபு மாறா நிலையில் பெரிய களனில் காட்சி, களன், கதைமொழி, மொழிநடை முதலியவைகளின் பயன்பாடுகளைக் காணமுடிகிறது. முகமது மீரானின் பல சிறுகதைகளில் உலவும் கதைமாந்தர்கள் செவ்வியல் வகையினர் ஆவர்.

இம்மண்ணில் காணும் ஒவ்வொன்றும் இயற்கையின் நியதியாலோ அல்லது விதிக்கப்பட்டவாறோ இயங்குகிறது என்ற கருத்தை அடித்தள நோக்காகக் கொண்டது. இயற்பண்பியல் கொள்கை மீரானின் படைப்புகளில் மனித வாழ்வு இயற்கைச் சக்திகளால் இயக்கப்படுகிறது என்ற சிந்தனை மேலோங்கி நிற்பதை கதைப்போக்குகளில் காணலாம்.

மனிதன் செய்யும் செயல்கள், அவனது எண்ணங்கள் விருப்பு வெறுப்புகள் ஆகியன அவனது உள்ளுணர்வான இயல்பியலில் சாட்டப்படுகின்றன. இயற்கைக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சிகளையும் அற்புத பாவங்களையும் அறிவியலின் விதிமுறையைக் கொண்டு உறுதி செய்ய இயலும் என்பது இக்கோட்பாட்டில் வளர்ந்த நோக்காகும். வாழ்க்கையின் நல்ல பண்புகளைக் காட்டிய இது நாளடைவில் கொச்சையாகவும், மானிட இயல்புகளை வருணித்து எழுதலாம் என்ற போக்கில் அடித்தளமிட்டு பின்னர் பசி, பாலுணர்வு போன்ற தூண்டல்கள் ஏனைய பிற உணர்வுகள் ஆகியவற்றையும் இயற்பண்பியல் கோட்பாடு நாட்டத் தொடங்கின. இத்தகைய கோட்பாடுகளையே மீரானின் கதை உத்திகளில் காணமுடிகிறது.

நடப்பியல் கோட்பாட்டுப் போக்குகளைப் பொருத்தவரை உள்ளதை உள்ளவாறே காட்டும் கோட்பாடு ஆகும். நடைமுறை வாழ்க்கையை இலக்கியத்தில் அப்படியே படைப்பது நடப்பியல் ஆகும்.

நிகழ்வுகளை அசலாகப் பதிவு செய்வதும் காரணகாரியத் தொடர்போடு சுட்டுவதும் மிகச் சாதாரணமானவற்றையும் பொருளாகக் கொள்வதும் தனிமனித வாழ்க்கையை அப்படியே உணர்த்துவதும் இமையத்தின் கதைகளில் காணப்படுகின்றன.

வெளிப்பாட்டியல் பயன்பாடுகளைக் குறிப்பிடும் போது, புறத்தோற்றத்தைப் புலப்படுத்தாமல் உள் மனத்தை வெளிப்படுத்தும் இக்கொள்கை உணர்ச்சிகளைப் பாவனைகளால் வெளிக்காட்டாமல், புறக்கோலங்களால் புதிராக உணர்த்துதல் நேரடியாக உணர்த்தாமல் பொருள்களைத் திரித்துக் காட்டல், தொடர்பற்ற சிந்தனைகளின் வீச்சு ஆகியவற்றின் அடிப்படையில் உள்ளன.

மனத்தில் பதிக்க விரும்பும் காட்சியை அடிப்படையாகக் கொண்டது, ஒரு காட்சி அல்லது பொருள் பற்றிய விளக்கத்தை மனக்கண்ணில் உறைவதாகக் கவிஞனோ, ஓவியனோ காட்டிட இயலும் படிப்பதாலோ, பார்ப்பதாலோமனத்தில் பதிவாகும் இக்கோட்பாடு பிரான்ஸ் நாட்டில் பத்தொன்பதாம் நூற்றாண்டு இறுதியில் தோன்றியது. புறவயமான எண்ணங்களை விடுத்த அறிவு, உணர்ச்சி ஆகியவற்றின் காரணமாக ஏற்படுகின்ற மனப்பதிவுகளை விளக்குவதே கருத்துப் பதிவியலின் அடிப்படைக் கொள்கை, படைப்பாளியோ, ஓவியனோ தன் நுகர்ச்சியினால் அமையும் எண்ணங்களுக்கோ, உணர்ச்சிகளுக்கோ வடிவம் தருவதை இக்கோட்பாட்டில் அடக்கலாம். கவிதையில் காட்டப்படும் புலவரின் தனிப்பட்ட வாழ்க்கை நுகர்ச்சி தன்னுணர்ச்சிப் பாடலாக (Lyric Poetry) வெளிப்படுவதைக் கருத்துப் பதிவியலோடு தொடர்புபடுத்திக் காணலாம்.

சங்ககாலத்திய தன்னுணர்ச்சிப் பாடல்களை இவ்வகைக்குச் சான்றாகச் சுட்டலாம். குறிப்பாக வறுமை குறித்த கதைப்போக்குகளை கருத்துப் பதிவுக்குச் சான்றாகக் கூறலாம்.

*புனைவியல் பதிவுகள் என்பது நடப்பியலுக்கு மாறான இயக்கம் ஆகும். இது கற்பனைக்கு முதலிடம் தருவதாகும். கலை இலக்கிய வடிவங்களில் வாழ்க்கையை உள்ள படியே காட்டாமல் கற்பனையைப் புனைந்து உணர்ச்சி கொள்ள வைப்பதாகும்.*

1. *கற்பனை*
2. *உணர்ச்சி*
3. *தன்னுணர்ச்சிப் புலப்பாடு*
4. *கடந்த காலத்தின்மீது பற்று*
5. *இயற்கை ஈடுபாடு*
6. *இயற்கை இறந்த நிகழ்ச்சிகளில் நம்பிக்கை*
7. *காதல், வீரம்*
8. *தன் முனைப்பு*
9. *சமூக எதிர்ப்பு*
10. *அறிந்துகொள்ள இயலாப்போக்கு*
11. *கற்பனை*
12. *பிற*

*மேற்கண்டவைகள் புனைவியலின் அடையாளமாக மீரானின் சிறுகதைகளில் காணப்படுகின்றன.*

*தமிழ் இலக்கியத்தில் அன்று முதல் இன்று வரை போற்றப்பட்ட பண்பாகப் புனைவியல் விளங்குகிறது. தமிழ்ப் புதினம் தொண்ணூறு விழுக்காடு புனைவியல் பாங்குடையதாக விளங்குவதைக் காணலாம். கல்கி காலம் தொடங்கி இன்று வரை புதினங்கள் மிகுதியும், புனைவியலின் அடிப்படையிலேயே அமைந்துள்ளன. சிற்சில சிறுகதைகளும் இவ்வுத்திமுறைகளைப் பின்பற்றி பல்கிப் பெருகி வருகின்றன.*

*மீமெய்ம்மையியல் கூறுகளைப் பொருத்தவரை, மிகை எதார்த்தம், நடப்பிற்கு ஒவ்வாதது அடிமன இயல்பியல் எனப் பலவகைகளில் அழைக்கப்படுவது இவ்வியக்கமாகும். நனவிலி மனத்தோடு தொடர்புடையது. கலை இலக்கிய மரபுகளை உடைத்து உண்மையின் எதார்த்தங்களைக் கோணலான*

*உருக்குலைவோடு காட்டுவதே மீமெய்ம்மை இயலாகும். கலையின் ஒருவிதமான வக்கிரப் போக்கு என இதனைக் கருதலாம் என்பர்.*

*இக்கோட்பாடு உளவியல் சார்ந்தது. பிராய்டிசு கொள்கையோடு மிக நெருங்கிய தொடர்புடையது. வாழ்க்கைப் போக்கைத் திட்டமிட்டவாறு மிகைப்படுத்திக் காட்டுதலே மீமெய்ம்மை இயலின் பண்பு ஆகும். கட்டுப்பாடற்ற பாலுணர்வை எழுதுவதையும்கூட இக்கோட்பாடு அடிப்படையாகக் கொண்டது.*

1. *இருண்மையான மன வெளிப்பாடு*
2. *கனவின் மருட்கை*
3. *நோயின்கோரம்*
4. *நம்பிக்கை வறட்சி*
5. *வாழ்க்கையில் விரக்தி*
6. *அவலத்தின் அலைக்கழிப்பு*
7. *கோபத்தின் ஆவேசம்*
8. *உணர்வின் சுழற்சி*

*முதலியவற்றைக் கலை இலக்கியங்களில் படைத்துக் காட்டுவதில் இக்கொள்கையினர் செயல்பட்டனர். மிகையான எதார்த்தப் போக்கான மீமெய்ம்மை இயல்பு புதுக்கவிதைகளில் காணப்படுகின்றன. சிறுகதைகளில் மிகத்தெளிவாக, எதார்த்தமாக கதைமாந்தர் புனைவுகளில் கதை நோக்கத்திற்கு ஏற்றவாறு மீமெய்ம்மைப் பதிவுகளைப் பதிவு செய்கிறார்.*

*நிறைவாக ஒரு குறியீட்டைக் கொண்டு நுட்பமாக மறைந்து கிடக்கும் பொருளை அறிவது குறியீட்டியலோடு தொடர்புடையது. அதாவது நேரடியாகப் பொருளைக் கூறாமல் நுட்ப உணர்வால் புரிந்துகொள்ளும் தன்மையே குறியீட்டியலின் நோக்கம் எனலாம்.*

*1885இல் பிரெஞ்சில் தோன்றிய இவ்வியக்கம் பின்னர் ஐரோப்பிய நாடு முழுவதும் பரவியது. வெர்ஸைன், ஸ்டீபன், மலார்மே, ரிம்பார்ட் ஆகியோர் பிரெஞ்சு நாட்டில் இக்கொள்கையை இலக்கியத்தில் புகுத்தினர். அமெரிக்காவில் எட்கர் ஆலன்போ இவ்வியக்கத்தில் பெரிதும் நாட்டம் கொண்டவராகத் திகழ்ந்தார். இத்தகைய பதிவுகளையும் மீரானின் சிறுகதைகள் தலையாய நோக்கமாகக் கொண்டு அமைந்துள்ளது.*

### ஆய்வு எல்லை வரையறை

*தோப்பில் முகமது மீரானின் படைப்புகளை பின்வரும் பகுப்பில் ஆய்வு எல்லையாகக் கொண்டு வரையறை செய்யப்படுகிறது.*

### சிறுகதைத் தொகுதி

1. *வேர்களின் பேச்சு - 2009 (முதல் 75 கதைகள்)*

### புதினங்கள்

1. *ஒரு கடலோர கிராமத்தின் கதை - 1988*
2. *துறைமுகம் - 1991*
3. *கூனன் தோப்பு - 1993*
4. *சாய்வு நாற்காலி - 1997*
5. *அஞ்சு வண்ணன் தெரு - 2016*
6. *குடியேற்றம் - 2017*

*மேற்கண்ட படைப்புக்கள் மட்டும் ஆய்வுக்களங்களாக அணுகப்படுகின்றன.*

### கதைக்களங்கள்

### 1. வேர்களின் பேச்சு (படைப்பாசிரியர்)

*1968 முதல் 2009 வரை பல இதழ்களில் வெளியான தன்னுடைய சிறுகதைகளின் ஒட்டுமொத்தத் தொகுப்பு இது. 1968இல் வெளியான நரகம் பூமியில் என்ற முதல் கதையும் 2009இல் வெளியான தலையில் கண்டு கூடிய பெண் என்ற கதையும் இதில் அடங்கும். மதிநா, பிறை இன்னும் சில இதழ்களில் கிடைக்கவில்லை. எந்த ஆண்டு எந்தெந்த இதழ்களின் வெளியாயின என்பது பற்றிய நினைவும் இல்லை. தொகுப்பாக வெளியிட நேருமென்ற நினைப்பு தனக்கு இருக்காததால் கதைகளைப் பாதுகாத்து வைக்க வேண்டுமென்ற பொறுப்புணர்வு இல்லாமலிருந்தது இதில் இடம்பெற்றுள்ள ஆரம்ப காலக்கதைகள் கிடைக்க சில நண்பர்களின் உதவிகூடத் தேவைப்பட்டதாகவும், அவர்கள் உதவியதையும் சுட்டுகிறார்.*

*தொடக்கக் காலத்தில், அதாவது 1968 முதல் 1980 வரை அவர் எழுதிய கதைகள் பெரும்பாலும் இஸ்லாமிய இதழ்களில் வெளியானவை. அவற்றிற்குச்*

*சில வரையறைகள் உள்ளன. அதற்குள் நின்றுதான் எழுத வேண்டுமென்றிருந்தது. இந்நிலையில் திருக்குர்ஆன் விரிவுரையாளரும் முற்போக்குச் சிந்தனையாளருமான அல்லாமா மௌலவி. எம்.அப்துல் வஹாப் சாகிப் அவர்கள், பேராசிரியர் கா.முகமது ஃபாரூக் இவர்கள் தந்த சின்ன சுதந்திரத்தின் ஓட்டையினூடே நுழைந்து அது நாள் வரை அவ்விதங்களில் வெளிவந்து கொண்டிருந்த கதைத் தளங்களிலிருந்து வேறுபட்ட ஒரு தளத்தைக் கையாண்டியிருப்பதை அறியமுடிகிறது.*

*சமுதாயச் சீர்கேடுகளைப் பற்றித் தொடர்ந்து எழுதி பதில் முனைப்புக் காட்டி இருப்பதும், நோன்புப் பெருநாள் கொண்டாடும் தினம் தொடர்பாக சில ஊர் மக்களிடையே ஏற்படும் குழப்ப நிலைகள் பற்றி "காலண்டர் பாவா" என்ற சிறுகதை எடுத்துக்காட்டுகிறது.*

*சில பள்ளிவாசல் புதைக்குழிகளில் உடல்கள் அடக்கம் செய்வதில் நீடித்து வரும் சிக்கல்கள் விளக்கப்பட்டுள்ளன. தற்போது இந்தியா உட்பட உலக நாடுகளைக் கவலைக்குள்ளாக்கி இருக்கும் பிரச்சினை பருவநிலை மாற்றம் (கோப்பன் ஹேகனில் நடந்த சர்ச்சை தோல்வியைக் கண்டுள்ளது). வளர்ந்த நாடுகள் வெளியேற்றும் கரியமிலவாயு, காடழிப்பு காற்றை மாசுப்படுத்தல், நீராதாரங்களைக் கட்டாந்தரையாக்குதல், வளர்ச்சிப் பணிகள் என்ற சாக்கில் நாட்டு வளங்களைச் சுரண்டி அழிப்பது போன்ற கதைகளையும் கதைக்களங்களையும் காணலாம்.*

*மொத்தத்தில் இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ள பல கதைகள் ஆங்கிலம் உட்பட பல இந்திய மொழிகளில் வெளிவந்தனவாகும்.*

1. *தனிமனிதன்*
2. *குடும்பம்*
3. *உறவுநிலை*
4. *சமூக வாழ்க்கை*
5. *சமயம்*
6. *கல்வி*
7. *பொருளாதாரம்*

8. வாழ்வியல் சிக்கல்கள்
9. போராட்டங்கள்
10. வறுமைநிலை
11. ஏற்றத்தாழ்வுகள்

மேற்கண்டவற்றை இவருடைய படைப்புகள் கதைக்களங்களான கொண்டு விளங்குகின்றன.

**புதினங்கள் - கதைக்களங்கள்**

**ஒரு கடலோர கிராமத்தின் கதை**

இஸ்லாமிய சமூகம் இறுகிப்போன ஒரு சமூகம். அது வெளிக்குத் தெரியாத இருண்ட பகுதிகளைக் கொண்டது எனும் மாயையைத் தமிழில் உடைத்தெரிந்த புதினமாகும்.

கிராமத் தலைவனும் ஊர் முதல் குடியுமான வடக்கு வீட்டு அகமதுக்கண்ணு முதலாளியின் முன் அடங்க மறுக்கிறான். சுறாப்பீலி வியாபாரம் செய்யும் மஹ்மூது, தென் பத்தனைத் தேடி வந்த சித்து வேலைகள் தெரிந்த மாலத்தீவு தங்களையும் அவன் உதாசினம் செய்கிறான். இதை மீறலின் குறியீடாகக் கருதும் வாசக மனம் கூடவே மஹ்முதின் மனைவியையும் மகனையும் நினைத்து வருந்துகிறது. வடக்கு வீட்டு முதலாளியின் இரக்கமற்ற செயல்கள் குறித்து இப்புதினம் எடுத்துச் சொல்கிறது. இவ்வாறு நாவல் விவரித்துச் செல்லும் போதே அதன் அடிநாதமாக, வெற்றுப் பிரதாபம் காரணமாக நசித்துக் கொண்டிருக்கும் முதலாளியைப் பற்றிய பரிதாபமும் குழைந்து செல்கிறது.

இவருடைய புதினங்கள் கோடிட்டுக் காட்டும் அம்சங்கள் கூட வேதியியல் மாற்றங்களுக்கு உள்ளாகி வாசக மனங்களை உலுக்குவது இப்புதினத்தின் மற்றொரு சிறப்பாக அமைகிறது.

**துறைமுகம்**

குமரி மாவட்டத்தில் துறைமுகத்தை ஒட்டிய ஒரு கடற்கரை கிராமத்தில் வாழும், இஸ்லாமிய சமுதாயத்தின் கதை. இஸ்லாமிய சமுதாயத்தின் கதை

எனினும். இன்றைக்கும் எல்லா இடங்களிலும் வாழும் எல்லா சமுதாயத்தினரோடு பொருந்திப் போவதையும் இப்புதினம் சுட்டுகிறது.

உழைப்போர் தம் உயிர் இரத்தத்தை மரக்கச் செய்து அதன் அடித்தரையில்தான் இம்முதலாளித் தனத்தின் நிலைப்பாடுகள் இன்னபிற சிக்கல்களையும் கொண்டு இப்புதினம் சமுதாயச் சூழல்களை எடுத்துரைக்கிறது.

**கூனன் தோப்பு**

ஒரே கடற்கரையில் இருவேறு பகுதிகளில் ஒன்றே போல் வறுமையில் வாடும் இருமதங்களின் மக்களுக்கு இடையே தூவிவிடப்பட்ட வன்மமும் அதன்வழி உருவாகும் வக்கிரங்களும் அழிவுகளும் எல்லாம் முடிந்துவிட்ட போது பொட்டாகத் தோன்றும் மனிதமும், இன்றும் கூனன் தோப்புகள் இருந்து கொண்டிருக்கின்றன. இதே போன்ற கதைகளும் எப்போதும் போல மனிதமும் அடித்தளமாகக் கொண்டு இப்புதினம் அமைந்துள்ளது.

பதினான்கு வயதுடைய ஒரு பெண்ணின் சடலம். முழு நிர்வாணமாக மல்லாந்து கிடக்கிறது. மேல்நோக்கி நிற்கும் சிறுகுசங்களில பற்கள் பதிந்த வடுக்கள். இழுத்துக் கிழித்த ஜம்பர் பாடி. இருபக்கமாக விரிந்த கைகள். தொடையில் காய்ந்து ஒட்டிய இரத்தம். யார், மௌனம் எப்படி அடையாளம் சொல்ல முடியும். எதை அடையாளம் கண்டு சொல்ல முடியும். துறையில் உள்ளதா, மேகரையில் உள்ளதா என்னும் சமூக அவலங்களைக் கதைக்களங்களாக எடுத்துக்காட்டுகின்றது.

**சாய்வு நாற்காலி**

‘தென்பத்தன்’ கிராமத்தின் இரண்டரை நூற்றாண்டுக்கால வரலாற்று விளிம்பைத் தொட்டுச் சுழல்கிறது இப்புதினம். தென்பத்தன் எனும் பெயரில் ஒரு கிராமம் இன்று எங்குமே இருப்பதாகத் தெரியவில்லை. மேற்குக் கடலோரப் பகுதியிலுள்ள ஒரு கிராமத்தை அராபிய வணிகர்கள் ‘தென்பத்தன்’ என்று அழைத்ததாகப் பழங்கால வரலாற்றுக் குறிப்பு ஒன்று சுட்டுகிறது. தென்கரை, தென்பட்டினம் என்றெல்லாம் இதுபொருள் தரும்.

*‘தென்பத்தன்’ என்ற பெயர் படைப்பாசிரியருக்குப் பிடித்து அதனால், ஒரு கிராமத்தை உருவாக்கி அதற்குத் ‘தென்பத்தன’ என்று பெயர் சுட்டியுள்ளார். கொஞ்சம் மனிதர்களைப் படைத்து அதில் அவர்களை வாழ வைத்துள்ளார். அதில் இறந்தவர்களுடைய, இருப்பவர்களுடைய வாழ்க்கையை ஒரு நிகழ்வுக் கோவையாகக் கொண்டுள்ளது.*

*தென்பத்தன் சனங்களின் வாழ்க்கையைத் திருவிதாங்கூர் வரலாற்றிலிருந்து பிரித்துப் பேச முடியாது என்பதால் சில வரலாற்று நிகழ்ச்சிகள் இதில் நரம்போடுகிறது. சொல்லப்பட்டவற்றில் கற்பனைகள் பல கலந்திருப்பதால் எக்காரணத்தாலும் வரலாறு பேசுபவர்களுக்கு இது சான்றாதாரமாகாது.*

*இந்திரிய சுகங்களுக்கு அடிமையான நிலவுடைமைச் சமூகத்தின் கடைசிக் கண்ணியான முஸ்தபாக் கண்ணிடம் சக்கோலி திண்பதற்காகவும் குமரிப் பெண்ணைக் கூடுவதற்காகவும் பெயர்த்து விற்ற கதவுகளையும் கட்டளைகளையும் தவிர எஞ்சியிருப்பது அரபு பிரம்பும் சாய்வு நாற்காலியும்,*

*மருமக்கள் தாய் மரபுரிமையில் நாடாளும் மார்த்தாண்ட வர்மா மகாராஜா, மக்கள் வழி மரபுரிமைக்காகப் போராடும் எட்டு வீட்டுப் பிள்ளையார், நிலவுடைமையாளர்களாக மாறும் அரசனின் அடியாட்கள், சாய்வு நாற்காலியில் சாய்ந்து காலாட்டிய படியே பெண்கள் உட்பட தின்று முடிக்கும் நிலவுடைமை வம்சா வழியினர் பெண்களை அடித்து நெறிப்படுத்தும் அதபு பிரம்பு எனக் குடும்ப, சமூக வரலாற்று நிகழ்வுகளை மக்களின் மொழியில் விவரிக்கும் புதினமாகத் திகழ்கிறது.*

*தமிழ் இலக்கிய உலகைத் திரும்பிப் பார்க்க வைத்த தோப்பில் முஹம்மது மீரானின் இந்த நாவல், 1997 ஆம் ஆண்டுக்கான, சாகித்திய அகாதமி விருதினைப் பெற்றது குறிப்பிடத்தக்கது.*

**அஞ்சு வண்ணம் தெரு**

*நாஞ்சில் நாட்டின் ஒருசிறு தெருவில் தறிநெசவு செய்யும் ஏழை முஸ்லீம்களின் கள்ளங்கபடமற்ற பாமர வாழ்வை, எளிமையும் தூய்மையும் நிறைந்த அவர்களின் மொழியிலேயே வெளிப்படுத்துகிறது.*

தொன்மத்தில் வேர்கொண்ட நடைமுறை நிகழ்வுகளின் நிறைகுறைகள் காலத்தில் முன்னும் பின்னுமான பார்வையில் தெரியும் அப்பட்டம் இவற்றோடு சமகாலக் கொள்கைக் கோட்பாட்டு அரசியல் முரண்கள் சந்திக்கும் போது நேரும் சிதைவுகளை நாவல் தொட்டு கலங்குகிறது. வற்புறுத்தலற்ற மென்மையுடன் தன் சந்தேகங்களையும் உள்ளடக்கி மீரான் இதன் வழியே தன் கலை நிரம்பிய பரிவை விரவிவிட்டிருக்கிறார். செதுக்கி வைத்த ஒழுங்கு எதையும் காட்டாத இந்த புதினத்தை ஓர் உயிர்ப்புடைய சமூக ஆவணமாகக் கருதலாம்.

**குடியேற்றம்**

கிழக்கு, மேற்குக் கடலோரங்களில் ஒன்றரை நூற்றாண்டுக் காலம் பறங்கியர்களுக்கு கடலோர மரைக்காயர்களுக்குமிடையே கடும் போர் நடைபெற்றது. தமிழக வரலாற்றில் இப்போர் போதிய இடம்பெறவில்லை. இந்தப் போரில் மடிந்தவர்கள் எண்ணிக்கையில் அடக்கமுடியாது.

மத மேலாண்மைக்காக, வியாபார குத்தகைக்காக கலாச்சாரத் திணிப்புக்காக அந்நியரான பறங்கிகள் நடத்திய நீசத்தனமான அட்டூழியங்களை எதிர்த்து நின்று, தாய்மண்ணின் கன்னிமையையும் தாய்மொழியின் இனிமையையும் சுரண்டல் சூழ்ச்சிகளையும், எதிர்த்து (1498-1663) ஒன்றரை நூற்றாண்டுக் காலம் தமிழர்களான மரைக்காயர்கள் செய்த மறக்க முடியாத சேவை தமிழக வரலாற்றில் போதிய வெளிச்சம் கிடைக்காமல் போய்விட்டது. கலைக்குரிய விஷயம் இது தொடர்பாக ஒரு குறிப்பிட்ட நூல் அல்லாமல் வாசிக்கக் கிடைத்த வேறு பல வரலாற்று நூல்களின் வாசிப்பின் வெளிப்பாடுகளை இப்புதினம் கொண்டுள்ளது.

மரைக்காயர்களுக்கும் பறங்கிகளுக்குமிடையே நிகழ்ந்த போரின் பின்னணியில் புனையப்பட்டுள்ளது. கொடூரம் நிறைந்த இந்தப் போரின் உக்கிரநிலையில் உற்றவர்களை இழந்த மக்கள் உயிருக்காகத் தங்களது சொந்தத்தையும் கடற்கரை மண்ணையும் துறந்து விட்டுப் பல உள் கிராமங்களில் ஓடித் தஞ்சம் அடைந்து குடியேறி, அகதி வாழ்க்கை வாழ்ந்து வந்தனர். அந்த மக்களின் பின் தலைமுறையினரில் ஒரு கிராமத்து மக்களின் இன்றைய அவல

வாழ்க்கைக்கு நேராக ஒளி காட்டும் மெழுகுவர்த்தியாக இப்படைப்புத்தளம் அமைகிறது.

உண்மையான வரலாறு உண்மையாக இதில் சொல்லப்படுகிறது என்றாலும் இதில் வரும் கதாப்பாத்திரங்கள் அனைத்தும் கற்பனையில் பிறந்தவர்கள். இராவுத்தர்புரம் ஓடைக்கரைத்தெரு என்பவையெல்லாம் கற்பனையில் உருவானவை. எந்த ஊரையோ தனிநபரையோ ஊர் அமைப்புகளையோ குறைகூறும் நோக்கம் இடம்பெறவில்லை. சமுதாயத்தின் மத்தியில் காணப்படும் சில குறைகளையும், மூடநம்பிக்கைகளையும் சொல்வது சமுதாயச் சீர்த்திருத்த நோக்கத்தோடுதான் என்பது புலப்படுத்தப்படுகிறது.

பதினாறு, பதினேழாம் நூற்றாண்டுகளில் இந்தியாவின் கிழக்கு, மேற்குக் கடற்கரைகளில் வாழ்ந்த மரைக்காயர்களுக்கும் தங்களின் ஆதிக்கத்தை இந்தியாவில் நிறுவ முயன்ற பறங்கிகளுக்கும் இடையே முடிவற்ற போர் மூண்டது வணிக மேலாதிக்கதன்தயும், கடல்வழி ஆதிக்கத்தையும் மரைக்காயர்களிடமிருந்து பறித்தெடுக்க முயன்றனர் பறங்கிகள். மரைக்காயர்களின் உரிமைப்போர் வீரஞ்செறிந்தும் அற்புதங்களால் நிரம்பியும் இருந்தது. இந்தக் காலத்தின் விழுதுகளைப் பற்றிக் கொண்டு இறங்குகிறது நவீன காலம்.

அன்றைய வீரத்தின் விளைநிலமாக இருந்த சமயம். நின்று தன் அதிகாரத்தை விரிவுபடுத்த விரும்புகிறது. சமயத்தின் பீடத்தில் அன்று பெரும் அங்கமாக இருந்தவர்கள் இன்றும் அப்படி இருக்க முடிகிறதா. சமயத்தின் ஆட்சி என்பதாக நாம் தெரிந்து கொள்வது எதை என்பதையும், இவற்றின் முரண்களைத் தன் படைப்பு அழகியலால் உந்தித் தள்ளிக் கொண்டு வரலாற்றுக்கும், புனைவுக்குமான இணைப்புப் பாலமாக இப்புதினம் வடிவமைக்கப்பட்டுள்ளது.

மேற்கண்ட படைப்புகளின் வழியாக மனித சமுதாயத்திற்குத் தேவையான சிந்தனைகளை வழங்க முடியும் என்ற நிலையில், ஒவ்வொரு மண்ணிற்குரிய கலாச்சாரம் பண்பாடு கலைகள் காக்கப்பட வேண்டும் என்ற உயர்ந்த சிந்தனையும், மக்களிடையே இருக்கும் நம்பிக்கையால், விளையும் விளைவுகள் எத்தகையது என்ற விழிப்புணர்வும் தீய சக்திகளின் விளைவுகளை விளக்கும் சமூகப்

*பார்வையும் மண்மணம் பேசுகின்ற இயற்கை சார்ந்த நிகழ்வுகளும் சமுதாய (இசுலாம்) சிக்கல்களும், அகப்புறப் போராட்டங்களும் இவருடைய படைப்புகள்வழி எடுத்துரைக்கப்படுகின்றன.*

இலக்கியம் என்பது வாழ்க்கையின் ஒரு பகுதியாகும். அது எந்த அளவிற்கு வாழ்க்கையோடு பொருந்தியுள்ளதோ அந்த அளவிற்கு அதன் மதிப்பும் அமைகிறது[3]

*என்பார் பிச்சமுத்து. அவருடைய சிந்தனை ஒப்புநோக்கத்தக்கதாகும்.*

*வாழ்க்கையைக் கூர்ந்து நோக்க அறியவல்லவர்க்குக் காண்பதும் கேட்பதும் கூடக் கதைக்குரிய கருவாக அமையும். வாழ்க்கையில் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சி அதனால் விளையும் சிக்கல் இவற்றை எடுத்துரைப்பது கரு எனலாம். தோப்பில் முகமது மீரான் படைப்புகள்,*

1. *காதல்*
2. *நட்பு*
3. *குடும்பம்*
4. *சமூகம்*
5. *அரசியல்*
6. *சமயம்*
7. *வழிபாடு*
8. *தொழில்முறைகள்*
9. *உறவு நிலைகள்*
10. *போராட்டங்கள்*

*என்னும் நிலையில் மாறுபட்ட கோணங்களில் அமைத்துள்ளார்.*

கதைக்கான கருவை எங்கும் தேடி அலைய வேண்டியதில்லை. கண்களையும் காதுகளையும் திறந்து வைத்துக் கொண்டிருந்தாலே போதுமானது வாழ்க்கையில் நடக்கும் அத்தனையும் கதைக்கு உரியவையாகும்[4]

*என்னும் சிந்தனைக்கு ஏற்ப தாம் வசிக்கும் இடங்கள், தான் சந்தித்த மக்கள், அப்பகுதியில் காணப்படும் கலாச்சாரம், பண்பாடு, கலைகள் போன்றவற்றையும் கதைக்குரிய களன்களாகத் தோப்பில் முகமது மீரான் படைத்துள்ளார்.*

*அன்றாட சமூக வாழ்வில் இவர் சந்தித்த எத்தனையோ நிகழ்ச்சிகள் மனத்தைப் பாதித்த அனுபவங்கள், பிறரின் அனுபவங்கள் எல்லாம் ஒருங்கிணைந்த*

ஒரு படைப்பாக இவரிடம் வடிவம் பெற்றுள்ளது என்றால் அது மிகையாகாது. ஒரு புதினமானது ஒரு கருத்தை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்படும்போது அக்கருத்தை படைப்புகளின் உயிர்நாடியாகக் கதைக்கருவாகக் கொண்டு விளங்குகிறது. எனவே இயற்கையாகவும் நம்பத்தக்க வகையிலும் படைக்கப் பெறுதல் வேண்டும். அவ்வாறு படைக்கப்படும் கதையும் கருவும் தளங்களும் சிறப்பாக அமையும். இதனை,

1. தனிமனிதன்
2. சமூகப் பொறுப்புகள்
3. பாடுபொருள்
4. ஆன்மிகம்

என்னும் நோக்கில் பாகுபடுத்தலாம்.

கருப்பொருள் வாழ்க்கையோடு தொடர்புடைய எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம். சில புதினங்களில், சிறுகதைகளில் கதைமாந்தர்களின் பண்புகள் சிறந்து விளங்கும் வேறுசில புதினங்களில் உணர்ச்சி சிறப்பாகப் பேசப்படும்.

1. கருவின் சிறப்பு
2. பண்பின் சிறப்பு
3. உணர்ச்சியின் சிறப்பு

இவற்றை உணர்ந்து உருவாக்கப்படும் படைப்புகளில் கதைக்கரு சிறப்பாக அமையும். படைப்புகளின் வெற்றித் தோல்வி கதையின் கருவைக் கொண்டே அமையும். அவ்வகையில் தோப்பில் முகமது மீரானின் படைப்புகளில் பொதிந்துள்ள கதைக்கருவினைக் கீழ்க்காணுமாறு பகுக்கலாம்.

1. பண்பாடு
2. கலைகள்
3. காதல்
4. நட்பு
5. நம்பிக்கை
6. உளவியல்
7. சமயம்
8. அரசியல்

*மேற்கண்ட சமூகம் சார்ந்த கதைக்கருக்களும், படைப்பு நோக்கங்களும் கொண்டமைகின்றன.*

> வாழ்க்கை கருக்களால் நிரம்பியது. எப்பக்கம் திரும்பினாலும் அப்பக்கம் ஒரு கருவைக் காணலாம். கூர்மையான கண்ணும் தீட்சன்யமான தூதும் உள்வாங்கிக் கொள்ளும் மனமும் எழுதியே தீருவேன் என்னும் எந்துதலும் இருக்குமேயானால் நல்ல கதைக்கரு பிறக்கும்[5]

*என்னும் பதிவிற்கேற்ப குமரி மாவட்ட இசுலாம் மக்களின் குறிப்பிட்ட சமூகத்தை அடையாளம் காணுதற்கும் அம்மக்களின் கலாச்சாரம் பண்பாட்டை அறிவதற்கும் பெரும் பயனாய் இவருடைய படைப்புக்கள் விளங்குகின்றன.*

> கரு வரலாற்றில் இருந்து எடுத்த நிகழ்ச்சியாகவும் இருக்கலாம் அல்லது நாட்டுக் கதைகளிலிருந்தும், புராணக் கதைகளிலிருந்தும் அமைந்ததாக இருக்கலாம். அன்றாட வாழ்க்கையிலிருந்து தேர்ந்தெடுத்ததாக இருக்கலாம். ஆசிரியரின் சொந்த அனுபவத்திலிருந்து அமைந்ததாக இருக்கலாம்[6]

*என்பது முர்ரே கருத்தாகும். இதன் அடிப்படையில் தோப்பில் முகமது மீரானின் படைப்புகள் அமைந்துள்ளன.*

*ஒரு தனிமனிதன் ஏனைய மனிதர்களுடன் கொண்டிருக்கின்ற உறவுமுறையை வலுப்படுத்தும் தொடர்புகளே சமூகம் என்றழைக்கப்படுகிறது. சமூகமே சமுதாயமாக விரிவடைகிறது. சமுதாயத்தின் ஓர் அங்கமாகத் தம்மைக் கருதிக் கொள்ளும் படைப்பாளன் சமுதாயத்தில் தான் காணுகின்ற குறை, நிறைகள் குறித்தும் கலாச்சாரம், பண்பாடுகள் குறித்தும் பதிவு செய்யத் தவறுவதில்லை. ஒரு சமுதாயம் வாழ்ந்த வாழ்வை அறிவதும், அவர்களிடையே இருந்த பண்பு பழக்க வழக்கங்கள் போன்றவற்றைப் பிரதிபலிப்பதும் இலக்கியங்களே ஆகும். இவ்வகையில் தான் வாழ்ந்த குமரி மாவட்டத்தில் வாழுகின்ற சமூகத்தில் மக்களால் பின்பற்றப்படுகின்ற செயல்பாடுகளைப் பதிவு செய்யத் தவறவில்லை.*

1. *எண்ணங்கள்*
2. *உணர்ச்சிகள்*
3. *குறிக்கோள்கள்*
4. *இன்பத் துன்பங்கள்*

*மனிதர்களிடையே மேற்கண்ட கூறுகளைப் பற்றியே விவரிப்பதால் வாழ்க்கையோ நேரடியான தொடர்பு சிறுகதை. புதினத்திற்கும் உண்டு. மேலும்*

*படைப்பாசிரியர் சமூகத்திற்குத் தான் என்ன கருத்தைச் சொல்ல நினைக்கின்றாரோ அந்தக் கருத்து அவரே அறியாவண்ணம் அவரது படைப்பில் இடம்பெறும். தன்னுடைய பணியைத் தனது படைப்பின்வழி நிறைவேற்றிக் கொள்வர்.*

> சமூக விதிகளை மறுப்பதும், மாற்றுவதும் அதன் நியாயமான தீர்ப்புகளைக் காலத்தின் முன்னே பரிசீலனைக்கு வைப்பதும் இலக்கியத்தின் பணியாகிறது[7]

*என்னும் தமிழண்ணல் கருத்துக்கேற்ப மேற்காணும் வகையில் காலத்தால் புறக்கணிக்கப்படுகிற ஓர் இனத்தைப் பற்றிய உண்மையான வெளிச்சத்திற்குக் கொண்டுவர நினைக்கும் தோப்பில் முகமது மீரான் படைப்புக்கள் போற்றுதற்குரியதாக அமைகின்றன.*

**படைப்பு வகைகள்**

*கதைமாந்தர் படைப்புக்கள் பல்வேறு வகையில் வகைப்படுத்தலாம்.*

1. *விளக்க முறைகள்*
2. *நாடக முறை*

**விளக்கமுறை**

*மாந்தர் ஒருவரின் இயல்புகளைப் படைப்பவன் தானே விதந்து விளக்கிப் பேசுவது இம்முறையில் காணப்படும் பண்பாகும்.*

**நாடக முறை**

*மாந்தர்களின் இயல்புகள் யாவும் அவர்களுடைய பேச்சாலும், செயலாலும் வெளியிடப்படுகின்றன. ஒரு மாந்தரைப் பற்றிப் பிற மாந்தர்களின் எண்ணம், சொல், செயல் என்பவைகளின் வழியே அறியுமாறு புதினத்தில் மாந்தர் படைப்பினை அமைப்பதாகும். நிகழ்ச்சிகளின் காலவரன்முறை் படியான வைப்பு முறையினால் மாந்தர் படைப்பு புலப்படுத்தப்படுவதாகும். உளவியல் பற்றிய ஆய்வின் வளர்ச்சியால் மாந்தர்கள் ஆளுவதாகவும். தோப்பில் முகமது மீரானின் படைப்புகளும் இத்தகைய அமைப்பிலேயே அமைந்துள்ளன என்பதும் குறிப்பிடத்தக்கது.*

**கதைப்பின்னல், மாந்தர் ஆக்கம்**

இன்றைய சமுதாயத்தில் மனிதனுக்குப் பல்வேறு தாக்கங்கள் எதிர்படுகின்றன. இதன் விளைவாக அவன் மனமும் செயலும் ஒரே நிலையில் தொடரும் என கருதுதல் இயலாது. இத்தகைய கருதுகோள்களில் சிறுகதை, புதினங்களில் கதைமாந்தர் ஆக்கம் படைக்கப்படுகிறது.

கதைப்பின்னலைவிட இன்றியமையாத ஒன்று. புதினத்தின் கதைப்பொருளையும், சிறப்பையும் விளக்குவது மாந்தர் படைப்பு மட்டுமே எனலாம். கதைப்பின்னல் பாத்திரத்தின் விளைவாகவும் அதனைச் சார்ந்தும் அமைகின்றன.

ஒரு படைப்பு (சிறுகதை, புதினம்) எங்கிருந்து வேண்டுமானாலும் தொடங்கிப் படைக்கப்பட்டும், எதற்கு வேண்டுமானாலும் அழுத்தம் கொடுக்கட்டும். ஆனால், வாசகர் மனதில் நிலைத்து நிற்பது எவை என்று எண்ணிப் பார்த்தல் மாந்தர் படைப்பே என்பது உண்மையாகும்.

தலைசிறந்த உலகத்துப் பெரும் புதினங்களை எல்லாம் நாம் நினைக்கும் போது முதலில் நம் நினைவுக்கு வருவது கதைப்பின்னலோ பிறவோ அல்ல கதைமாந்தர்களே என்பது குறிப்பிடத்தக்கது.

படைப்பாளர்கள் தாங்கள் காணுகிற மனிதரை அப்படியே நகல் செய்து விடுவதில்லை. காணுகிற மனிதனைத் தூண்டுகோலாகக் கொண்டு அத்தூண்டுதலில் தங்கள் மனக்குறிப்பில் உருவாக ஒரு மாந்தரையே உருவாக்குகிறார்கள். தான் ஒன்றைக் காணுகிறபோது கவனத்தைக் கவர்ந்த சிலவற்றையும் கற்பனையில் மின்னவிட்ட சிலவற்றையும் ஒன்றாகச் சேர்த்து கதைமாந்தரை உருவாக்குகிறார்கள்.

மாந்தர் படைப்பு, கதையில் வரும் மனிதர்களை விளக்குவது. உடனடியாக தாம் யாரை அறிந்துகொள்ள வேண்டும். ஆழமாகப் புரிந்துகொள்ள வேண்டும் என்று படைப்பவன் விரும்புகிறானோ அவரைப் பற்றியும் அவருடைய பண்பு, ஆளுமை ஆகியவை பற்றியும் புதிய சந்தர்ப்பமாக உருவாக்கிட உதவும் கலையே

*மாந்தர் ஆக்கம் ஆகும். இத்தகைய வாழ்வு இப்படைப்புடன் இணைந்து உண்மையாக அமைத்து விளக்குவதே வெற்றி நடைபோடும் எனலாம்.*

**கதைமாந்தர் படைப்பின் முதன்மையும், சிறப்பும்**

*நாவலின் முதன்மைக் கூறாகக் கருதப்படுவது கதைமாந்தர்களே. சமுதாயத்தைப் பிரதிபலிக்கும் நாவலில் மனிதப் பிரச்சினைகளே முதன்மைப் பெறுகின்றன. இத்தகைய சிக்கல்களுக்குக் கதைமாந்தர்களே காரணமாக விளங்குவதினால் நாவல், சிறுகதைகளில் கதைமாந்தர் படைப்பே முதன்மைப் பெறுகின்றது.*

> உண்மை உலகில் நடமாடும் மனிதர்களை நாவலில் நடமாட விடும்போது அவர்களின் பண்புச் சித்திரங்களில் தெளிந்த ஓர் அமைப்பும், மெருகும் இருத்தல் வேண்டும்[8]

*என்று கதைமாந்தரின் தன்மையை அறிவதற்குப் பயன்படுகிறது.*

> புதினத்தில் கதைமாந்தர்கள் சிறப்படைவதற்கு அவர்தம் செயல்களே காரணமாகும். புதினத்தின் கவர்ச்சி அதன் பாத்திரங்களினாலும் சம்பவங்களினாலும் சாதாரணத்தன்மையில் தங்கியுள்ளது[9]

*என்னும் நிலையில் பாத்திரங்களைப் படைத்துள்ளார்.*

*மேலும் நாவலாசிரியன் எப்படிப்பட்ட கதைப்பாத்திரத்தைப் படைத்துக் காட்டினாலும் அப்பாத்திரத்தின் நிலையோடு இரண்டறக் கலந்து தானே அதுவாய் அதுவே தானாய், அமைந்து முழு ஈடுபாட்டுடன் படைக்க இயலவேண்டும்.*

> எழுத்தாளன் பணியிலேயே மிகவும் தலையாயதும் அரியதுமானது பாத்திரப்படைப்புதான் இது மிகவும் அரிய பல்வேறு உணர்வுகளும் கலந்த ஒன்றாகும்.[10]

*பொதுவாகக் கதைப்பிறப்பினைத் தரமுடையதாகவும், பயனுடையதாகவும் செய்வது பாத்திரப்படைப்பைப் பொருத்துள்ளது. நாம் படித்த கதையின் கருவையும், கதையின் கோப்பையும் நாளடைவில் மறந்து விடுவோம். ஆனால் அதன் பாத்திரங்கள் நம் நெஞ்சில் நிலையாக இருக்கும் எனலாம். இதனை,*

1. *அங்க வருணனை*
2. *மனம்*
3. *அறிவு*

4. சிந்தனை
5. குணஇயல்பு
6. சூழ்நிலை
7. உணர்ச்சி

என்ற வகையில் அடக்கலாம். கதைமாந்தர் படைப்பு என்பது ஒரு பெயரைச் சூட்டி விடுவதோ அங்க வருணனை நடத்த விடுவதோ அல்ல, மேற்கண்டவற்றையெல்லாம் கூர்ந்து அறிந்து அனுபவமாக வெளிப்படுத்துவதைத் தீட்டுவதாகும்.

மேலும் ஓர் இலக்கியப் படைப்பு எழுத்துலகில் நிலைபெறுவதற்கும், அதன் பாத்திரப்படைப்புக்களின் வெற்றியையே பெரிதும் சார்ந்திருக்கிறது. கதைமாந்தர்களின் குணச்சித்திரங்கள் வாசகர்களின் மனத்தில் பதிந்து நிலைத்துவிடும் போது அந்தப் படைப்பிலக்கியம் வாசகர் உலகில் நின்று நிலைப்பதாகி விடுவதை அறியலாம்.

> ஒரு கதையைச் சொல்லாமலேகூட ஒரு பாத்திரத்தை வெற்றிக்கரமாகப் படைத்துக் காட்ட முடியும். ஆனால் பாத்திரங்களை நல்ல முறையில் உருவாக்கிக் காட்டாமல் ஒரு கதையைச் சொல்ல வழியில்லை[11]

என்னும் கூற்று ஒப்புநோக்கத்தக்கதாகும்.

சிறுகதை, புதினங்களில் கதைமாந்தர்கள் அனைவரும் நாம் அன்றாட வாழ்வில் நடமாடுபவர்களாகவும் அந்தப் பாத்திரங்கள் நம் கண் முன்னால் ஊடாடிக் கொண்டிருப்பவர்களாகவும் தோப்பில் முகமதுமீரான் படைத்துக் காட்டுகிறார்.

இவருடைய படைப்புகளில் ஒவ்வொரு கதைமாந்தர்களும் தவிர்க்க முடியாதபடி இருக்கக்கூடிய தனிப்பண்புகளைப் பெற்றிருக்கக் கூடியதும், வாழ்க்கையோடு மிக நெருங்கிய பாத்திரங்களாக இருப்பதாகவும் வாசகர்கள் அவர்களோடு உறவாடுபவர்களாகவும் காணமுடிகிறது.

### பாத்திரங்கள் அறிமுகம்

கதைமாந்தருக்கு முதன்மை கொடுத்து எழுதும் போது சிறந்த கலைப்படைப்பாக அது உருவாகிறது. இந்நிலையில் சிறந்த கதைமாந்தரைத்

தன்னுடைய படைப்புகளில் படைத்துக் காட்டியுள்ளார். தோப்பில் முகமது மீரானின் பாத்திரங்களைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

1. தோற்றத்தைக் கூறி அறிமுகம் செய்தல்
2. பண்பினைக் கூறி அறிமுகம் செய்தல்
3. பொது நிலையில் அறிமுகம் செய்தல்
4. உரையாடலில் அறிமுகம் செய்தல்

மேற்காணும் பகுப்புகளில் கதைமாந்தர்களை அறிமுகம் செய்துள்ளார்.

## தோப்பில் முகமது மீரான் படைப்புகளில் கதைமாந்தர்கள்

ஆய்வின் எல்லையாக வரையறுக்கப்பட்ட இவருடைய படைப்புகளில் இடம்பெறுகின்ற கதைமாந்தர்கள் மட்டும் அறிமுகப்படுத்தப்படுகின்றனர்.

**சிறுகதை (வேர்களின் பேச்சு)**

| கதைத் தலைப்பு | ஆண் பாத்திரம் (முதன்மை) | பெண்பாத்திரம் (முதன்மை) | பிற |
|---|---|---|---|
| விளக்கு | 1. சிவன்பிள்ளை<br>2. பீர்முகமது<br>3. மம்மாலிசம் பிள்ளை | 1. கதிஜா | 1. சிறுவர்<br>2. பெரியவர் |
| தலைப்பெருநாள் | 1. மும்மூன்<br>2. முஹம்மது நூற் | 1. வீயாத்தும்மா<br>2. ஸைனபா<br>3. பீவிபாத்திமா<br>5. மம்மோ | - |
| நகரம்பூமியில் | 1. வாப்பா | 1. உம்மா<br>2. லைலா | - |
| தஜ்ஜால்மேல் விழுந்த மலை | 1. அப்துல் காதர்<br>2. அசர்<br>3. மோதினார்<br>4. சுக்கூர்லெப்பை | 1. ஸைனபா | 1. மீன்கூடைக்கார்<br>2. சைக்கிள்காரர் |
| கத்தச்சோறு | - | 1. சலிமா<br>2. நாடாத்தி | - |
| பவர்க்காரி | வாப்பா | 1. உம்மா<br>2. வஹிதா ஹமிதா | - |
| கடல் | செய்தகமது | ஆமீனா | - |
| அன்புக்கு முதுமை இல்லை | 1. மம்மாசன்<br>2. ஹஸன் | 1. கைஜா<br>2. கதிஜழ | 1. கிழவர்<br>2. கிழவி |
| பொன்னரை ஞான் | செய்தாலி | 1. கைருன்னிசா<br>2. ஆயிசா | பெண் |

| கதைத் தலைப்பு | ஆண் பாத்திரம் (முதன்மை) | பெண்பாத்திரம் (முதன்மை) | பிற |
|---|---|---|---|
| துறைமுகம் | 1. அலி<br>2. சேமதின் | - | - |
| நேற்று வந்த வழி | 1. முஸ்தபா<br>2. அத்ராமான் | 1. மினாரா<br>2. உம்மா | 1. கிழவன் |
| கறவை தீர்ந்த மாடு | 1. அலி | 1. மைமூன்<br>2. ஜமுலா<br>3. சுஹரா | |
| இயற்கை இழந்த பறவைகள் | 1. ஹமீது<br>2. வாப்பா<br>3. ஹாஜியார் | 1. உம்மா<br>2. ஸபியா | - |
| ஒரு செருப்பின் கதை | 1. வாப்பா<br>2. மாணவன் | - | - |
| ஆதத்தின் மகன் மைதீன் பிள்ளை | 1. மைதீன் | 1. உம்மா | - |
| ஒரு சூரியன் எரிகிறது | 1. சாலி<br>2. முதலாளி | 1. பெண் | 1. பெட்டிக்கடைக்காரர்<br>2. கண்டக்டர் |
| ஒரு தெருவின் சுயசரித்திரத்திலிருந்து | 1. ஃபாரின்பாத்து<br>2. மைம்பாத்து | - | 1. பட்டாளக்காரன்<br>2. ஜெய்னபா |
| ஒரு மவிலவியின் மரணம் | 1. மவ்லவி அப்துல் ஹீக்கூர்<br>2. மோதினார்<br>3. மீரான் | - | 1. மக்கள்<br>2. பெண்கள் |
| மொட்டைக் கடிதம் | 1. வாப்பா<br>2. முத்துநாயகம் | 1. உம்மா | 1. பையன்<br>2. பெண் |
| ஓர் இரங்கல்பா | 1. அத்மான் | - | 1. பக்தர்கள்<br>2. மூன்று பெண் குழந்தைகள்<br>3. மரங்கள் |
| இதை எப்படி நிறுத்துவது? | 1. மலுக்குமுகமது<br>2. டாக்டர் முரளி<br>3. வாப்பா | - | 1. பிள்ளைகள்<br>2. மகள்<br>3. ஹவினர்கள் |
| சூரியனைப் பிரசவிக்கும் பாறை | 1. மீரான் | 1. உம்மா | 1. பாம்பு |
| கருந்தேளின் கொடுக்குகள் | 1. பீர்முகமது<br>2. ஜீப்பாக்காரர் | 1. ரைதூனத்தும்மா | - |
| இன்று நான், நாளை நீ | 1. மாரியப்பன் | 1. பீரும்மா<br>2. கனகவல்லி | 1. மூக்கன்<br>2. ஜமாத் தலைவர் |
| கொலுசு அணிந்த பாதங்கள் | 1. முஸ்தபா<br>2. முகமதுபீர் | 1. தைன்பீவி | 1. திருடர்கள்<br>2. கைமணி |

| கதைத் தலைப்பு | ஆண் பாத்திரம் (முதன்மை) | பெண்பாத்திரம் (முதன்மை) | பிற |
|---|---|---|---|
| ஒரு உஸ்தாதின் அகமியம் | 1. அஸனார் பிள்ளை<br>2. உஸ்தாத் | 1. காயிதா | 1. மாணவர்கள்<br>2. ஊர் மக்கள் குழந்தைகள் |
| நெட்டோகாலி என்ற நூறுல் ஹஸன் | 1. ஹசன்<br>2. அக்தூனி | 1. உம்மா<br>2. அறுவாணி | 1. கிழவி |
| சுருட்டுப்பா | 1. உப்பா | 1. ஆமினா | - |
| குரு | 1. காதர்<br>2. அகம்மது கண்ணு சாகிபு | 1. ஹம்சா | 1. டிரைவர்<br>2. நர்ஸ்<br>3. லைன்மேன்<br>4. தபால்காரன் |
| வாரிசு | 1. மம்மாலி கிழவன்<br>2. உப்பா | - | 1. பேரப்பிள்ளைகள் |
| யாத்திரை | 1. திவான்ஜி | - | 1. சிறுவன் |
| தங்கராசு | 1. தங்கராசு<br>2. மேத்தன் | 1. பொன்னம்மா | 1. வாத்திமார்கள்<br>2. குமஸ்தா<br>3. எச்.எம்.<br>4. போலீஸ்காரர்கள் |
| ஆனந்தசயனம் காலனி | 1. சீனிவாசன் | - | 1. டிரைவர்<br>2. பிள்ளைகள்<br>3. கிழவர் |
| உம்மாவின் ரூஹ் | 1. வாப்பா<br>2. ராகவன் | 1. உம்மா<br>2. வள்ளி | 1. மச்சினன் |
| வட்டக்கண்ணாடி | 1. முன்ஜி<br>2. ஒச(நாவிதன்)<br>3. வாப்பா | 1. உம்மா | 1. தம்பி<br>2. பெண் பிசிறுகள்<br>3. பாட்டி (வாம்பும்மா) |
| காலத்தின் ஆவர்த்தனம் | 1. ரஜீபு<br>2. ரஷித்<br>3. நஜிப் | 1. மனைவி<br>2. தாய் | 1. மாமனார்<br>2. மருமகன்<br>3. மாமி<br>4. தங்கை |
| சன்னதியில் | - | 1. தஸ்பீஹீம்<br>2. வள்ளி | 1. கிழவன்<br>2. மகன் |
| வேட்டமங்கலம் யானை | 1. நைனா<br>2. பொன்னையயன் | - | 1. தபால்காரன்<br>2. யானை |
| வேள்வியின் விளிம்பில் | 1. சவரிமுத்து<br>2. வாப்பா | 1. உம்மா<br>2. வெள்ளி<br>3. ஜெயஸ்ரீ<br>4. சந்திரலேகா | 1. மேஸ்திரி |
| சாய முகங்கள் | 1. அகம்மதுஷெரிப்<br>2. அகம்மதுஷரிப்<br>3. புருஸ்லி | 1. பினூ<br>2. உமையம்மை (பாட்டி) | 1. வீட்டுக்காரர் |

மேலும் தோப்பில் முகமது மீரானின் சிறுகதைத் தொகுதியில் (வேர்களின் பேச்சு), ஓமலவல்லி, தவம், குட்டி ஆடு, உள்வனம், கடிகாரம், பேரன், சூட்சம இடைவெளி, 45வது வார்டு வேட்பாளர், மயானங்கள், ஒரு பஸ் பயணத்தின் போது, வானவர்கள் செல்லுமிடங்கள், குட்டன் பிள்ளைசார், பிறப்பின் விசித்திரம் ஏணி, பச்சைநிறக் கார், மாளிகை விடு, களியோடக்தா, ஒரு குட்டித் தீவின்னுரைபிடம், காலண்டர் பாவா, புதையல் நிற்காத கால், அஸ்தமனம், முன்னோர்கின் இரண்டாவது நல்லடக்கம், தலைக்குளம், பண்டமாற்று, அடையாளங்கள், மிஸ்டர் மார்ட்டின், ஒரு மாமரமும் கொஞ்சம் பறவைகளும், இரைகள், நாராயண முதலித்தெரு 52 ஆம் நம்பர் வீடு, அப்துல்லா இப்னு அபூபக்கர், தங்கவயல், ஒரு சவ ஊர்தியின் நகர் வளம், 1100 ஆம் ஆண்டு மகரமாசம் 18 ஆம் தேதி வில் பாத்திரம், தலையில் துண்டு கட்டிய பெண்.

மேற்கண்ட கதைகள் அத்தொகுதியில் இடம்பெற்றுள்ளன. இவற்றுள் முதன்மை மாந்தர்கள், துணை மாந்தர்கள் (ஆண், பெண்) பெயர்க் குறிப்பிடும் பாத்திரங்கள் பெயர்க் குறிப்பிடாத பாத்திரம், பிற பாத்திரங்களும் இடம்பெற்று படைப்பாக்கத்திற்கு மெருகூட்டுகின்றன.

மேற்கண்ட படைப்புகளில்,

1. கதை வடிவம்
2. கதை நடை
3. கதைப்பொருள்
4. கதை ஒருமை
5. கதை அமைப்பு
6. கதைக் குறிக்கோள்

போன்றவைகளைக் கொண்டுள்ளன.

தேவையற்ற வருணனைகள் சிறுகதையில் இடம்பெறக் கூடாது. சொற்கூட்டு மிக முக்கியமானது. பயணற்ற ஒரு சொல்கூட சிறுகதைகளில் அமையாது. கதையின் நடை எளிமையாகவும் இனிமையாகவும் இருந்து, ஒரு கதையைப் படித்து முடித்தப் பின்னர் அதில் முழுமையும் நிறைவும் இருப்பது புலனாகும் படியும் இத்தகைய முழுப் பண்பைப் பெற்றாதவை வெறும் நிகழ்ச்சிக் கோவையாக அமையுமேயன்றி சிறுகதை ஆகாது என்பதற்கு ஏற்ப படைத்துள்ளார்.

*சிறுகதையில் இந்தக் கதைப் பொருள்தான் அமைய வேண்டும் என்ற மரபு இல்லை. ஆர்வத்தைத் தூண்டும் எதுவும் கதைப்பொருளாகலாம். காணும் பொருள் ஒன்றிலிருந்து கலைஞன் பெறும் உணர்வு கதையாகிறது.*

1. *சிறு நிகழ்ச்சி*
2. *சூழல்*
3. *அரியகாட்சி*
4. *நிகழ்ச்சிகளின் கோவை*
5. *உலகமாந்தர்களின் ஏதாவது ஒருகூறு*
6. *சிறிய அனுபவம்*
7. *அறச் சிக்கல்*

*மேற்கண்டவைகளில் தோப்பில் முகமது மீரான் கட்டாயம் ஒவ்வொரு கதையிலும் படைத்துள்ளார்.*

*கதை ஒருமையில் சிறுகதை பொருளின் மையக்கருத்தை மட்டும் விளக்குகின்றன. இதுவே கதையின் சுவைக்கு இன்றியமையாததாகிறது.*

1. *தொடக்கம்*
2. *நடு*
3. *முடிவு*

*எங்கும் ஓர் உணர்வே ஆட்சி செலுத்த வேண்டும்.*

*கதை நிகழ்ச்சி அனைத்தும் அவ்வுணர்வின் போக்கிலேயே வாசகரை அழைத்துச் செல்லவேண்டும். இதை உணர்ச்சியின் விளைவின் ஒருமைப்பாடாக இவருடைய படைப்புகளில் காணமுடிகிறது.*

*கதை அமைப்பில்,*

> ஒரு கதையின் பொருளில் நோக்கும் எதுவாகவாயினும் இருக்கலாம். அதன் இயல்பு ஒரு வகையில் உறுதியாக இருக்க வேண்டும். இந்தக் கதையை வளர்த்திருந்தாலும் எவ்வித பயனும் நிகழப்போவதில்லை என்று வாசகர் என்னும் அளவுக்கு முடிவு இருக்க வேண்டும்.[12]

*கதையில் இடம்பெறும் ஒவ்வொன்றும் கதையின் நோக்கத்தை நிறைவேற்றுவதாக இருக்கவேண்டும் என்னும் பாங்கில் படைப்பை எடுத்தாள்கிறார்.*

கதைக்குறிக்கோள், வாசகருக்குக் கலைச்சுவை வழங்குவதுதான் சிறுகதைக் குறிக்கோளாகும்.

1. இயற்கை வாழ்வின் கூறு
2. ஒரு பண்பு
3. ஒரு செயல்
4. ஒன்றன் இயக்கம்

அவற்றில் ஒன்றைக் கலைச்சுவை குறையாது வெளிப்படுத்தி சிறுகதை படைப்புகளில் சமுதாய குறிக்கோளுடன் படைத்துக் காட்டுகிறார்.

1. கருவால் வந்த கதை
2. குணச்சித்திரம்
3. உணர்ச்சி பதிவு

மேற்கண்ட பகுப்புகளில் தோப்பில் முகமது மீரானின் சிறுகதைப் படைப்புகளைப் பகுத்தாராய முடிகிறது.

தோப்பில் முகமது மீரானின் புதினங்களில் முதன்மை மாந்தர் (ஆண், பெண்), பிறமாந்தர்களைப் பின்வரும் நிலையில் எடுத்தாளப்படுகிறது.

| தலைப்பு | முதன்மை மாந்தர் (ஆண்) | முதன்மை மாந்தர் (பெண்) | பிறமாந்தர்கள் |
|---|---|---|---|
| ஒரு கடலோர கிராமத்தின் கதை | 1. மோதினார்<br>2. மாலிக்<br>3. பித்னாமைதீன்<br>4. அகமது கண்ணு<br>5. அசனார்<br>6. கத்திபு<br>7. மஹிபூப்கான் | 1. நாஹீ<br>2. பாத்திமா<br>3. ஆயிஷா | 1. அவுக்கர்<br>2. உஸன்<br>3. ஊர்மக்கள்<br>4. முதலாளி |
| துறைமுகம் | 1. மீரான்பிள்ளை<br>2. ஹாஜியார்<br>3. இராயப்பன்<br>4. அத்ரான்<br>5. மாலிக்<br>6. ஐதுரூஸ்<br>7. காசிம் | 1. உம்மா<br>2. சல்மா<br>3. ராஹிலா<br>4. கதிஜா | 1. மானேஜர்<br>2. முதலாளி<br>3. வைத்தியர்<br>4. குழந்தை<br>5. ஊர் மக்கள் |
| கூனன் தோப்பு | 1. ஹாஜியார்<br>2. பீருக்கண்ணு<br>3. சமதுகானா<br>4. அலி<br>5. மோதினா<br>6. புஸ்பாஸ்<br>7. மாடசாமி | 1. சைனபா<br>2. லில்லி<br>3. நம்பாளி<br>4. பீமா<br>5. பவானி<br>6. சம்சும்மா | 1. தலைவர்<br>2. போலீஸ்<br>3. இளைஞர்<br>4. மடிக்காரு<br>5. குழியாளி<br>6. நாடார் பெண்கள்<br>7. கிழவி<br>8. குழந்தைகள் |

| தலைப்பு | முதன்மை மாந்தர் (ஆண்) | முதன்மை மாந்தர் (பெண்) | பிறமாந்தர்கள் |
|---|---|---|---|
| சாய்வு நாற்காலி | 1. முஸ்தபா<br>2. பாறுசாலி<br>3. நைனார் ஆசாரி<br>4. நூர் முகமது<br>5. முஸலியார்<br>6. அப்துல்லா<br>7. அனந்தராமன்<br>8. மைதீன்பீரு<br>9. புதியசப்ளை<br>10. ரபியுல்<br>11. ராமவர்ம மகாராஜா | 1. மரியம்பீவி<br>2. சவ்தா<br>3. ஆசியா<br>4. ரைஹானத்தா<br>5. மரியம் | 1. ஊர் மக்கள்<br>2. குழந்தைகள்<br>3. ஷாகூல் ஹமீது<br>4. பெபுரின் பிள்ளை<br>5. ராமன் தம்பி<br>6. பப்புத்தம்பி |
| அஞ்சுவண்ணம் தெரு | 1. சாகிப்<br>2. வாப்பா<br>3. ஈமான்<br>4. வாஹித்<br>5. சக்கன்னா<br>6. ஆலிப் புலவர்<br>7. ஷேக்மதார்<br>8. மோதீனப்பா<br>9. மெஹராஜ்<br>10. அப்துல்லத்தீப்<br>11. குவாஜா | 1. தாருல் சாஹினா<br>2. தாயம்மா<br>3. ஹாஜறா<br>4. மேனா<br>5. நபீசா<br>6. மம்மதும்மா<br>7. இஷா<br>8. மம்மதும்மா<br>9. மைனுமா | 1. பெண்கள்<br>2. நெசவாளர் மக்கள்<br>3. அஸ்ரத்<br>4. பயங்கரவாதிகள்<br>5. மைதீன்<br>6. ஜமாத் நிர்வாகிகள் |
| குடியேற்றம் | 1. சின்னதம்பி மரைக்கார்<br>2. மைதீன்<br>3. பெத்தாப்பா<br>4. காசிம் மரைக்காயர்<br>5. மீராசா<br>6. சமூஸா<br>7. ஷரீப் | 1. அவுலியா<br>2. மொஹிஸி<br>3. பீவி<br>4. பாமா<br>5. நுர்ஹான்<br>6. சைரா<br>7. பீமா<br>8. செய்பக்கா<br>9. கைசா | 1. மரைக்கார்கள்<br>2. ராவுத்தர்கள்<br>3. பக்கிர்ஷாக்கள்<br>4. தக்னிகர்<br>5. லெப்பைகள்<br>6. நாவிதர்கள்<br>7. உறுப்பினர்கள்<br>8. கருப்பன்<br>9. ஹக்கிம் |

மேற்கண்ட வரையில் முதன்மைப் பாத்திரம் (ஆண்) முதன்மைப் பாத்திரம் (பெண்) பிற பாத்திரங்களுள் குறிப்பிடத்தக்க மாந்தர்களை முகமது மீரானின் புதினங்களின் வழி ஆராய்ந்தறியப்பட்டன.

நாவல் இலக்கியம் ஒரு நெடிய கதைப் போக்கினைக் கொண்டது. அறிஞர்கள்

சங்கத் தனிப் பாடல்களோடு நாவல்களையும் ஒப்பிட்டுக் காண்பர்[13]

என்னும் பகுப்புகளை இவருடைய படைப்புகளின் வழி அறியமுடிகிறது.

இசுலாமியர் சமுதாய வாழ்க்கை முறைகளை தம்முடைய நாவல்களில் முழுமையாக பதிவு செய்துள்ளதை அறியமுடிகிறது.

**தொகுப்புரை**

தோப்பில் முகமது மீரானின் படைப்பும், கதைக்களங்களும் என்னும் முதல் இயல் அறிமுக நிலையில் அமைகின்றது.

படைப்பாசிரியர் வாழ்க்கைக் குறிப்பு பிறப்பு, வளர்ப்பு, கல்வி, பிற விபரங்கள் எடுத்துரைக்கப்பட்டன.

விருதுகள் அவற்றின் வகைகள் குறிப்பிடப்பட்டன. படைப்புகள் பாகுபடுத்தப்பட்டன.

படைப்புக்கள் புதினங்கள், சிறுகதைத் தொகுப்புகள், மொழிப்பெயர்ப்புகள் போன்ற பணிகள் குறிப்பிடப்பட்டன. பிற சிறப்பம்சங்கள் விவரிக்கப்பட்டன.

மீரானின் படைப்புகளில் நோக்கும், பின்புலமும், மரபும் மாற்றங்களும், மேலைநாட்டு வழிக்காட்டிகளின் சிந்தனைகள் தொகுத்துரைக்கப்பட்டன.

நவீன இலக்கியத்தின் தற்கால வளர்ச்சிப்பாதை, சாதனையும் சோதனையும், தற்கால சிறுகதை நோக்கும், போக்கும் குறிப்பிடப்பட்டன.

தோப்பில் முகமது மீரானின் சிறுகதைகள். அவற்றின் புதிய கொள்கைகள், கருப்பொருள் உத்திமுறைகள் இவற்றை விளக்கி மீரானின் படைப்பு நோக்கங்கள் சுட்டப்பட்டன.

ஆய்வு எல்லை வரையறை இவற்றுள் சிறுகதை, புதினங்கள் இவற்றைக் குறிப்பிட்டு கதைக்களங்கள் விளக்கப்பட்டன.

கரு, பண்பு, உணர்ச்சி அடிப்படையில் கதைமாந்தர் படைப்பு அவற்றுள் முதன்மை மாந்தர், துணைமாந்தர் ஆண், பெண், பிற மாந்தர்களும் சுட்டப்பட்டனர்.

மாந்தர் படைப்பில் கதைமாந்தர்களின் உணர்வுகள் வாழ்க்கைச் சூழல் மிகுதியாக இடம்பெறுகின்றன.

கதைமாந்தர்களுக்கு இஸ்லாம் சமயப் பெயரை இணைத்துப் பெயர் சூட்டுவதன் வாயிலாக நடப்பியல் தன்மையை மாந்தர்களுக்கு நல்குவதாகத் தெரிகிறது.

சமூக நிலையுடன் ஒன்றியச் சூழலில் மாந்தர்களை வருணித்துக் காட்டியிருப்பது இவரது மாந்தர் படைப்புத் திறனின் சிறப்பினைப் புலப்படுத்துகிறது.

வாழ்க்கைச் சூழலுக்கேற்ப மாந்தர்களை அமைத்து, அவர்களது பேச்சு, செயல், பாவனை, எண்ணம் இவற்றைத் தோற்றுவிக்கும் வகையில் அமைந்துள்ளன.

நாள்தோறும் அறிமுகமான ஆண்களையும், பெண்களையும் மற்றவர்களையும் சமகாலப் புதினங்களில் படைத்துக் காட்டும் போது தனித்தன்மையைப் பெறுகிறது.

தான் சந்தித்த, கண்ட அனுபவங்களின் வெளிப்பாடாகவே மாந்தர்களைப் படைத்துள்ளார். இசுலாமிய சமூகத்தின் வாழ்வியலையும், சமுதாயக் கூறுகளையும் கதைக்களங்களாகவும், அடித்தளமாகவும் எடுத்துரைக்கிறார்.

## சான்றெண் குறிப்புகள்

1. *எழுத்தாளர் தோப்பில் முகமது மீரான் மறைவு, தமிழ் விக்கிபீடியா.*
2. *எம்.ஏ.நுஃமான், **காலச்சுவடு சிறப்பிதழ்**, 1991.*
3. *ந.பிச்சமுத்து, **திறனாய்வு - தமிழ் இலக்கியக் கொள்கைகளும்**, ப.254.*
4. *மா.இராமலிங்கம், **நாவல் இலக்கியம்**, ப.59.*
5. *பி.சி.கணேசன், **நீங்களும் எழுத்தாளராகலாம்**, ப.18.*
6. I.Middeton Murrey, **The problem of Style**, p.48.
7. *சி.வடிவேலன் (க.ஆ.), "பொன்மணி வைரமுத்துவின் அவளுக்குமேல் ஒரு வானம் - சமுதாயப் பார்வை," **புதின அலை (கருத்தரங்கத் தொகுப்பு)**, ப.175.*
8. *சு.பாலச்சந்திரன், **மு.நூ. இலக்கியத்தி திறனாய்வு**, ப.210.*
9. *கா.சிவத்தம்பி, **நாவலும் வாழ்க்கையும்**, ப.47.*
10. *த.மணிமாறன், **இலக்கியக்கலை**, ப.18.*
11. *க.பிரபாகரி, **இலக்கியத் திறனாய்வும் கொள்கைகளும்**, ப.209.*
12. *கா.வாசுதேவன், **பன்முக நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு**, ப.282.*
13. *மேலது., ப.294.*

## இயல் 2

# படைப்பாளுமையும் மொழிநடை உத்திகளும்

ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு தனிப்பட்ட குணம் உண்டு. ஒரு சிலர் அந்தத் தனிப்பட்ட குணத்தால் ஒருவரிடமிருந்து வேறுபட்டு தனித்தன்மையுடன் திகழ்வர். ஒருவரின் குணத்தினை வைத்து அவரது ஆளுமை மதிப்பிடப்படுகின்றது. அவ்வகையில் தோப்பில் முகமது மீரானின் படைப்புகளின் வழி இவருடைய தலைமைப் பண்புகள், ஒருமைப்பாடுகள், திறன் காரணிகள், தனிமனித ஆளுமைகள், சமூக உறவுகள், நடுநிலைப் பற்றிய ஆளுமைகள், மனோபாவம் குறித்த ஆளுமைகள், ஒருமைப்பாடுடைய ஆளுமைகள், மொழிநடையும் உத்தியும் இவருடைய படைப்புகளில் பொதிந்துள்ள பாங்குகள், இன்ன பிற ஆளுமைப் பதிவுகளும் இவ்வியலில் ஆராயப்பட உள்ளன.

### ஆளுமை - பொருள் விளக்கம்

பர்சனாலிட்டி (Personality) எனும் ஆங்கிலச் சொல்லிற்கு இணையாகத் தமிழில் ‘ஆளுமை’ என்னும் சொல் பயன்படுத்தப்படுகிறது. இலத்தீன் மொழியில் ‘பர்சனா’ என்பது மறைப்பு, முகமுடி எனும் பொருள் தருவதாகும். எனவே ஆளுமை என்பது ஒருவர் அணிந்திருத்தல் எனும் பொருளை அடிப்படையாகக் கொண்டுள்ளது.

ஆளுமை (பெயர்ச்சொல்) என்பதற்கு,

1. உரிமை (Right)
2. அதிகாரம் (Possession)
3. மேலோங்கிய நிலை (Power)
4. ஒரு மனிதனின் தனிப்பட்ட குணத்தொகுப்பு (Dominance, Personality)

என்று சுராவின் தமிழ்-தமிழ்-ஆங்கில அகராதி பொருள் தருகிறது.[1]

Personality என்ற ஆங்கிலச் சொல்லுக்கு ஆங்கிலம் - ஆங்கிலம் தமிழ் அகராதி (notable characteristics of an individual),

ஒரு தனிமனிதனின் தனித்தன்மை (அ) சிறப்பியல்பு, ஆளுமை என்பது தனிமனிதப் பண்பு (He has an excellent personality) ஆகும். ஒருவருக்குத் தனித்தன்மை தரும் பண்புகளுள், தனிமனிதரின் சிறப்பியல்பு; தனிமனிதப் பண்பியல்புகளின் மொத்தத் தொகுதி; ஒருவரை அவர் நிலையில் இருக்கச் செய்யும் பண்புகள் பிரபலமானவர், பிரபலம்[2]

*என்று பொருள் தருகிறது. இத்தகைய பண்புகளுடன் தனித்தன்மையுடன் செயல்பட்டு வருகிறார் தோப்பில் முகமது மீரான்.*

**கலைக்களஞ்சியம் தரும் விளக்கம்**

*ஆளுமை என்பது அச்சம், சினம், பாலியல் ஆகிய இயல்பூக்கங்களை அடிப்படையாகக் கொண்டதாகும் என்பது நடத்தை கொள்கையினரின்* (Behaviourists) *கருத்தாகும்.*

*ஆளுமை என்பது ஒருவனது உடலமைப்பே என்றும், ஒருவனுடைய உடலமைப்பு அவன் வாழும் சமூகச் சூழ்நிலை ஆகியவற்றால் தன்மைக்குத்தக அமையும் இயல்புகளெல்லாம் ஒன்று சேர்ந்ததே என்றும், ஒருவனது இயல்பூக்கங்களும், உள்ளக் கிளர்ச்சிகளும் ஒருங்கே சேர்ந்தமைவதே என்றும் பாரம்பரிய இயல்புகளும்* (Hereditary Traits) *அனுபவத்தால் ஈட்டிய இயல்புகளும்* (Acquired Traits) *ஒருங்கே சேர்ந்தமைவதே*[3] *என்றும், பலவாறு ஆளுமைக் குறித்து கலைக்களஞ்சியம் விளக்கம் தருகின்றது.*

*தனிமனிதன் எதிர்கால வாழ்விற்காகத் தன் செயல் சிந்தனைகளை மாற்றி அமைத்துக் கொண்டு செயல்படுவதே இங்கு ஆளுமை எனப்படுகிறது.*

*சமுதாயத்தின் ஓர் அங்கமே மனிதன் ஆவான் என்பதினால்,*

1. *அதைச் சார்ந்த அறிவு*
2. *நம்பிக்கை*
3. *அறவாழ்க்கை*
4. *கூட்டம்*
5. *வழக்கங்கள்*

*மேற்கண்டவை வாழ்க்கை முறையாகிறது. ஓர் சமுதாயத்தில் வாழ்க்கை நடத்துகின்ற முறையே பண்பாடாகும். அத்தகைய பக்குவத்தின் புலப்பாடே*

*பண்பாடாக மலர்ந்துள்ளது. மானிட சமுதாயத்தின் புனிதத்துவமான உறவுமுறை வாழ்வியலுக்கான பண்பாட்டுக்கு இடனாக அமைகிறது.*

**உளவியலறிஞர்களின் கருத்து**

*ஜெர்மானிய உளவியலறிஞர்கள் ஆளுமை என்பது ஒரு நிலையானது* (Gestalt) *என்றும், அதைப் பல்வேறு இயல்புகளாவது என்று கருதுவது தவறு என்றும் கூறுகின்றனர். முழு நிலையுடைய ஆளுமையைத் தனிப்பட்ட இயல்புகளாகப் பிரித்தறிய இயலாது. இம்முறையானது குழலின் இசையை ஒவ்வொரு துவாரத்தினின்றும் எழும் நாதத்தை ஆராய்ந்து பிறகு அவற்றை எல்லாம் ஒன்று சேர்த்து அறிய முயல்வது போலாகும் என்கின்றனர். கடந்த காலத்து அனுபவத்தையும், தற்போதைய சூழ்நிலையையும் கொண்டே ஆளுமையை அறிய வேண்டும். மனிதனும் சூழ்நிலையையும் இணைத்த முழுநிலையே ஆளுமை என்பதாகும் என்பர்.*

*அமெரிக்க உளவியறிஞர்கள் ஆளுமை என்பது,*

> மனிதனுடைய பல்வேறு இயல்புகள் ஒன்று சேர்ந்ததே ஆகும் என்று கருதுகின்றார்கள். இந்த இயல்புகளில் சில பிறப்பாலும், மற்றவை சூழ்நிலையினாலும் ஏற்படுகின்றன[4]

*என்பது இவர்களின் பொதுவான விளக்கமாகும்.*

## ஆளுமைக் குறித்து அறிஞர்களின் கருத்து விளக்கங்கள்

**நாவா கருத்து**

> ஆளுமை என்ற சொல் பல்வேறு பொருள்களில் பயன்படுத்தப்படுகிறது. புற உலகை ஆராய்ந்து தனது கலைப் படைப்புக்குத் தேவையான புள்ளிகளைத் தேர்ந்தெடுப்பதையும் இவற்றை அழகியல் நோக்கில் பொருள் கொள்ளுவதையும், நான் ஆளுமை என்ற சொல்லின் வரையறையாக கொள்கின்றேன்[5]

*எனவும்,*

> ஆளுமை என்பது ஒரு மனிதன் பெற்றுள்ள, (1) உடல், (2) உள்ளப் பண்புகள், (3) மனநிலைகள், (4) சமூக அற நெறிப் பண்புகள் அனைத்தும் இணைந்து உருவாகும் ஒரு நிலையைக் குறிப்பதாகும் எனலாம்.[6]

**கில்ஃபோர்டி கருத்து**

> தனிநபரின் ஆளுமையானது அவனது தனிப்பட்ட உளப்பண்புகளின் அமைப்பாகும். ஒரு உளப்பண்பு என்பது ஒருவரை மற்றொருவரிடமிருந்து பல வழிகளில் வேறுபடுத்தியறிவதாகும்[7]

*என்கிறார்.*

**ஹார்ட்டேன் (Hoatman) கருத்து**

*தன்னைப் பிறரிடமிருந்து வேறுபடுத்தி அறிவதற்கான உள்ளார்ந்த ஊடுருவும் இயல்புகள் அனைத்தையும் இணைக்கும் ஒருங்கமைப்பே ஆளுமை எனச் சுட்டுகிறார்.*

**வாட்சன் (Watson) கருத்து**

> நம்பகமான தகவல்களைத் தருவதற்காக நெடுங்காலமாக உண்மையாக உற்றுநோக்குவதால் கண்டறியப்படும் ஒட்டுமொத்தச் செயல்பாடுகளின் தொகுப்பே ஆளுமை[8]

*என்று குறிப்பிடுகிறார்.*

**ஆல்போர்ட் கருத்து**

*ஒருவரின் பண்பான நடத்தை மற்றும் சிந்தனை ஆகியவற்றைத் தீர்மானிக்கின்ற அவரின் உளமாற்றம் உடல் சார்ந்த அமைப்புகளின் மாறக்கூடிய கட்டமைப்பே ஆளுமையாகும் என்று விளக்கம் தருகிறார்.*

**ஆளுமையின் கூறுகளும் சிறப்பும்**

*நடத்தை என்பது வேறானது. ஆளுமை என்பது வேறானதாகும். இவற்றுள் நடத்தை தனித்தன்மை வாய்ந்தது. ஆளுமையாவது தொடர்ந்து மாற்றங்களுக்கு உட்பட்டதாகும்.*

*மரபும், சூழ்நிலையும் மட்டுமே ஆளுமையைத் தீர்மானிக்கின்றன. இவை நடத்தை மற்றும் சிந்தனைகளின் வாயிலாக வெளிப்படுகின்றது.*

> மாற்றம் என்பது மானிடத் தத்துவம்
> மாறாதிருக்க யான் வனவிலங்கு அல்லேன் (கண்ணதாசன்)

*என்னும் கண்ணதாசன் தத்துவம் குறிப்பிடத்தக்கது. ஆளுமையின் அடிப்படையாக அமையும் சில இயல்புகள் இனங்காணப்படுகின்றன.*

1. *உளவியல், உடலியல் என்பவை சார்ந்து அமைதல்*
2. *நடத்தைகளையும், செயல்களையும் பாதித்தல்*
3. *பன்முக வெளிப்பாடு*

*மேற்கண்டவைகளின்வழி ஆளுமை என்பது ஒரு உளவியல் உருவாக்கம் ஆகும். ஆயினும் உடலியல் செயல்முறைகள் தேவைகள் போன்றவையும் இதைப் பாதிப்பதாக இருக்கும். ஒருவர் எவ்வாறு சூழலுக்கு ஏற்ப நடந்து கொள்கிறார் என்பது மட்டுமன்றி ஒரு குறிப்பிட்ட முறையில் அவர் நடந்து கொள்வதற்கும் அடிப்படைக் காரணமாகவும் அமைகின்றன. மேலும் ஆளுமை என்பது ஒருவருடைய நடத்தையின் வழியாக மட்டும் புலப்படுவதில்லை. அது அவருடைய, (1) எண்ணங்களும் ஓட்டங்களும், (2) உணர்வுகளும் தூண்டல்களும், (3) நெருக்கமான உறவுகளும் பிற சமுதாய தொடர்புகளும் போன்றவற்றின் வாயிலாக ஆளுமைத் தன்மை வெளிப்படுகின்றன.*

## ஆளுமையைக் கண்டறிதலும் அணுகுமுறைகளும்

*ஆளுமையின் அணுகுமுறைகளைப் பின்வருமாறு உளவியல் அறிஞர்கள் கருத்துப்படி அணுகலாம்.*






மேற்கண்ட அணுகுமுறைகளை வடஹிப்போகிரட்ஸ் வித்திடுகிறார்.




மேற்கண்ட கூறுகளை ஷெல்டன் என்னும் அறிஞர் உடல்வாகு அடிப்படையிலான ஆளுமைப் பதிவுகளாக விளக்குகிறார்.



'யுங்' எனும் அறிஞர் மேற்காணும் இருவகையில் அணுகுவதை அறியலாம்.

ஆளுமை என்பது பிறரிடமிருந்து நம்மை வேறுபடுத்திக் காட்டும் சிறப்பியல்புகள் என விளக்கப்படுகிறது.[9]




மேற்காணும் மூவகை பகுப்புகளில் ஆளுமைத் திறன் அமையும்.

## யூங்கின் ஆளுமை வகைக் கோட்பாட்டில் தோப்பில் முகமது மீரான்

ஆளுமையை யூங் புறமுகன் மற்றும் அகமுகன் என்னும் கருத்துக்களின் வழி வெளிப்படுத்துகின்றார். இவர் கருத்தின் உளச் செயல்பாடுகள் பின்வரும் வடிவங்களைப் பெறுகின்றன.




மேற்கண்டதில் சிந்தித்தலும் இரக்க சிந்தனையும் எதிரெதிர் பண்புகளைப் பெற்றுள்ளன. இவையிரண்டும் ஒரே தருணத்தில் தனி நபரிடையே இருக்கின்றன. அதே போல் புலனுணர்வும் உள்ளுணர்வும் எதிரெதிரானவை. இவையிரண்டும் தனிநபருள் ஒரே தருணத்தில் செயல்படுகின்றன.

## பொதுப்பண்பு நிலைகள் (புறமுகன்)

பொதுவாகப் புறமுகன்கள் பண்புகள் என்பவற்றைப் பின்வரும் நிலையில் குறிப்பிடலாம்.

1. பேச்சில் சரளம்
2. நட்பு பாராட்டுதல்
3. எளிதில் குழப்பமடையாதிருத்தல்
4. மனக்குழப்பம் மற்றும் சுயச்சார்பற்றிருத்தல்
5. தீவிர ஈடுபாடு
6. மக்களிடையே பிரபலமாயிருத்தல்

மேற்கண்டவை புறமுகனின் பொதுப்பண்புகள் ஆகும்.

## பொதுப்பண்பு நிலைகள் (அகமுகன்)

அகமுகனின் பொதுவான பண்பு நிலைகள் என்பனவற்றைப் பின்வருமாறு பகுக்கலாம்.

1. சிறப்பாக எழுதுதல்
2. நூல்கள் மீது அதிக ஈடுபாடு கொள்ளுதல்
3. கவனமாயிருத்தல்

போன்றவை அகமுகனின் பொதுப்பண்புகள் ஆகும்.

## தோப்பில் முகமது மீரானின் ஐவகைப் பண்பு நிலைகள்

தோப்பில் முகமது மீரானின் பண்பினை அவரது படைப்புகளின்வழி வகைப்படுத்தலாம்.

1. சமூகத்திடம் நற்பேர், நற்புகழ் பெறுதல்
2. சமுதாயத்தின் தொடர்பை மிகைப்படுத்துதல்
3. நல்ல நுண்ணறிவோடு கூடிய நடத்தை
4. அனைத்து வகை கல்விசார் செயல்களிலும் ஈடுபட்டிருத்தல்
5. தலைமைப் பண்புகளைப் பெற்றிருத்தல்

மேற்காணும் ஐந்து பண்பு நிலைகள் தோப்பில் முகமது மீரானிடத்தில் மேலோங்கி நிற்கின்றன.

## ஒப்புமை நோக்கில் ஸ்ப்ராங்கர் - முகமது மீரான்

ஜெர்மானிய நாட்டு தத்துவஞானியான எட்வர்டு ஸப்ராங்கசின் மனித உயிர்களை நாட்டங்கள் அல்லது மதிப்புகள் அடிப்படையில் பின்வரும் ஆறு நிலைகளில் வகைப்படுத்துகிறார்.

1. சமூகச் சார்புடையவர்
2. அரசியல் சார்புடையவர்
3. கொள்கை சார்ந்தவர்கள்
4. பொருள் சார்ந்தவர்கள்
5. அழகுணர்வு சார்ந்தவர்கள்
6. மதம் சார்ந்தவர்கள்

மேற்காணும் ஆறு மதிப்பீடுகள் கண்டறியப்பட்டுள்ளன. அவற்றுள் அழகுணர்வு, மதம் சார்ந்தவராக முகமது மீரான் திகழ்வது குறிப்பிடத்தக்கது.

உளவியலறிஞர்கள் ஆளுமையின் பொருளையும், இயல்பையும் பயில பல்வகை ஆளுமைக் கோட்பாடுகளை உருவாக்கியுள்ளனர். சான்றாக,

1. வகைப்பாட்டு அணுகுமுறை
2. உளப்பண்புக்கூறு அணுகுமுறை
3. வகைப்பாட்டு மற்றும் உளப்பண்புக்கூறு அணுகுமுறை
4. உளப்பகுப்பாய்வு அணுகுமுறை

மேற்காணும் நால்வகை அணுகுமுறைகளில் ஆளுமைக் கோட்பாடுகள் விவாதிக்கப்பட்டுள்ளன. மேற்காணும் நான்கு முறைகளிலும் முகமது மீரானின் ஆளுமைத் திறன்கள் மதிப்பீடு செய்யப்படுகின்றன.

## தலைமைப் பண்பு நோக்கில் முகமது மீரான்

> தலைமைப் பண்பு என்பது ஊக்கமளிக்கும், வழிநடத்தும் வழிகாட்டும் அல்லது பிறரை மேலாண்மை செய்யும் திறன் மற்றும் தயார் நிலை[10]

என்னும் விளக்கத்தைக் ‘குட்’ என்ற கல்வி அகராதி சுட்டுகிறது. அத்தகைய தலைமைப் பண்பை தோப்பில் முகமது மீரான் பெற்றுத் திகழ்கிறார். காரணம் சிறந்த தலைமைப் பண்பு அவரது வாழ்வில் சிறந்தப் புகழைப் பெற்றுத் தருவனவற்றின் வாயிலாகப் புலப்படுகிறது. தலைமைப் பண்புகள் இரு வகைப்படும்.

1. சர்வாதிகாரத் தலைமைப் பண்பு
2. மக்களாட்சித் தலைமைப் பண்பு

தலைவரின் சர்வாதிகாரப் போக்கினை அடிப்படையாகக் கொண்டதாகும். மனிதத் தொடர்புகள் மற்றும் குழு முடிவுகளுக்கு முக்கியத்துவம் அளிப்பதாகும்.

மேற்கண்டதில் முகமது மீரான் மக்களாட்சித் தலைமைப் பண்பைப் பெற்றிருக்கிறார். இவ்வகைத் தலைவர்கள் தங்களது சிந்தனை, உணர்வு, செயல்படும் விதம் மற்றும் நடத்தையில் மக்களாட்சித் தன்மையை மிளிரச் செய்து விடுகின்றனர்.




தோப்பில் முகமது மீரான் தமிழ் மலையாள எழுத்தாளர் ஆவார். இவர் 1997 ஆம் ஆண்டில் தமிழுக்கான சாகித்ய அகாதெமி விருது பெற்றது, தமிழ்நாடு கலை இலக்கிய பெருமன்ற விருது, இலக்கியச் சிந்தனை விருது, வில்லி தேவசிகாமணி விருது, தமிழக அரசு விருது, அமுதன் அடிகள் விருது, தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் விருது, இன்ன பிறவற்றையும் இவருடைய எழுத்தாளுமைக்கு சான்றாகக் குறிப்பிடலாம்.

## ஒருமைப்பாடு, ஆளுமைத் திறன் கொண்ட முகமது மீரான்

ஆல்போர்ட் என்னும் அறிஞர் ஒருமைப்பாடுடைய ஆளுமை கொண்ட ஒரு தனிநபர் இருவகை ஆளுமைப் பண்புகளை பெற்றிருப்பார் என்பார்.




*"ஒரு புறச்சார்பின்றி தன்னையே மதிப்பிடும் திறன்"[11] என்பது சுய புறவயத் தன்மையாகும்.*

> தெளிவான வாழ்க்கை மதிப்புகளைப் பெற்றிருத்தல் மற்றும் அவர்களது ஆளுமையின் மீது நம்பிக்கைக் கொண்டிருத்தல் மற்றும் அத்தகைய மதிப்புகளின் மீது அளவுக்கு அதிகமான நம்பிக்கைக் கொண்டிருத்தல்[12]

*என்பது சுயநீட்சி தன்மையாகும்.*

*மேற்காணும் இரண்டு பண்புகளையும் முகமது மீரான் ஒருங்கே பெற்றுள்ளார். இதனை இவர் வாழ்வியலிலிருந்து பெறமுடிகிறது.*

*ஒருமைப்பாடு ஆளுமைப் பண்புகளை 'ஸ்கின்னர்' வகைப்படுத்துகிறார். ஒருமைப்பாடுடைய ஆளுமையுடையோரின் பண்புகள் முகமது மீரானுக்குப் பொருந்துகிறது. அவற்றைக் கீழ்க்காணும் முறையில் வகைப்படுத்தலாம்.*

1. *எண்ணங்கள் மற்றும் நினைவுகள்.*
2. *ஒருங்கிசைவான வளர்ச்சி.*
3. *ஆற்றல்கள்.*
4. *திறன்கள்.*
5. *ஒருவரது திறனில் நம்பிக்கை.*
6. *ஒருவரது திறமையின்மைப் பற்றிய விழிப்புணர்வு.*
7. *தமது திறமைகண் வரையறைகளைத் தெரிந்து வைத்திருத்தல்.*
8. *மகிழ்ச்சியுடையவராயிருத்தல்.*
9. *ஆக்கவளம் உடையவராயிருத்தல்.*
10. *மனவெழுச்சி முதிர்ச்சி பெற்றிருத்தல்.*
11. *எந்த சூழ்நிலையிலும் நிலையான தற்கருத்துப் பெற்றிருத்தல்.*
12. *சமூக முதிர்ச்சி பெற்றிருத்தல் மற்றும் நண்பர்களைப் பெற்றிருத்தல்.*
13. *எளிதாகப் பிரச்சினைகளைத் தீர்த்தல் (குடும்பம், பணி, சமூகம்).*

14. அனைத்துச் செயல்களிலும் தமது நுண்ணறிவை நடைமுறையில் செயல்படுத்துதல்.
15. தமது சூழ்நிலையோடு இணக்கம் பெற்றிருத்தல்.
16. எந்தவித ஒரு புறச்சார்பின்றி புறவயத் தன்மையோடு தன்னைப் பார்த்தல்.
17. நல்ல தொலைநோக்குப் பார்வையோடு நீண்ட கால இலக்குகளை அமைத்துக் கொள்ளுதல்.
18. வாழ்க்கையைப் பொருளுடையதாகச் செய்யும் வாழ்க்கைத் தத்துவத்தை வளர்த்துக் கொள்ளுதல்

போன்றவைகள் ஆகும்.

**முகமதுமீரானின் ஆளுமைத்திறன்**

ஆளுமை என்பது ஒரு மனிதனின் குணநலன் சார்ந்த மதிப்பீடே ஆகும். ஒரு மனிதன் தன்னை மாற்றிக் கொள்ளும் செயல்பாட்டில் முக்கியப் பங்கு வகிப்பவை, நடத்தை, தகவல் தொடர்பு திறன், பிறருடனான உறவு, சிறப்பான வகையில் மனித உறவுகளைக் கையாளுதல் என்பவைகளாகும். இவை போன்ற பல்வேறு பண்புகள் மற்றும் திறன்களை மேம்படுத்துவதுதான் ஆளுமைத்திறன் மேம்பாடு (Pwersonality Development) எனப்படுகிறது. இவ்வாறான ஆளுமைத் திறன் மேம்பாட்டில் தோப்பில் முகமது மீரான் தனித்துவம் பெற்று விளங்குகிறார்.

ஆளுமைத்திறன் என்பது ஒருவனுடைய செயலால் அல்லது சிந்தனையின் தாக்கத்தால் பிறரிடம் ஏற்படும் பாதிப்பைக் குறிக்கிறது. இவற்றின் அடிப்படையில் ஆழ்ந்த தெளிவான மற்றும் கூர்மையான மனநிலை உள்ளவரின் ஆளுமை பிறரிடம் பாதிப்பை அல்லது தாக்கத்தினை ஏற்படுத்துகிறது. குறிப்பாக சுவாமி விவேகானந்தர், மகாத்மா காந்தி போன்றோரைக் குறிப்பிடலாம். தனிமனிதனின் ஆளுமைப் பண்பும், திறனும் அவன் வாழ்க்கையை மாற்றி அமைக்கின்றன.

> ஒரு மனிதன் தன் பாரம்பரியத்தினாலும் சூழ்நிலையினாலும் பெற்றுள்ள உள்ளார்ந்த மனப்போக்குகள் உளத்துடிப்புகள், செயல்முறைகள், உடல் வேட்கைகள் மற்றும் இயல் பூக்கம் ஆகியவற்றின் தொகுப்பே அவனது ஆளுமையாகும்.[13]

பிறரை ஒப்பிடும் போது பண்பிலோ திறனிலோ மிக தனித்துவம் பெற்று சிறந்து விளங்குபவனை சிறந்த ஆளுமைத் திறன் உடையவன் எனலாம்.

மேற்கண்டவாறு வெளிப்படக்கூடிய ஆளுமைத் திறனானது முற்றிலும் படைப்பாளனுக்கு படைப்பாளன், மனிதனுக்கு மனிதன் ஒப்புமைப்படுத்தினால் வேறுபடுவதாய் அமைகிறது. தோப்பில் முகமது மீரானும் தம்முடைய படைப்புகளில் படைப்பு ஆளுமைத் திறன்களைப் புலப்படுத்தியுள்ளார்.

## முகமது மீரானும் ஆளுமைக் காரணிகளும்

ஆளுமைக் காரணிகளைப் பின்வரும் நிலையில் வகைப்படுத்தலாம்.




மேற்காணும் பகுப்புகளைக் கொண்டு முகமது மீரானின் ஆளுமைத் திறன்களை ஆராய்ந்து அறியமுடிகிறது.

*பின்வரும் வகைகளில் ஆளுமைத் திறன்களைப் பகுத்து வகைப்படுத்தலாம்.*




அருமை உடைத்தென்று அசாவாமை வேண்டும்

பெருமை முயற்சி தரும்[14]

*மேற்காணும் திருவள்ளுவரின் குறளுக்கு ஏற்ப முகமது மீரானின் ஆளுமைத் திறனை அணுகலாம்.*

## தனிமனிதர் நோக்கில் முகமது மீரானின் ஆளுமை

*தன் மீது ஓர் அக்கறை, நம்பிக்கை ஆகிய குணங்கள் இணைந்து இருப்பதுதான் தனிநபர் ஆளுமை ஆகும். இவ்வாளுமையைப் பற்றி ஜே.ஆர்.பாட்டி என்பவர்,*

> தன்னைப் பற்றி ஒரு நபர் கொண்டுள்ள எண்ணமே, உண்மையான தனிநபர் நிலை, தான் எப்படி இருக்க வேண்டும் என்ற விருப்பத்தைக் காட்டுவதே விருப்பத்திற்குரிய தனிநபர் நிலை[15]

*என்கிறார். ஆகவே ஆளுமையை மேம்படுத்தும் நிலையில் தன்னுடைய விருப்பமும், சமூகத்தின் விருப்பமும் தேவையும் ஒன்றாக இருக்கும்படி அவர் பார்த்துக் கொள்ளுதல் வேண்டும். மேலும் சமூகத்தின் எதிர்பார்ப்புகளைச் சரியாகப் புரிந்து கொண்டு அதற்கேற்றவாறு ஒவ்வொருவரும் தன்னால் செதுக்கிக் கொள்ள வேண்டும்.*

> பல கதைகள் ஆங்கிலம் உட்பட பல இந்திய மொழிகளில் வெளிவந்துள்ளன. மலையாளத்தில் மொழிபெயர்க்கப்பட்ட என் கதைகளின் தொகுப்பு அனந்த சயனம் காலனி எனும் தலைப்பில் கோழிக்கோடு பூர்ணா பப்ளிகேசன் வெளியிட்டிருக்கிறது. பிறமொழி வாசகர்களை என் கதைகள் ஈர்த்துக் கொண்டிருப்பது எனக்கு மனப்பூரிப்பைத் தருகிறது[16]

*என படைப்பாசிரியர் முகமது மீரானின் கூற்று அவரின் ஆளுமைத் திறனுக்குச் சான்றாக அமைகிறது.*

ஒரு பெரிய பளுவைத் தூக்கிக் கொண்டு கற்களும் முட்களும் நிறைந்த காட்டு வழியாக இந்த வாழ்வில் நான் தனியனாக நடந்து செல்கிறேன். இல்லை ஊர்ந்து செல்கிறேன்.[17]

*தனிமனிதனின் வாழ்க்கை சமுதாயத்தில் எப்படிப்பட்டது என்பதையும், உடலும் தனிமனிதன் எதிர் கொள்ளும் சிக்கல்களைத் தாங்கும் திறனையும் விளக்குகிறார்.*

*பாம்பைப் போல, அரணையைப் போல, அட்டையைப் போல, துணையில்லாமல் செல்கிறேன் என்றும் இத்தகைய சூழலை எதிர்கொள்ளும் ஆற்றல்களையும் தன் படைப்புகளின் வழி விளக்குகிறார்.*

உலகம் ஆழ்ந்த நித்திரையில் மூழ்கிக் கிடந்தது. உருண்டு, புரண்டு வேண்டுமென்றே உறக்கத்தை வரவழைக்க முற்பட்டேன், என்னால் முடியவில்லை நெஞ்சில். அவ்வளவு சுமை . . .[18]

*உலகம் எவ்வளவு பெரியது அதில் வாழ்க்கைப் போராட்டம் எத்தனை சிரமமானது. அவற்றில் தனிமனிதன் எவ்வளவு போராடி வெற்றிப் பெறுதல் வேண்டும். வாழ்க்கையையும், திறனையும் எவ்வாறு வென்றெடுக்க வேண்டும் என்று 'நரகம் பூமியில்' என்னும் கதையில் சுட்டுகிறார்.*

சமுதாயத்தை எதிர்த்துச் சவாலாக வாழ்வேன். சமுதாயத்தை நான் பழி சொல்வதாகத் தப்பெண்ணம் கொள்ள வேண்டாம்.
என்னையும் உன்னையும் போலுள்ள மொத்த எண்ணிக்கை கொண்டதே சமுதாயம்.
சமுதாயத்தை முன்னேறச் செய்ய வேண்டுமானால் தனிநபர்களையும் முன்னேறச் செய்ய வேண்டும்.
மனிதனைக் காலம் காக்காது. மனிதன் காலத்தைக் காத்து நிற்பான். எனக்குப் பதில் கிடைக்கவில்லை. பதில் தராமல் சமுதாயம் மௌனம் சாதிக்கின்றது. என்னுடைய இந்தக் கேள்விக்கு நானே ஒரு பதில் கண்டிருக்கிறேன்.[19]

*மேற்கண்டவை மூலம் ஆளுமை என்பது நாம் யார் என்பதைப் பற்றிச் சொல்லத் தனித்திறமைகள் என்றில்லாமல் ஒட்டுமொத்தமாக நம்மை அடையாளப்படுத்தக் கூடிய அம்சம், படிப்பும், பல்வகைத் திறன்களும் உள்ள ஒருவர் சிறந்த ஆளுமையை விளக்குவார். அதற்கு எத்தகைய உத்தரவாதமும் இல்லை எனலாம்.*

*இந்த ஆளுமைத் திறன்தான் சாதாரண மனிதர்களையும், தலைவர்களையும் பிரிக்கிறது. சாமானிய நபர்களையும் சமூகத்தையே மாற்றக்கூடிய வலிமை படைத்தவர்களையும் வேறுபடுத்துகிறது.*

*ஒருவர் வலுவான ஆளுமையாக விளங்க என்ன செய்ய வேண்டும். இதைப் பல விதமாக விளக்கலாம். சான்றாக ஒரு கோணத்தை எடுத்துக் கொள்ளலாம்.*

> நம்முடைய சமுதாயத்தின் மேல் மட்டத்திலுள்ளவர்கள் அதை மறந்து விட்டார்கள்.
> அவர்கள் ஓட்டைப் பாத்திரத்தில் தண்ணீர் நிறைத்துக் காட்ட முயல்கிறார்கள்.
> நாங்கள் சமுதாயப் பாத்திரத்தின் ஓட்டைகளாக இருக்கும் போது எப்படி தண்ணீரை நிறைக்க முடியும் ?[20]
> பலவகைச் செருப்புகளைக் கனவு கண்டேன். செருப்பு அணிந்து கொண்டு நடக்கும் என்னை வழி நெடுகிலும் பார்த்துக் கொள்ளும் மக்கள் அவர்களின் பொறாமை நிறைந்த பார்வை . . .[21]
> எனக்குப் பயித்தியமில்லே. இதுதான் உலகம். அழுபவனைக் கண்டு அனுதாபப்படுபவனும் பயித்தியம், சிரிப்பவனைக் கண்டு ஆனந்தப்படுபவனும் பயித்தியம் . . .[22]

*மேற்கண்டதில் எதிர்பாராத சூழ்நிலையை எதிர்கொள்வதும், அதில் எதிர்பாராத சூழல் எழும்போது அதை எவ்வாறு கையாள்கிறோம் என்பதைப் பொறுத்து தனிநபர் ஆளுமைத் திறன் எடுத்துக் காட்டப்படுகிறது.*

*நானும் பள்ளிக்குச் செல்லும் போதெல்லாம் எதற்காப் படிக்கிறோம் எனப் புரியாமல் தான் படித்து வந்தேன். அன்று சுடப்பட்ட போதுதான் கல்வியின் அர்த்தம் ஆணி அடித்தாற்போலப் புரிந்தது. பெண் கல்வி இத்தனை பேரைப் பதற்றம் கொள்ளச் செய்கிறது. என்றால் அது எத்தகைய பலத்தைத் தரவல்லது என்பது புரிந்தது. ஆனால் அன்று என்னைச் சுட்டவர் ஒரு தவறு செய்துவிட்டார். என்னைச் சுட்டு என்னுள் இருந்த பயத்தை முழுவதுமாகக் கொன்றுவிட்டார். இனி சாவைக் கண்டு எனக்கும் பயம் இல்லை. இந்தப் போராட்டத்தை நான் ஒரு போதும் விட்டுக் கொடுக்கப் போவதில்லை. ஒருநாள் வரும், அன்று அனைத்துக்*

குழந்தைகளும் ஆணோ, பெண்ணோ, கறுப்போ, வெள்ளையோ, கிறிஸ்தவரோ, இஸ்லாமியரோ பள்ளிக்கு நிச்சயம் செல்வார்கள்.

இன்னொரு குரலையும் கேளுங்கள், இது ஜனநாயக நாடு, ஜனநாயகதில் சமத்துவத்துக்கான உரிமை எல்லோருக்கும் இருக்கிறது. ஒரு மாணவரோ ஒரு ஏழையோ ஒரு தொழிலாளியோ அம்பானியோ அதானியோ யாராக இருந்தாலும் சரி அனைவருக்கும் சமமான உரிமைகள் உள்ளன. வன்முறைக்கான விளக்கம் இல்லாமல் வன்முறையை எப்படிப் புரிந்து கொள்வது துப்பாக்கியால் சுட்டு மனிதர்களைக் கொல்வது மட்டும் வன்முறை அல்ல. ஒடுக்கப்பட்ட சமூகத்தினருக்கு அரசியலமைப்புச் சட்டம் உத்தி, வாதம் தந்திருக்கும் உரிமைகளை ஜே.என்.யூ. நிர்வாகம் மறுக்குமானால் அதற்குப் பொருள் வன்முறைதான்.

முதலாவது பெண் குழந்தைகளின் கல்வி உரிமைக்காகப் போராடி வரும் பாகிஸ்தானி சிறுமி மலாலாவின் குரல். இரண்டாவது, ஜவஹர்லால் நேரு பல்கலைக்கழகத்தின் மாணவ அமைப்பின் தலைவர் கண்ணையா குமார் பேசியது. மேற்கண்ட சிந்தனை தனிமனித சமூக ஆளுமையைப் பதிவு செய்கிறது என்பதை சமூக நோக்கில் ஒப்புநோக்கலாம்.

**உடல் சார்ந்த ஆளுமை**

ஒருவனது பண்புகளைக் குறிக்கும் வெளித்தோற்றம் என்று பண்டைக் காலத்தில் பொருள் தந்தது. ஆனால் இன்று ஆளுமை என்ற சொல் வழக்காற்றில் பொருள் தந்தது. ஆனால் இன்று ஆளுமை என்பது ஒருவரிடம் காணப்படும் உடற்கவர்ச்சியின் அளவு என்று பலர் எண்ணுகின்றனர். பிறரைக் காட்டிலும் குறிப்பிட்ட ஒரு பண்பிலோ திறனிலோ மிகச் சிறந்து விளங்குபவனை 'சிறந்த ஆளுமை உடையோன்' என்கிறோம். உளவியல் ஆளுமை எனும் சொல் மிகப் பரந்த பொருளுடையதாகும் என்பர்.

Personality - முகமது மீரான் : ஒப்புகை.

P - என்பது புலன் காட்சியை அறியும் ஆற்றல்

E - என்பது மனஎழுச்சியின் முதிர்ச்சி

R - என்பது சூழ்நிலைக்கேற்ற இணக்கம்

S - என்பது சமூக உறவு

O - என்பது உண்மை

N - என்பது நடுநிலை

A - என்பது வெளித்தோற்றம்

L - என்பது தலைமைப் பண்பு

I - என்பது ஒருங்கிணைந்த பண்பு

T - என்பது மனோபாவம்

Y - என்பது இளமை

'Personality' என்னும் ஆங்கிலச் சொல்லின் ஒவ்வொரு எழுத்தும் ஆளுமையை மேற்கண்டவாறு சுட்டுகிறது. இவற்றை பேராசிரியர் மீனாட்சி சுந்தரம் குறிப்பிடுகிறார். இத்தகைய ஆளுமைத் தன்மைகளைச் சிறப்புற பெற்று முகமது மீரான் தனித்துவத்துடன் திகழ்கிறார்.

மேற்கண்ட ஒப்புமைகளுள் முகமது மீரான் தனித்துவத்துடன் திகழ்கிறர் என்பதை அவருடைய ஆளுமைகளின்வழி மெய்ப்பிக்கலாம்.

## புலன்வழி அறியும் ஆற்றல்

ஐம்புலன்களின்வழி அறியும் புலன்காட்சிகளை எடுத்துக் காட்டும் ஆளுமை நெறிகளை எடுத்துக்காட்டுகிறது.

1. மெய்
2. கண்
3. வாய்
4. மூக்கு
5. செவி

அத்தகைய ஐம்பொறிகள் வழியாக அறியும் ஆற்றல்களை உய்த்துணர்வதாகும்.

> கிழவர் நம்மிடமிருந்த பொட்டலத்தை நீட்டினார். நான் அதைச் செமந்திட்டு வாறேன் . . . (மெய்)[23]

> வெறும் கையும் தீராத நோயுமாக இப்படி ஊர் திரும்புவதற்காகவோ அன்று அத்தனைத் துயரங்கள் அனுபவித்தது? நினைத்த போது கண்ணீர் பொங்கிற்று. நான் எங்கு செல்கிறோனோ? மறந்து போன பிறந்த

ஊருக்குத்தான் போகிறோம் என்ற உண்மை தெரிந்த போது கண் குளமாகியது. மடையுடைத்துக் கரை தாண்டிப் பாய்ந்தது போல கண்ணீர் பெறுகிற்று (கண்)[24]

அவள் குடத்துடன் நடந்து வரும் போது குழந்தைகள் கூப்பாடு போடுவார்கள். (வாய்)[25]

உஸ்தாதின் குரலில் என்றுமில்லாத அன்பு . . . (வாய்)[26]

சொன்னேன் சொல்லிய போது ஒரு காரைமுள் முனை என் இதயத்தில் துளைத்து ஏறியது. மகிழ்ச்சியால் ஒரே ஒரு பாட்டை முனகிக் கொண்டே என் மகன் படுக்கையில் வீழ்ந்தான் . . . (மெய், வாய்)[27]

காறித் துப்பி மூக்கைப் பொத்தாத நாள் இல்லை (மூக்கு)[28]

மூச்சு நின்று விடுமோ என்று தோன்றியது (மூக்கு)[29]

ஓம வல்லி நின்றிருந்த தரையிலிருந்து ஒரு பிடி மணலை அள்ளினேன். முகர்ந்து பார்த்தேன். ஓமவல்லியின் வாசனை நிறைந்த மண் இந்த வாசனை . . . (மூக்கு)[30]

சுவரிலிருந்த கடிகார நாக்கு டிக் டிக் டிக் . . . என்று குரல் எழுப்பியது. அந்தக்குரல் மலுக்கு முஹம்மதுடைய மகனின் காதில் வெடி முழக்கமாக ஒலித்தது (செவி)[31]

*மேற்கண்டதில் ஐம்பொதிகளின் பயன்பாட்டை அனைத்துப் படைப்புகளிலும் ஆளுமைப்படுத்தியுள்ளார்.*

**மன எழுச்சியும் சூழ்நிலைக்கேற்ற இனக்கமும்**

*மனம் என்னும் சொல்லுக்குச் சிந்தை, சித்தம், உணர்வு, உள்ளம், நெஞ்சம், அகம் என்னும் வேறு சொற்களும் இணையாகும். இதற்கு இன்னும் கொஞ்சம் விளக்கமாக ச.வே.சுப்பிரமணியன் குறிப்பிட்டுள்ளதை,*

மனம் என்பது நுண் உடம்பு, மனம் என்பதற்கு உள்ளம், நெஞ்சு, அகம், சிந்தை, சித்தம், இதயம் போன்றவை யெனினும் மனத்தின் கிளைகளாக நெஞ்சு, உள்ளம், சிந்தை போன்றவை செயல்படுகின்றன[32]

*என்பதனால் அறியலாம்.*

*சிந்திப்பதால் சிந்தை என்றும், நிர்ணயிப்பதால் சித்தம் என்றும், உணர்ந்து கொள்வதால் உணர்வு என்றும், உள்ளுக்குள் இருப்பதால் உள்ளம் என்றும் சொல்லப்படுகிறது என்பார் முல்லை பி.எல்.முத்தையா.*

*மனம் மூன்று நிலைகளிலிருந்து செயல்படுவதாக உளவியல் அறிஞர் சிக்மண்ட் ஃப்ராய்டு கூறியுள்ளார். அவை,*

1. *ஆசை மனம்* (ID)
2. *அகந்தை மனம்* (Ego)
3. *தாய் மனம்* (Super ego)
4. *எரிக்பேரின் குழந்தை மனம்* (Child ego)
5. *பகுத்தாய்வு மனம்* (Adult ego)
6. *தாய் மனம்* (Parent ego)

*அதாவது ஆசை மனம்* ID *என்றும், அகந்தை மனம் ஈகோ என்றும், தாய் மனம் சூப்பர் ஈகோ என்பனவாகும். எரிக்பேரின் குழந்தை மனம், பகுத்தாய்வு மனம், தாய் மனம் என்னும் மூன்று நிலைகளிலிருந்து மனம் செயல்படுவதாகக் கூறியுள்ளார்.*

> அன்று மூக்கில் விரல் வைத்து நின்ற மம்மேராவின் உருவம் தான் ஆபிதாவின் மனத்தில் தோன்றியது . . .[33]

*இதில் ஆசை மனம் எடுத்தாளப்படுகிறது.*

> அடுத்த வீட்டில் ஒண்ணு மூத்து நரைத்திருக்கிறது. அது பெருமூச்சு விடும். இம்மாதிரிப்பட்டவளின் ஏக்கப் பெருமூச்சில் என் மகளின் வாழ்க்கை நாசமாகப் போய்விடும் அதனால் தான் . . .[34]

*என்பதில் தாய் மனம் எடுத்தாளப்பட்டுள்ளது.*

> ஸ்பியா உணர்ச்சியைக் கட்டுப்படுத்தி நின்றாள். மகனை அருகில் பிடித்து நிறுத்தி அவன் தலைமுடியைக் கையாள் கோதினாள். ஹமீதின் கன்னத்தில் குனிந்து முத்தமிட்டாள். அந்தக் கன்னத்தில் கண்ணீரின் சூடு தட்டுப்பட்டது . . .[35]

*என்பதிலும்,*

> ‘‘உம்மா எதற்கு அழ வேண்டும் ?’’
>
> ‘‘அழல்லே, சிரிக்கிறேன்’’

அவள் சிரிப்பை நடித்துக் காட்டினாள். மழை பெய்து கொண்டிருக்கும் போது தோன்றி மறையும் சந்திரனைப் போல . . .[36]

*மேற்கண்டதில் குழந்தை மனம், தாய் மனம் பற்றிய நெகிழும் ஆளுமைப் பதிவை எடுத்துணர்த்துகிறார்.*

இப்படியான எதிர்வினைகளையெல்லாம் கண்ட போழ்து உறையை வெளியே வீச மனம் ஒப்பவில்லை. கூட்டிலுள்ள நெளிவு சுளிவுகளை எடுத்துச் சோப்பு வடிவத்தில் கூட்டைச் சரி செய்து காட்சிப் பொருள்கள் இல்லாத, கண்ணாடி உடைந்து போன ஷோக்கேசில் பத்திரப்படுத்தினேன். வெளிநாட்டுச் சோப்பின் உடலில் ஒட்டியிருந்த உறையையாவது முகர்ந்து கொண்டிருக்கலாம் என்ற சின்ன ஆசை . . .[37]

*என்பதில் ஆசை மனம் பற்றிய ஆளுமைப் புலப்பாட்டை உணர்த்துகிறார்.*

*'உள் வனம்' என்னும் கதையில் பகுத்தாய்வு மற்றும் ஆசை மனம் பற்றிய ஆளுமைப் பதிவுகளை எடுத்தாள்கிறார்.*

இந்தக் கேள்விக்குப் பிறகுதான் ஒரு தனித்த பயணி என்ற தெளிவு ஏற்பட்டது . . . தானாகச் சிறுமைப்பட்டுப் போன ஒரு தாழ்வு உணர்வுக்குள் புதையுண்டு போனேன். எதையும் நினைக்காமலும் எதற்கும் மனசிற்குள் புகுந்து பரவ இடமளிக்காமலும் மனத்தை குறுக்கிக் கொள்ள முயன்றேன் . . . அவள் என்னுடன் ஒட்டிப் படுத்துக் கொண்டு எனக்குச் சிறு வெதுவெதுப்பைப் பகிர்ந்தாள்[38]

*என்ற கதைமாந்தர் படைப்பின்வழி மனத்தின் அகப்போராட்டங்களை உணர்த்துகிறார்.*

*'புதையல்' என்னும் கதையில் மனம் பற்றிய ஆசைகளை விளக்குகிறார்.*

மாதவனுடைய மகனின் புதிய தோற்றம் எனக்குள் பல ஆசைகளைக் கிளறியது. அன்பய்யனைப் போல பல நிறங்களில் நிக்கர் சட்டை அணிந்து நடக்க: கைவிரலில் தங்க மோதிரம் அணிய: உண்டைக் கல் தட்டி, கால் நகம் கழன்று போகாமலிருக்க செருப்புப் போட்டு நடக்க . . .[39]

*மேற்கண்டதில் 'கனவு ஆசை' பற்றிய ஆளுமைப் பதிவுகளைக் காணமுடிகிறது.*

மனத்தானாம் மாந்தர்க்கு உணர்ச்சி[40]

மநலம் மன்னுயிர்க்கு ஆக்கம்[41]

மனத்தொடு வாய்மை மொழியின்[42]

மேற்கண்ட வள்ளுவப் பெருந்தகையின் சிந்தனைகள் முகமது மீரானின் ஆளுமைத் திறனுடன் ஒப்புநோக்கதாகும்.

**சமூக உறவும் நடுநிலையும் பற்றிய ஆளுமைகள்**

காதல், கனவு, முதுமை, தாய், தந்தை, கிளை உறவுகள் சமுதாய நடவடிக்கைகளில் நடுவுநிலைமைக் குறித்த ஆளுமைகளில் முகமது மீரான் தனித்துவம் பெற்றுத் திகழ்கிறார்.

காதல் என்பது ஒருவரைக் கற்பனை உலகிற்கும், இன்ப உலகிற்கும் கொண்டு செல்கிறது. காதலிப்போர் சொந்தபந்தம் உறவுகள் சாதி, மதம், நன்மை, தீமை பற்றிக் கவலைப்படுவதில்லை. அவர்கட்கு என்று தனி உலகத்தை சிருட்டித்துக் கொள்வர். கனவுகளில் சஞ்சரிப்பர். எதிர்ப்புகளைப் பற்றிய கவலை காதலிப்போரிடையே இருப்பதில்லை. ஒருவன் ஒரு பெண்ணைத் திருமணத்திற்கு முன்பும், திருமணத்திற்குப் பின்பும் காதலிக்கலாம்.

கனவுகளென்பது ஆழ்மனத்தின் பிரதிபலிப்பு மனத்தின் முக்கிய பகுதி. எனவே ஒவ்வொரு மருந்தின் இறுதியிலும் கனவுகளையும் இணைத்துக் கொள்ள வேண்டும் என்பது என் அறிவுரை என்கின்றார் டாக்டர் இராஜன் சங்கர்.

கனவுகள் பலவகைப்படும் இதைத்தான் கனவில் காண வேண்டும் என்பதனை யாராலும் வரையறுத்துச் சொல்ல இயலாது. உறவுகள் அடிப்படையிலும் நிகழ்காலம், எதிர்காலம், இறந்த காலம் பற்றியும் கனவுகள் சில சமயம் அமைந்து வருவதுண்டு. வாழ்வின் அடிப்படைத் தேவைகளை உருவாக்கித் தரும் நிலக்கனவு முதன்மையானதாகும. மேலும் பலரது கனவுகள், ஆசைகள், வாழ்வு, சாவு, உறவு எல்லாமாக மனதில் வாழ்ந்து நிலம் அமைந்து விடுவதால் நிலக்கனவு ஆழ்மனதில் இடம்பெற்றுள்ளதை ஆளுமையின்வழி கண்டறியலாம்.

> என்னிடமிருந்து இப்படி ஒரு ரசனை வார்த்தையை அவள் எதிர்பார்த்திருக்க மாட்டாள். சொன்னதன் முடிவிற்கு அவளுடைய புன்னகைப்பிற்கும் இடைப்பட்ட வினாடிகளில் என் ஈரல் கலங்கி விட்டிருந்தது. மனப்பூரிப்புடன் அதை வரவேற்றுப் புன்னகைத்த போது என் நரம்பு மண்டலத்தில் ஏதோ ஒரு

இன்ப உணர்ச்சியில் சுருதியைத் தூண்டிவிட்டது அந்த மயக்கும் புன்னகை![43]

*என்பதில் காதலின் மகத்துவம் அது கற்பனை உலகிற்கு அழைத்துச் செல்லும் பாங்குகளையும் ஆளுமைத் திறன் புலப்படுத்துகிறது.*

சகதியில் ஆங்காங்கே முளைத்த புல்களை மேய ஆடு மாடுகள் கொம்புக் குத்திச் சண்டைப் போட்டன.

கறுப்பன் பாறையிலிருந்து தண்ணீர், விழுந்து இனி ஏரி நிறையுமா ? ஏரிக்குத் தென்புறமுள்ள 3 போகம் விளைந்து கொண்டிருந்த கருகிவிட்ட வயலின் உடமை விவசாயத்திற்கு வாங்கிய கடன் தொல்லை தாங்காமல் உடலில் மண்ணெண்ணெய் ஊற்றிக் கொண்டு வயலுக்கு வைத்த தீ எரிந்து கொண்டிருந்தது.[44]

*மேற்கண்டதில் நிலக்கனவு பற்றிய ஆளுமைப் பதிவுகளை எடுத்துக்காட்டுகிறார்.*

அப்பாவும், அம்மாவும் உடம்பை மூடிக் கொண்டு குளிரிலிருந்து தற்காத்துக் கொள்ளக் கூனிக் குறுகி உட்கார்ந்து கொண்டு இருந்தனர் . . .[45]

*என்பதில் தாய், தந்தை பற்றிய ஆளுமைத் திறன்களை எடுத்தாள்கிறார்.*

ஈரத் தரையில் வீசி எறியப்பட்ட என்னைத் தூக்கி எடுத்துத் தட்டி வீடு வீடாகக் கொண்டு நடந்து தாய்ப்பால் ஊட்ட வைத்துப் பசி அடக்கி வளர்த்துவிட்ட மூத்தம்மாவின் அசைவுகளைக் கருக்கல் நேரம் அசை போட்டுக் கொண்டிருக்கையில் . . .[46]

*என்பதில் தாய், தந்தை மற்றும் கிளை உறவு நிலையும், அவர்களை மறக்காத நிலையோடு நடுநிலையோடு வாழ வேண்டுவதையும் காட்டுகிறார்.*

ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும் தன் மகனைச்
சான்றோன் எனக் கேட்டத் தாய்[47]

மகன் தந்தைக்காற்றும் உதவி இவன்தந்தை
என் நோற்றான் கொல் எனும் சொல்[48]

*என்னும் உலகப் பொதுமறையின் தத்துவம், முகமது மீரானின் பதிவுகளோடு ஒப்புநோக்கத்தக்கதாகும்.*

குணம்நாடி குற்றம் நாடி அவற்றுள்
மிகைநாடி மிக்கக் கொளல்[49]

*என்னும் பாங்கில் ஆளுமைத் திறன்களை கையாள்கிறார்.*

1. *உழைப்பவர் - முதலாளி*
2. *ஏழை - செல்வந்தர்*
3. *கோபம் - அமைதி*
4. *போராட்டம் - வெற்றி*
5. *உறவுநிலை - சிக்கல்கள்*
6. *தீயவர் - நல்லவர்*

*மேற்கண்ட பகுப்புகளில் நடுநிலைமை குறித்த ஆளுமைப் பதிவுகளை எடுத்துக் காட்டுகிறார்.*

> அலையாம அலைஞ்சேன், வேறென்ன செய்ய? அந்தப் பலசரக்குக் கடையிலே மசாலா வாடை சுவாசிச்சே இளமைப் பருவமும் நடுத்தரப் பருவமும் கடந்து போச்சு. இப்போது முதுமை இப்படியே . . .
> பாழ்பட்டுப் போன ஒரு வாழ்க்கைச் சோகத்தை கேட்டது போல் அவள் நின்றாள்[50]

> தங்க வயல் வாரி வழங்கிய செழுமையில், மக்கள் சில அனுபவ நினைவுகளை எளிதில் மறந்து விடுவதை நினைக்கும் போது வேதனையாகத்தான் இருக்கிறது. மகனிடமும் அவன் மனைவியிடமும் வந்த மாற்றங்களை எண்ணியபடி வீட்டுக்குள் சென்றார் . . .
> உடம்புக்கு ஏதாவது முடியாமையாக இருக்கும் போது மட்டும் அந்தக் கட்டிலில் போய்ப் படுத்துக் கொள்வது அவர் வழக்கம். ஒரு பெண் கை அவருடைய நெற்றியைத் தடவுவதை உணருவார். அந்த மென்மையான கர ஸ்பரிச வேளையில், அந்திம மூச்சை விட்டால் அவளுடைய மூச்சோடு கரைந்து அறையில் அவர் மூச்சும் நிரம்பி நிற்கும் . . .[51]

*மேற்கண்டதில் முதுமைக் குறித்த ஆளுமைத் திறன்களைச் சமுதாயத்திற்கு எடுத்துரைக்கிறார்.*

*முதுமையில் ஆசைகள் விடைபெற்று விரக்தியும் ஞானமும் வந்தெய்துகிறது என்பதனை உளவியல் ரீதியாக முகமது மீரான் சுட்டுகிறார்.*

*முதுமையில் பழைய நினைவுகளை அசைபோடுவர். ஞாபகங்களை மீண்டும் மீண்டும் அசை போடுவர். நினைவுகளை மனதில் தேக்கி வைப்பர். ஒவ்வொரு நோயாக முதுமையில் தலைகாட்டும். இளமையில் இருந்த*

*அழகெல்லாம் இழந்து பிறர் கேலி செய்யும் நிலையில் உடல் இருக்கும். முதுமையில் பல்வேறு உடல் மாற்றங்கள் அடைந்து விடும். இயலாமை, நிலையாமை ஆளுமையை எடுத்துக்காட்டுகிறார்.*

**மனோபாவம், இளமைக் குறித்த ஆளுமைப் பதிவுகள்**

*மன இயக்கங்களில் முக்கியமானது நினைவு. இது மன இயக்க மாறுபாடுகளில் இழப்பு நிலைக்கு வருவதுண்டு. மன இழப்பு நிலை மூவகையாகும்.*

1. *தன்னை மறந்த நிலை*
2. *இரட்டை வாழ்க்கை*
3. *துயில் நடை*

*மேற்காணும் மூவகையில் நினைவுகள் ஆராயப்படுகின்றன.*

*குறிப்பிட்ட நபர்களையோ பழகிய இடத்தையோ பிரியும் போது நினைவுகள் பிரிய மறுக்கும். பிரிந்து போகவும் வேண்டும், அதே சமயம் நினைவுகளை விட்டுப் போக மனம் மறுக்கும். வாழ்ந்தும் வாழாது போலவும் நிலை. இத்தகைய வாழ்வியலை முகமது மீரான் விவரித்துப் பேசுகிறார்.*

*மனித வாழ்வில் சிக்கல்கள் வரும் போது மன உளைச்சல் ஏற்பட்டு அதனை எதிர்கொள்ளும் நிலைகளையும் புலப்படுத்துகிறார்.*

> மூத்தம்மாவின் நொறுங்கிய இடுப்பு எலும்பைக் காலால் மிதித்துத் தடவிக் கட்டுப்போட்டு மல்லாக்கப் படுக்க வைத்துவிட்டு, தைலம் அப்பியிருந்த கை கால்களைக் கழுவிக் கொண்டிருக்கும் . . . ஆறு மாசம் இடுப்பை அசைக்காத, இப்படியே கெடக்கணும்.[52]
>
> அவனுடைய வீட்டிலிருந்த மூதாட்டி மரத்தடிக்குச் செல்லும் பாதை . . .[53]
>
> மரணம் திடீரென்று இருக்கவில்லை. சளி பிடித்து நெஞ்சை அடைத்துக் கொண்டதால் கொஞ்ச நாள் பாயை விட்டு எந்திரிக்கவே இல்லை. மூச்சுவிட முடியாமல் உயிருக்குப் போராடியபோது உறவினர்களுக்குத் தகவல் கொடுக்கப்பட்டது. . .[54]

*மேற்கண்டதில் மனோபாவம் குறித்த ஆளுமையை உணர்த்துகிறார்.*

ஆளுமைக்குக் கீழ்க்காணும் சிறப்பியல்புகள் கொண்டு விளங்குதல் வேண்டும்.

தன்னுணர்வுள்ள உயிரினங்கள் மட்டுமே ஆளுமை என்ற சொல்லைப் பயன்படுத்தமுடியும். இது சமூகச் சூழ்நிலையினால் உருவாக்கப்படுவதும் சமுதாயத்தில் ஒருவன் நடந்து கொள்ளும் விதமும் பற்றி எவ்வாறு நடந்து கொள்கிறான் என்பதைப் பொறுத்தே ஒருவனது ஆளுமை அமைகிறது. சூழ்நிலைக்குத் தக்கபடி சிறிதேனும் மாறும் தன்மையுடையது (Dynamic and flexible). ஆனால் இளகிய நிலைத் தன்மையுடையது அல்ல எனினும் தனித்துவம் பெற்றுள்ளதாகும். ஆளுமை, மரபுநிலை, சூழ்நிலை ஆகிய இரண்டின் வினைப்பயனாகும். ஆளுமை நடத்தைக்கு ஒருமைப்பாட்டையும் முரண்பாட்டினையும் தருகிறது. ஒருவன் எத்தகைய குறிக்கோள்களையும், வாழ்க்கையில் இலக்குகளையும் அடைய விழைகிறான் என்பதையும் பொறுத்து ஆளுமை அளவிடப்படக்கூடியதாக அமைகிறது.

## ஒருமைப்பாடுடைய ஆளுமையும் முகமது மீரானின் பங்களிப்பும்

ஒருமைப்பாடுடைய ஆளுமைப் பெற்ற ஒருவனது அறிவு, மனவெழுச்சிகள், செய்திறன்கள் என்னும் மூன்றும் சரிசம வளர்ச்சியுற்றிருக்கும். இத்தகையவன் அறிவும், சிந்தனைத் திறனும் பிறர்பால் அன்பும் பரிவுமுள்ள மனப்பக்குவப்போக்கும் நல்லொழுக்கம் கொண்டிருப்பான். ஒருவன் தனது தேவைகள் விருப்பங்கள் எதிர்பார்ப்புகள் ஆகியவற்றைச் சமூகம் ஏற்றுக் கொள்ளும் வகையில் நிறைவு செய்து கொள்ளும் திறமையே ஒருமைப்பாடுடைய ஆளுமை என்று ஹர்லாக் சுட்டுகிறார்.

ஹர்லாக் ஆளுமையின் முக்கிய பண்புகளையும், தோப்பில் முகமது மீரானின் பங்களிப்புகளையும் கீழ்க்காணும் நிலைகளில் இயைபுபடுத்தலாம்.

மகிழ்ச்சியானவர் (Being happy) மகிழ்ச்சியோடு காணப்படுவார். தன்னோடு இருப்பவர்களையும் மகிழ்ச்சியில் திளைக்கச் செய்யும் போக்குகளை கதைமாந்தர் படைப்புகளின்வழி எடுத்துக்காட்டுகிறார். தத்துவம் சார்ந்த வாழ்க்கை (Philosophy of life directed) தமக்கென்று வாழ்க்கையில் ஓர் உன்னத இலட்சியம், கொள்கை போன்றவற்றை சமய சிந்தனைகளில் (இஸ்லாத்) விளக்குகிறார். சமூகத்தின் ஏற்பாளராயிருத்தல் (Social acceptance) சமூகத்திலுள்ள

செயல்களில் நட்புணர்வோடு பங்கு பெறுவதால் சமூகத்தில் ஏற்புடையவராக குடும்பம் உறவுநிலைகள், அரசியல், கல்வி, பொருளாதாரச் சிந்தனைகளை எடுத்துரைப்பதன் வழி திகழ்கிறார்.

பிறர்மேல் அக்கறை (Outer-orientationi) தன்னைப் பற்றி அதிகம் அக்கறை கொள்ளாமல் மற்றவர் நலனில் சமூகம் அவற்றைச் சார்ந்த தீமைகளை ஒழித்து நன்னெறிப்படுத்த முயலுதல் போன்றவைகளையும் பெற்றுள்ளார். குறிக்கோளுடைய நடத்தை (Goal Orientation) இவர் தம்மால் வென்றடையும் குறிக்கோளுடன் உள்ளார் என்பதை சமுதாய முன்னேற்ற சிந்தனைகளையுடைய படைப்பாக்கத்தின்வழி தெரிய வருகிறது. மனவெழுச்சியில் முறையான கட்டுப்பாடு (Acceptable emotional control). இவர் தமது உணர்ச்சிகளைத் தம் கட்டுப்பாடுக்குள் வைத்துள்ளார். உணர்ச்சிகளின் கட்டுப்பாட்டுக்குள் விடுவதில்லை என்பது, பாத்திரப் படைப்பின் உளவியல் போக்குகளும் வரையறை மீறாத் தன்மைகளின் வாயிலாகவும் புலப்படுகின்றன. தற்சுதந்திரப் போக்கு (Autonomy) தனது செயலிலும், சிந்தனையிலும் பிறரைச் சாராத சுதந்திரப் போக்கினை, ஒருமுறைப் பாத்திரங்களின் வழி கையாளும் தனத்திறன்களைக் காணமுடிகிறது. பொறுப்புகளை ஏற்றல் (Acceptance of Responsibility) என்பதில் சமுதாய சிக்கல்களையும், தீர்வுகளையும் விவரித்து கூறுவதில் தன்னால் இயலும் அளவு பொறுப்புகளை ஏற்றுத் தானே செய்கிறார். பிறர் செய்யட்டும் என்று கருதாது தன்னுடைய செம்மாந்த பணிகளைப் புலப்படுத்தும் திறன் எடுத்துக்காட்டப்படுகின்றன. மேலும் பிரச்சனைகளைக் கண்டு அஞ்சாமை (Acceptance of reality) தான் ஓர் எழுத்தாளன் என்னும் நோக்கிலும், சமுதாய அவல நிலைகளையும், அவற்றிற்கானக் காரணங்களையும், சமுதாயத்தின் குற்றவாளிகளை இனங்கண்டு தன் படைப்பின்வழி அடையாளம் காட்டுவதிலும் சிறந்து விளங்குகிறார்.

**மொழிநடையும் உத்தியும்**

> நடை என்பது கருத்தை வெளிப்படுத்துவதற்கு உண்டான கருவி. ஒருவர் கையாளும் மொழி நடையே அவருக்கு இலக்கிய நடை எனலாம். எழுத்தாளனின் தனித்தன்மையை உணர்த்தவல்லது நடை[55]

என்னும் கூற்று மொழிநடையின் தேவையைப் புலப்படுத்துகிறது. படைப்பாளன் தன்னுடைய தனித்தன்மைப் புலனாகும் வண்ணம் வெளியிடுவதை நடை என்று கூறலாம்.

**நடை பற்றி அறிஞர்கள் விளக்கம்**

ஒவ்வொரு படைப்பாளரையும் வேறுபடுத்திக் காட்டுவதும், சமுதாயத்திற்கு அவர்களை அடையாளம் காட்டுவதும் மொழிநடையே ஆகும். இத்தகைய நடை பற்றி அறிஞர்கள் தரும் விளக்கங்களைப் பின்வருமாறு குறிப்பிடலாம்.

**ஹட்சன்**

> நடை என்பது படைப்பாளனின் ஆளுமையைப் புலப்படுத்துகின்ற ஒன்று மட்டுமன்று. அவனுடைய அறிவுக் கூர்மை, ஆன்மிக உணர்வு, கலைத்தன்மை ஆகியவற்றையும் வெளிப்படுத்தும்[56]

என்கிறார்.

**என்க்விஸ்ட்**

> எண்ணம் அல்லது கருத்து எனும் கருவினைச் சுற்றி அமைந்துள்ள ஒரு வேறுபட்ட வடிவங்களுக்கிடையே ஒன்றைத் தேர்ந்தெடுக்கும் உத்தி. ஒரு படைப்பாளியின் அல்லது படைப்பிலக்கியத்தில் காணப்படும் தனிக்கூறுகளின் ஒட்டு மொத்தம், மொழியின் இயல்பான கூட்டமைப்பிலிருந்து மாறுபட்ட வீழ்ச்சிகள் சொற்றொடர் அடிப்படையிலன்றி முழுப்படைப்பிலுள்ள மொழியியற் கூறுகளுக்கிடையே காணப்படும் உறவுகள்[57]

என்பார்.

**கல்கி**

> எழுத்தின் நோக்கம் எண்ணங்களின் பரிமாற்றமே ஆதலின் கற்போர் அனைவருக்கும் புரியும்படியான எளிய, இயற்கையான பழகு தமிழ்நடையே சிறந்தது[58]

என்கிறார் கல்கி.

**தா.ஏ.ஞானமூர்த்தி**

ஒருவன் நடை மற்றவர்க்கு வருதல் என்பது எளிதல்ல. எனவே நடையாவது படைப்பாளரின் தனிப்பண்பைக் குறிப்பது[59]

*என்கிறார் தா.ஏ.ஞானமூர்த்தி.*

**அ.ச.ஞானசம்பந்தன்**

பேசுபவன் நிலைக்கு ஏற்ற நடையாக இருத்தல் வேண்டும்[60]

*எனச் சுட்டுகிறார்.*

**பியூலாமெர்சி**

நடைச் சிறப்பில்லாமல் அற்புத இலக்கியம் படைத்ததாகக் கூறினால் அது மண் இல்லாமல் பானை உருவாக்கி விட்டதாகக் கூறுவதை ஒக்கும். சொற்களுக்கு உயிரும் ஊட்டமும் கொடுப்பது இனிய எளிய நடைதான்[61]

*என்று விளக்கம் தருகிறார்.*

**மு.வ.**

நடை என்பது ஓர் ஆசிரியரின் மேற்சட்டைப் போன்றது. அன்று என்றும் உடம்பின் தோல் போன்றது[62]

*என்று நடையின் இன்றியமையாமையை எடுத்துரைக்கிறார்.*

**பிச்சமுத்து**

ஓர் இலக்கியத்தின் பயன்பாட்டையும் பெருமையையும் விளக்குவதற்கு அது கூறும் பொருளைப் போலவே அதன் மொழிநடையும் காரணமாகிறது[63]

*என்னும் கூற்றும் நடை பற்றி ஒப்புநோக்கத் தக்கனவாகும்.*

**மதியழகன்**

மனிதன் தன் மனத்தில் கருக்கொண்ட கருத்தினைத் தமக்கென உரிய வகையில் புலப்படுத்தும் நடையே மொழி நடை எனப்படும். ஒரு படைப்பிற்கு இலக்கியத் தகுதி வழங்குவதில் மொழிநடை இன்றியமையாத பங்கு வகிக்கிறது[64]

*என்னும் சிந்தனையும் இவண் குறிப்பிடத்தக்கவையாகும்.*

**அகிலன்**

> ஆசிரியரின் எழுத்து நடை அவருடைய தனிப்பட்ட குணப் பண்புகளையும் அவர் வாழ்க்கையைப் பற்றிக் கொண்டுள்ள கண்ணோட்டத்தையும் அவருடைய கற்பனை ஆற்றலையும் வெளிப்படுத்தக் கூடியதாகும்[65]

என்கிறார்.

படைப்பாளர் தாம் வெளியிட விரும்பிய உணர்ச்சிகளையும் சிந்தனை ஆற்றலையும் தெளிவாகவும் முழுமையாகவும் வெளியிட மொழிநடை பயன்படுகிறது. முகமது மீரானின் நடை தனித்துவம் வாய்ந்ததாக அமைந்து படிப்போர்க்கு அவரை அடையாளம் காட்டுகிறது. அதனோடு மட்டுமின்றிப் படைப்பாளனுடைய குணத்தையும், பண்பாட்டையும் சமூகத்தின் மீது கொண்டுள்ள அக்கறையையும் வெளிப்படுத்தவல்லது மொழிநடை எனலாம்.

**நடையின் வகைகள்**

> ஆசிரியரைக் கொண்டும், காலத்தை அடிப்படையாகக் கொண்டும், மொழியாலும், பொருளாலும், இடத்தாலும், வாசகனாலும், சுவையாலும் என ஏழாகவும் வகைப்படுத்தலாம்.[66]

மேற்கண்ட கருத்தும் படைப்பாளனின் அனுபவத்தையும் அடையாளம் காட்டுவதாகக் காட்டுகிறது. நடையின் இயல்பைக் கொண்டு மூன்றாகவும் பாகுபாடு செய்யலாம்.



**முகமது மீரானின் படைப்புகளில் நடை**

*தோப்பில் முகமது மீரானின் படைப்புகளில் இடம்பெற்றுள்ள நடையின் தன்மை, பிறமொழிச் சொற்கள், பேச்சு வழக்குச் சொற்கள், ஒலிக்குறிப்புச் சொற்கள், உவமைகள், பழமொழிகள், உணர்ச்சி, நகைச்சுவை, கவிதை, மணிப்பிரவாளம் முதலியன மொழிநடைக் கூறுகளாக இங்கு ஆராயந்தறியப்படுகின்றன.*

**உவமைகள் பயன்பாடு**

*தெரிந்ததைக் கொண்டு தெரியாததை விளக்குவது உவமை எனலாம். எடுத்துக் கொண்ட பொருளுக்கு எடுத்துக்காட்டாகவும் வருவது. ஒப்பு, ஒப்புமை, உவமம் என்பன உவமை என்னும் ஒரு பொருளைக் குறிக்கும் பல சொற்களாகும். உவமம் என்பதே உவமையாயிற்று. இச்சொல் ஒப்புமை என்னும் பொருளில் இலக்கியங்களில் பயின்று வருகிறது.*

வினை பயன் மெய் உரு என்ற நான்கே
வகை பெற வந்த உவமத் தோற்றம்[67]

*என்பார் தொல்காப்பியர். உவமை தோன்றுவதற்குரிய நிலைக்களன்களாக மேற்கண்ட விதியைச் சுட்டுவதை அறியலாம். ஒருபுடை ஒப்புமையை விளக்குவதே உவமையாகும்.*

படைப்பாளன் தனது உணர்வைத் தெளிவாகவும், கூர்மையாகவும் புலப்படுத்துவதற்கு உவமை, உருவகங்களைக் கையாள்கின்றாள்[68]

*எனவும்,*

படைப்பாளியின் ஆற்றலை வெளிப்படுத்தும் இலக்கிய உத்திகளுள் உவமை சிறப்பிடம் பெறுகிறது. உவமை கண், இலக்கியப் புலவனின் படைப்பாற்றலையும் கூர்ந்து நோக்கும் பார்வையையும் சமுதாயச் சூழலின் செல்வாக்கையும் நன்கு உணர்த்துவது[69]

*என்றும்,*

உவமையும் உருவகமும் இல்லாத நடை ஞாயிறு இல்லாத பகல் போலவும், புள்ளினமில்லாத சோலை போலவும் எனக்குப் பொலிவுற்றுத் தெரிகிறது[70]

*என்னும் கருத்துக்கள் ஒப்புநோக்கத்தக்கனவாகும்.*

பண்பும் தொழிலும் பயனுமென்றிவற்றின்
ஒன்றும் பலவும் பொருளொடு பொருள் புணர்த்
தொப்புமை தோன்றச் செப்புவ துவமை.[71]

*பண்பு, தொழில், பயன் ஆகிய இம்மூன்றின் காரணமாக ஒன்றாகவும் பலவாகவும் வரும் பொருளோடு பொருள் இயைய வைத்து ஒப்புமை புலப்பட வருவது உவமை என்று அணியிலக்கணத்தின் இயல்பை தண்டியார் விளக்குகிறார்.*

உவமை என்பது கவிஞனின் புலமை[72]

கவிஞனின் அனுபவப் பொருள்[73]

*அதாவது ஒரு பொருளை விளக்குவதற்கும், நயப்படுத்துவதற்கும் பயன்படும் உத்திமுறையே உவமை எனலாம். கவிஞன் தன் உள்ளத்து எழுந்த இதய உணர்வின் ஊற்றுக்களை எழுச்சி நிறைந்த துன்ப உணர்வுகளைச் சிதைவின்றித் தன் உள்ளத்து எழுந்தவாறே உலகிற்கு உணர்த்த உதவுவன உவமைகளே ஆகும்.*

கண்ணால் காணும் உவமைகள்

காதாற் கேட்கும் உவமைகள்

கையிற் றொடும் உவமைகள்

அறிவால் உணரும் உவமைகள்[74]

*என்று அ.ச.ஞானசம்பந்தன் சுட்டுகிறார். மேலும்,*

தெளிவாகத் தெரியாதவற்றை நன்கு தெளிவுபடுத்திக் காட்டியும் தெரிந்ததையே பயில்வோர்க்குச் சுவையூட்டும் வண்ணம் மேலும் அழகுறக் காட்டவும் உவமை பயன்படுகிறது[75]

*என்னும் சிந்தனையும் இக்கருத்தினையே தெளிவுபடுத்துகிறது.*

**உவமைப் பயன்பாடும் வகைகளும்**

*முகமது மீரானின் படைப்புகளில் இடம்பெற்றுள்ள உவமைப் பயன்பாடுகளைப் பலவாறாக வகைப்படுத்தலாம். அவை கதையோட்டத்திற்கு அடிப்படையாகவும், உறுதுணையாகவும், அழகாகவும், நயம் சேர்க்க வல்லதாகவும் அமைகின்றன.*

**தோற்ற உவமைப் பயன்பாடுகள் (மெய்)**

தங்கக் கம்பியின் பாதி வளையம் போல இளம்பிறை . . .[76]

பாம்பைப் போல அரணையைப் போல[77]

பாம்பைப் போல் வளைந்து நெளிந்து செல்லும் கருமுகில் கூட்டம்[78]

நனைந்த தாளைப் போன்று கிடந்தாள்[79]

ஸபியாவுக்கு உயிரோடு தோல் உரித்ததுபோல் தோன்றியது[80]

ஒரு வயோதிகனைப் போல் மரத்தை எதிர்பார்த்து நிற்கிறது[81]

என் மனைவியே பணிவிடை செய்து பிள்ளையைப் போலப் பேணினாளே[82]

மாதவனுடைய மகனின் புதிய தோற்றம் எனக்குள் பல ஆசைகளைக் கிளறியது அன்பய்யனைப் போல . . .[83]

**காட்சி உவமைப் பயன்பாடுகள்**

அலி வந்த நோக்கம் புரிந்து கொண்டது போல[84]

ஸபியாவுக்கு உயிரோடு தோல் உரித்தது போல்[85]

மழை பெய்து கொண்டிருக்கும் போது தோன்றி மறையும் சந்திரனைப் போல்[86]

கடிகாரத்தின் நேரிய விரல்கள் எண்களின் மீது ஆமை போல் நகர்வதைப் பார்த்ததும்[87]

ஆண்டுகள் பந்து போல உருண்டன[88]

மலை போல[89]

**உணரும் உவமைப் பயன்பாடுகள்**

காலங்களின் தாக்குதலால் பற்களைப் பறி கொடுத்து ஒரு வயோதிகனைப் போல் மரணத்தை எதிர்பார்த்து[90]

இளமைக் களிப்பு வந்து விட்டது போல்[91]

**காதால் கேட்கும் உவமைப் பயன்பாடு**

நெஞ்சில் இடி விழுந்தது போல்[92]

*மேலும் பண்பு உவமைகள், பழமொழிகள் போன்றவைகளும் பிற உவமைகளும் முகமது மீரான் தனது படைப்புகளில் கையாண்டுள்ளார்.*

**உரையாடல் பயன்பாடுகள்**

உரிய சொற்கள் உரிய இடங்களில் பொருந்தி நடப்பதே நடை[93]

*என்னும் கருத்திற்கேற்ப உரையாடல்களையும் சிறப்பாக அமைத்துள்ளார். புதினத்தில் இவ்வுத்தி இன்றியமையாத கூறாகும். இதனைத் தனது படைப்புக்களில் மிகச் சிறப்பாகப் பயன்படுத்தியுள்ளார்.*

*பாத்திரப் படைப்பின் பண்பை வெளிப்படுத்தவும் நிகழ்ச்சிகளை இயக்கவும் இவை பயன்படுகின்றன. மேலும் புதினத்தில் அமையும் உரையாடல்*

*கருவின் வளர்ச்சி, கதையின் இயக்கம், பாத்திரத்தின் பண்பு, கதைமாந்தரின் சூழல், அமைப்பு விளக்கம் முதலியவற்றிற்குக் காரணமாக அமையும். சிறுகதை, புதினங்களில் உரையாடலைக் கையாளுகின்ற போது அன்றாடம் நடைபெறும் பேச்சு வழக்கை ஒட்டியே அமைத்துள்ளார்கள்.*

லைலா!

பதிலில்லை

கதவைத் திறந்தேன்

உம் . . . ஒரு முனகல்

லைலா . . .

நீங்களா ?[94]

நீ ஆரு ?

மலுக்கும்மதுவ

உன் வாப்பா ?

மரிச்சுப் போச்சு

மாலு எத்தனை முழம் இருக்கு

பத்து[95]

ஒனக்கு மரணத்த நினச்சுப் பயமிருக்கா ?

நிங்களுக்கு முன்னாலே மரிச்சு நிங்க கையால என்ன அடக்கணும்

ஒனக்கு முன்ன நான் மரிக்கணும்

எனக்கு முன்ன நீங்க மரிக்கப்படாது

நான் மரிப்பேன்

மரணம் அவ்வளவு சொகமா ?[96]

நீ என்ன செய்யியா

படிக்கியேன்

என்ன படிக்கியா

படிக்கியென்

பரிட்சைக்கு

நீ பேப்பர் படிக்கியாயா ? உள்ளதா ?

உள்ளதுதான்

ஏன் படிக்கியா . . . .[97]

உரையாடல் பேச்சு வழக்கைத் தழுவியதாகவே புதினம் தோன்றிய நாள் தொட்டு இருந்து வந்துள்ளது. மனத்திற்கு மனம் வேறுபடுவது போல அந்தந்த மண்ணின் மணம் மணக்கும்படி படைப்பாசிரியர் தனது படைப்புகளில் காட்டியிருப்பது குறிப்பிடத்தக்கவையாகும். உரையாடலை வெறும் பொதுச் செய்திகளைப் பரிமாறிக் கொள்வதற்காகவோ வெறும் தகவல்களைச் சொல்வதற்காகவோ பயன்படுத்தவில்லை. அவ்வகையில் இவருடைய படைப்புகளில் கதையின் கரு வளர்ச்சிக்கும் நோக்கத்திற்கும் தொடர் இயக்கத்திற்கும் உரையாடல்கள் தூண்டுகோல்களாக விளங்குகின்றன.

**வடமொழிச் சொற்கள்**

| | |
|---|---|
| விஷ | (கூ., ப.79) |
| பிரவாகம் | (கூ., ப.97) |
| ஜன்னல் | (கூ., ப.168) |
| கஷ்டங்கள் | (கூ., ப.257) |
| சாஸ்தா கோவிலின் | (கூ., ப.258) |
| சொகுசா | (கூ., ப.259) |
| உசுப்பினார் | (கூ., ப.294) |
| ஞாபகம் | (ஒ.க.கி.க., ப.70) |
| ஜரிகை | (ஒ.க.கி.க., ப.71) |
| ஜோர், இஷ்டம் | (ஒ.க.கி.க., ப.99) |
| ஓஹோ . . . | (ஒ.க.கி.க., ப.140) |
| கல்யாணம் | (ஒ.க.கி.க., ப.150) |
| தரிசனம் | (ஒ.க.கி.க., ப.203) |
| ஜனம் | (சா.நா., ப.12) |
| ஜின்னு | (சா.நா., ப.36) |
| ஆஸா | (சா.நா., ப.58) |
| விஷ ஜீவிகள் | (சா.நா., ப.59) |
| பஞ்சு | (சா.நா., ப.69) |
| விசாலமான | (சா.நா., ப.95) |
| உஷாராக | (சா.நா., ப.121) |
| ஜனம் | (சா.நா., ப.154) |
| மகாராஜா | (சா.நா., ப.213) |

| | |
|---|---|
| ஜன்னல் | (சா.நா., ப.239) |
| கிருஷ்ணன், இராஜ | (சா.நா., ப.269) |
| சக்கரம் | (து., ப.26) |
| ஜாதி | (து., ப.33) |
| ஜெயஸ்ரீ | (து., ப.65) |
| மேஜை | (து., ப.82) |
| கக்கூஸ் | (து., ப.254) |
| பிருஷ்டம் | (து., ப.289) |
| மகாராஜா | (அ.தெ., ப.31) |
| ஷேக், ஜப்தி | (அ.தெ., ப.43) |
| விஷ | (அ.தெ., ப.113) |
| ஜின் | (அ.தெ., ப.180) |
| ஷைத்தான், விஷக் | (அ.தெ., ப.253) |
| குவஜா | (அ.தெ., ப.279) |
| ஜலம், ஜலம் | (வே.பே., ப.59) |
| அதிஷ்டம் | (வே.பே., ப.401) |
| தமாஷ் | (வே.பே., ப.460) |
| பேஷ் | (கு., ப.39) |
| பிருஷ்டம் | (து., ப.67) |
| ஜோடி | (கூ., ப.58) |

**மலையாள சொல்**

| | |
|---|---|
| பறஞ்சாயா | (து., ப.129) |

**ஆங்கிலச் சொற்கள்**

| | |
|---|---|
| ரோட்டில் | (வே.பே., ப.40) |
| ஹோட்டல் | (வே.பே., ப.78) |
| பேப்பர் | (வே.பே., ப.107) |
| டிக்கட் லாட்டரி | (வே.பே., ப.123) |
| டாக்டர் | (வே.பே., ப.153) |
| சினிமா, கிரிக்கெட் | (வே.பே., ப.155) |

| | |
|---|---|
| ஸ்கூல் | (வே.பே., ப.169) |
| நர்ஸ் | (வே.பே., ப.219) |
| காண்டிராக்டர் | (வே.பே., ப.235) |
| சீலிங்ஃபேன் | (வே.பே., ப.267) |
| சிமெண்ட் | (வே.பே., ப.292) |
| ஸ்பெஷல் | (வே.பே., ப.310) |
| பிளாஸ்டிக் | (வே.பே., ப.323) |
| மஃபளர் | (வே.பே., ப.381) |
| பஸ் | (வே.பே., ப.420) |
| புரபொசர் | (வே.பே., ப..454) |
| குமாஸ்தா | (வே.பே., ப.495) |
| மீட்டர் | (வே.பே., ப.528) |
| பஸ் | (வே.பே., ப.534) |
| டிரைவர், பிளாஸ்டிக் | (வே.பே., ப.537) |
| ஆம்புலன்ஸ் | (வே.பே., ப.553) |
| பவுடர் | (வே.பே., ப.611) |
| பிளாஸ்டிக் | (வே.பே., ப.615) |
| கண்டக்டர் | (வே.பே., ப.621) |
| சார் | (வே.பே., ப.624) |
| குஷின், ரெடி | (கு., ப.25) |
| ஆர்டர் | (கு., ப.201) |
| புரோக்கர் | (அ.தெ., ப.46) |
| போலீஸ் | (அ.தெ., ப181) |
| ஃபீஸ் | (து., ப.26) |
| பஸ், ஹார்ன், மெயில் | (து., ப.27) |
| ஸ்கூல் ஃபைனல் | (து., ப.37) |
| பேப்பர் | (து., ப.104) |
| ஸ்பெஷல் | (து., ப.262) |
| சிகரெட் | (சா.நா., ப.149) |
| பிம்பர் | (ஒ.க.கி.க., ப.25) |
| ஹவுஸ், ஆஜரானார் | (ஒ.க.கி.க., ப.92) |
| பஸ் | (கூ., ப.59) |

| | |
|---|---|
| பாஸ் | (கூ., ப.94) |
| டார்ச்சு | (கூ., ப.137) |

## பேச்சு வழக்குச் சொற்கள்

| | |
|---|---|
| என்னடேய் | (கூ., ப.14) |
| படுவா ராஸ்போல் | (கூ., ப.17) |
| மோறயெ கழுவுடுவேன் | (கூ., ப.30) |
| பாத்தீளா | (கூ., ப.47) |
| நான் பாத்துக்கிடுதேன் ஓய் | (கூ., ப.131) |
| தள்ளித் திற | (ஒ.க.கி.க., ப.26) |
| வெத்தில போடு | (ஒ.க.கி.க., ப.41) |
| கழுவவா, போச்சு | (ஒ.க.கி.க., ப.59) |
| நெனச்சிட்டுப் போறேன் | |
| நல்லா தூக்குண்ணு | |
| நாசமா | (ஒ.க.கி.க., ப.111) |
| வைக்கலியா | (ஒ.க.கி.க., ப.187) |
| முறிஞ்சுதா | |
| காணுது | |
| தெரியுது | (சா.நா., ப.63) |
| சோறு தின்ன ஆம்பிலே | |
| எறக்கிட்டுப்போ | (சா.நா., ப.115) |
| உடமாட்டேன், உடமாட்டாயா | (சா.நா., ப.213) |
| ஊட்டுலெ, கேட்டுது | (சா.நா., ப.255) |
| பயந்து, விடுவானா, வந்தாச்சு | (சா.நா., ப.306) |
| சளி பிடிக்கும் | (து., ப.54) |
| பாத்துட்டு | (து., ப.27) |
| சொரிஞ்சு | (து., ப.57) |
| கழுதை தொலயட்டு | (து., ப.123) |
| தேங்கா வெட்டுது | (து., ப.143) |
| சே இப்படிச் சொல்லிவிட்டானே | (து., ப.198) |
| என்னவோ செத்துராறுது | (அ.தெ., ப.15) |
| வரட்டுடா | (அ.தெ., ப.14) |

| | |
|---|---|
| மூக்குசிந்தி | (அ.தெ., ப.47) |
| தொந்தரவா இருக்கமாட்டேன் | (அ.தெ., ப.75) |
| எம்புடு நீளம், இத்தாதண்டி | (அ.தெ., ப.105) |
| நாத்தம்பிடிச்ச, துவைக்கிறா | (அ.தெ., ப.153) |
| யக்கா, கால் மாட்டிலும், தலைமாட்டிலும் | (அ.தெ., ப.273) |
| வயறு நிறையனும் | (கு., ப.27) |
| வரட்டா, போட்டான்னு | (கு., ப.28) |
| தெரியாதே, வரியேன் | (கு., ப.45) |
| படுபாவி . . . | (கு., ப.61) |
| வயிறு, எங்க போவ ? | (கு., ப.81) |
| கொடுக்கப் போறேன் | (கு., ப.101) |
| வாக்கரிசி இருக்கு | (கு., ப.123) |
| டீ குடிக்க காசு | (கு., ப.147) |
| சேவை செய்தாங்கோ | (கு., ப.158) |
| எருமை கோலத்தில் நிக்கான் | (கு., ப.179) |
| பொரிச்சுதாடி, கெடக்குறான் உளறிக் கொண்டே | (கு., ப.215) |

**அடுக்குத் தொடர்**

| | |
|---|---|
| ஜலம் . . . ஜலம் . . . | (வே.பே., ப.58) |
| சல சல | (வே.பே., ப.90) |
| திடீர் திடீர் | (வே.பே., ப.190) |
| வா . . . வா . . . | (வே.பே., ப.216) |
| பளார் . . . பளார் . . . | (வே.பே., ப.307) |
| குடி குடி | (வே.பே., ப.529) |
| கல கல | (வே.பே., ப.591) |
| வேக்க வேக் | (கு., ப.101) |
| விடிய விடிய | (கு., ப.147) |
| சல சல | (கு., ப.157) |
| தௌபா! தௌவா | |
| கபர்! கபர்! | (கு., ப.159) |
| கள்ளனனோ கள்ளனனோ! | (கு., ப.206) |
| விடவிட | (அ.தெ., ப.123) |

| | |
|---|---|
| கண்ட கண்ட | (அ.தெ., ப.174) |
| தேம்மி தேம்மி | (அ.தெ., ப.239) |
| உண்டு உண்டு | (து., ப.143) |
| என்ன என்ன | (து., ப.147) |
| பளபள | (து., ப.291) |
| குபு குபு | (து., ப.348) |
| முட்டி முட்டி | (சா.நா., ப.14) |
| தளதள | (சா.நா., ப.35) |
| கிடு கிடு | (சா.நா., ப.45) |
| அடிச்சு அடிச்சு | (சா.நா., ப.53) |
| பலப்பல | (சா.நா., ப.107) |
| பதுங்கி பதுங்கி | (சா.நா., ப.107) |
| கிடுகிடு | (சா.நா., ப.113) |
| போட்டு போட்டு | (சா.நா., ப.138) |
| டக்டக் | (சா.நா., ப.140) |
| இப்படி இப்படி | (சா.நா., ப.155) |
| குழைந்து குழைந்து | (சா.நா., ப.172) |
| தெரியும் தெரியும் | (சா.நா., ப.185) |
| அலஞ்சு அலஞ்சு | (சா.நா., ப.189) |
| பட பட | (சா.நா., ப.208) |
| சிமுட்டி சிமுட்டி | (ஒ.க.கி.க., ப.131) |
| அடியோ . . . அடியோ | (கூ., ப.38) |
| ஒடுங்கோ ஒடுங்கோ | (கூ., ப.168) |
| வாப்பா வாப்பா | (கூ., ப.294) |

**உணர்ச்சி நடைப் பயன்பாடுகள்**

தாங்க முடியாத வேதனை உம்மாவின் முகத்தில் சுளிவுகளாக நெளியும் போது நான் கண்களை மூடிக் கொள்கிறேன். என் இதயத்துக்கு வலு போதாது. அது பொடிந்து தகர்ந்து போனால் என் உம்மா மலம் . . .[98]

சுட்டுப் பழுத்துக் கிடக்கும் சுற்றுச் சார்பு, உருகி இறங்கும் சூரியன் வயிற்றினுள் பற்றி எரியும் நெருப்பு நாக்குகள் . . .[99]

கிழவனின் தாடை எலும்புகள் கிடுகிடா விறைத்தன. குரலில் நடுக்கம் குளிர் அதிகரித்த போது . . . இன்றும் இரவு மூன்று வயிறுகளும் பட்டினி தான் . . .[100]

பெண்மையின் இதய தாகம் சுரக்கும் கண்ணீரினும், வறுமையின் கூரிய பற்களின் கடி கொண்டு ஒழுகும் நிணத்திலும் பொருமிய கடிதங்கள் ஒவ்வொரு வருடமும் கையில் வந்து வீழ்ந்தன. பட்டின. உடு துணி இல்லை. முகத்தை ஒரு கண் பார்க்க ஆசை . . .[101]

தலைச்சுற்றிக் கீழே வீழ்ந்து விடுவோமோ என்று சிறப்பீனாவுக்குத் தோன்றியது. ஓங்கிய பாலை கையிலிருந்து நழுவி விழுந்தது. கோயிலும் கூடி நின்றவர்களும் கண்முன் கழன்றனர். தாழ்ந்து தாழ்ந்து போவது எங்கே அதல பாதாளத்திலா ? கூலுக்கடியிலா ? . . .[102]

மனதில் கட்டிப் பிடித்து வரும் துக்கத்தின் பாரத்தை எங்கு இறக்கி வைக்க முடியும் ? யாரிடம் கூறிக் கரைத்து இல்லாமல் செய்ய முடியும்.[103]

அவருடைய முகம் கருத்துப் போயிருந்தது. அதன் கண்களிலிருந்து ஒழுகிய கண்ணீர் கன்னத்தில் ஒட்டியிருந்தது . . .[104]

. . . உறக்கம் வரவில்லை வருடங்களாக ஆறிக் கிடந்த நரம்புகளுக்கு அவள் சூடேற்றி விட்டாள். மறந்து விட்ட உணர்ச்சியைக் கிண்டிக் கிளறி விட்டாள். நரம்பு உட்பிரிவுகளேறி முறுகின வறண்ட நரம்புகள் தாதும் கொண்டன. தாகமடக்காமல் இனி உறக்கம் வரவே வராது என்ற நிலை. கண்முன் அவள் நின்றாள். கண்ணுக்குப் பளிச்சிடும்படி நிர்வாண உறுப்புகளைக் காட்டி நடந்தாள் . . .[105]

முஸ்தபாக்கண்ணு மணலில் கிடந்து உருண்.டார். அவருடைய நெஞ்சிற்குள் வன்மம் பற்றி எரிந்தது. கை கால்கள் உடலிலிருந்து வேறுபட்டன. எலும்புகள் கழன்றுத் தெறித்தன. மண்டை ஓடு வெடித்துப் பிளந்தது . . .[106]

அவளைப் பற்றிச் சிந்திக்கும் போது அந்த இதயத்திற்குள் எங்கிருந்தோ சுட்டுப் பழுத்த கூரிய ஆணிகள் பலமாக வந்து குத்தியேறின. மீரான் பிள்ளை தலை குனிந்தார் . . . [107]

அவளுடைய துடிப்பான கரும் கண்களில் பயத்தின் நிழலாட்டம். இப்படியான காற்று ஏதோ விபத்தின் முன் அறிகுறி. இதுபோல் சுழன்று அட்டகாசம் செய்த ஒரு காற்றைத் தொடர்ந்து பேய் மழைதான் மீராகாவின் கடைக்குட்டியின் உயிரை உறிஞ்சிக் குடித்தது. அதிலிருந்து . . . பயம் திகில்[108]

வீரியம் பெற்ற உணர்ச்சிக் கொந்தளிப்பில் அடக்கம் செய்யப்பட்ட தாயை அவமதித்துப் பேசிய சிறப்புச் சொற்பொழிவாளருக்கு நேராக ஆக்ரோசித்தனர்.[109]

என் அடுப்பில் தீயெரிஞ்சு மூன்று நாளாச்சு, நானும் எம்மொவரும் இந்த மய்யத்துந்தான் தூக்க ஆருமில்லை. ஒரு நாதியுமில்லை . . .[110]

*மேற்கண்ட இடங்களில் உணர்ச்சி நடைக் கூறுகளைக் காணலாம்.*

**கவிதை நடை**

*மக்களின் உணர்ச்சிகளையும் கற்பனைகளையும் சிறுகதை, புதினங்கள் எடுத்துரைக்கும் போது கற்பவரின் உள்ளத்தை ஈர்ப்பதற்காகக் கவிதை நடையைப் படைப்பாளர்கள் கையாளுவது உண்டு. முகமது மீரானும் அந்நடையைப் பின்பற்றி அமைத்துள்ளார்.*

கொச்சிலும் பெண்ணில்லாண்டு
கோயிக்கோட்டும் பெண்ணில்லாண்டு
நம்ம வாப்பா போயி ஒரு பெண்ணினைக் கண்டு[111]

ஆணா, பெண்ணா?
பெண்ணின் பிரேதம்
கிழவியா குமரியா
குமரி
. . . . . . . .
யார் கழுத்தெ?
மச்சான் கழுத்தெ[112]

உன் இறைவன் யார்?
அல்லாஹ்!
உன் நபியார்

முகமது நபி!

உன் மார்க்கம்?

தீனுல் இஸ்லாம்[113]

ஓதாதே ஓதாதே பர்தா ஓதாதே

அல்லாவுக்கு இணை வைக்கும் பர்தா ஓதாதே

ஓதாதே ஓதாதே மௌலுது ஓதாதே

அல்லாவுக்கு மேலாக நபியைப் புகழாதே

சிரிக் செய்யும் அசத்தியவாதிகளே உங்களைதான்[114]

*மேற்காணும் கவிதை நடைகளையும் படைத்துள்ளார்.*

**ஒலிக்குறிப்புச் சொற்கள்**

*வாசகர்கள் கருத்தை உணர்வதற்கும், படிப்பதற்கும் ஆர்வத்தைத் தூண்டும் வகையிலும் ஒலிப்புச் சொற்கள் அமைந்து புதினத்திற்கு அழகு சேர்க்கின்றனர். அதே சமயம் கதைக் கருவிற்கும் எவ்விதப் பாதிப்பும் இல்லாமல் இயல்பாகப் பாத்திரங்கள் எப்படி உரையாடுவார்களோ, அந்நடையை ஒலிக் குறிப்புச் சொற்களின் வாயிலாகப் படைத்துக் காட்டுகிறார். ஒரு சில காட்டுக்கள் கீழே கொடுக்கப்படுகின்றன.*

| | |
|---|---|
| ஒ . . . | (வே.பே., ப.9) |
| உம் . . . | (வே.பே., ப.30) |
| ஊம் . . . | (வே.பே., ப.95) |
| சீ . . . | (வே.பே., ப.203) |
| ஆ . . . | (வே.பே., ப.309) |
| கூவேய் . . . கூவேய் . . . | (கு., ப.117) |
| நீயா யாரு ஒய் ? | (கு., ப.219) |
| ஏய்! | (ஒ.க.கி.க., ப.17) |
| இங்க வாரும் ஓய் | (ஒ.க.கி.க., ப.192) |
| ஒ, ஒவ் | (ஒ.க.கி.க., ப.109) |
| தூ . . . | (சா.நா., ப.122) |
| ஹே ஹே ஹே ஹை . . . | (சா.நா., ப.145) |
| என்னாஓய் . . . | (கூ., ப.55) |
| ஓஹோ . . . | (கூ., ப.95) |

சீ போடா . . . (கு., ப.80)

நே . . . (கு., ப.256)

ஹோ . . . (கு., ப.312)

முகமது மீரான் தமிழில் படைக்கப்படும் இலக்கியத்தினின்றும் கரு, மாந்தர், பின்னணி, மொழிநடை போன்ற கூறுகளில் வேறுபட்டிருப்பதை அவரது படைப்பின்வழி உணர்ந்திட இயல்கிறது. அழகிய அணுகுமுறைகளினால் இனிமையாகவும், எளிமையாகவும், நுட்பமாகவும் கருத்தை உணர்த்தியுள்ளார் என்பதற்கு இவரது மொழிநடையே சான்றாக அமைகின்றன.

**உத்தி விளக்கம்**

இலக்கியங்களில் இன்பத்தைக் கூட்டுவதற்குப் பின்பற்றப்படும். படைப்புமுறை உத்தியாகும். படைப்பாளனை அடையாளம் காட்டும் கண்ணாடியாக உத்தி பயன்படுகிறது. இவ்வாறு இலக்கியப் படைப்பாளன் இலக்கிய வடிவத்தில் ஏற்படுத்தும் நுணுக்கமான பண்பாட்டு கூறே இலக்கிய உத்தி என வழங்கப்படுகிறது. அந்த வகையில் சில வகை உத்திகள் சில இலக்கியங்களுக்காக எடுத்தாளப்படுகின்றன.

> இலக்கியம் இலக்கணம் முதலியவற்றில் திறம்பட வெளிப்படுத்தும் முறைக்கு உத்தி[115]

என்று அகராதி விளக்கம் தருகிறது.

> உத்தி என்பது என்ன சொல்கிறோம் என்பதை விட எப்படிச் சொல்கிறோம் என்பதே உத்தியின் பாற்பட்டதாக அமைகிறது. அதுவே வாசகர்களைக் கவர்ந்திழுக்கும் முதல் கூறாகவும் ஆகிறது.[116]

> எந்தக் கலையும் உத்திகள் பலவற்றைப் பெற்றதுதான். எந்தப் படைப்பாளனும் தனக்குரிய பல உத்தி முறைகளைப் பயன் கொண்டே ஆக்கம் புரிகின்றான். பிற எல்லாக் கலைகளைக் காட்டிலும் இலக்கியம் ஏற்றமும், சிறப்பும் கொள்ளுதற்கேற்ப அதன் உத்திகளும் உயர்வும் பொருத்தமும் வகைமையும் பயிற்சியும் புதுமையும் கொண்டு அமைகின்றன[117]

எனலாம்.

**உத்தி பற்றி அறிஞர்கள் கருத்து**

**தி.லீலாவதி**

*உத்தி என்பது கலை ஆக்கமுறைப் படைப்பில் கலைஞனின் முத்திரைப் பதிவாய் அமைவது. அவன் ஆளுமைத் திறத்தின் தனித்துவங்களைச் சுட்டிக்காட்டவல்லது என்று தி.லீலாவதி கூறுகின்றார்.*

**மார்க்ஸ்காரர்**

> சிறுகதையின் மூலப் பொருளை ஓர் உருவமாக்கும் இலக்கியக் கூறுகளை உத்தி[118]

*என்பர்.*

**க.ப.அறவாணன்**

> உள்ளத்தில் பொங்கி வரும் அனுபவ நுகர்வை உணர்ந்த அளவில் நினைத்த பொருளில் கவிஞர் வெளிப்படுத்தக் கையாளும் இலாவக பாவமே உத்தியை உணர்த்தும் முறையாகும்[119]

*என்று கூறியுள்ளார்.*

*உத்தி என்பது எண்ணமாவது சொல் (அ) செயலாக உருவெடுக்கும் போது அதனை வெளியீடு எனலாம். தொடக்கம், வரலாறு, முடிவு என்று மூன்று நிலைகளில் கையாளப்படும் உத்திகள் படைப்பாளனின் வெளியீட்டு முறையைப் பறைசாற்றுகின்றன. படைப்பாளர்களும், படிப்பாளர்களும் ஏற்றுக் கொள்ளும் முறையில் வெளியிடப் பயன்படுத்தும் தொழில்நுட்பமும், கலை நுணுக்கமுமே உத்தி எனக் கொள்ளப்படுகிறது.*

> சொல்லப்படுகின்ற கருத்து மற்றவர்களுக்குச் சென்று சேர வேண்டுமானால் அது அழகுறச் சொல்லப்பட வேண்டும். அது உத்தி முறைகளாலேயே அமைகிறது[120]

> உத்தி (Technique) என்னும் சொல்லிற்குக் கலை நுணுக்கக் கூறு, தனிச் செய்முறைத் திறன் என்று மூன்று வகையான பொருளை, ஆங்கிலத் தமிழ் அகராதி (Lexion) குறிக்கிறது. தமிழ்மொழி அகராதி சொல்லல், மொழிதல் என விளக்கம் தருகிறது. ஓர் இலக்கியம் படிப்பவர் நெஞ்சில் நீங்காமல் நிலைத்து நிற்க ஓர் ஆசிரியரால் பயன்படுத்தப்படும் இலக்கியக் கருவியே உத்தி[121]

*என்று தமிழ் சொற்களஞ்சியம் பொருள் தருகிறது.*

*படைப்பாளர் கலைத்திறத்தைக் காட்டும் கலை நுட்பம்தான் உத்தியாகும். தொடக்கமும் முடிவும் அதனுள் ஒன்றியவையாகக் காணப்படுகிறது. உருவத்தின் ஒரு கூறுதான் உத்திமுறை கதைக்கும் நாவலுக்கும் உள்ள நாவல் என்ற சொல்லாட்சிக்குரிய புதுமை என்ற பொருளை முழுமை பெறச் செய்ய வல்லது உத்திமுறை. எனவேதான் உணர்த்தும் திறன் இல்லாவிட்டால் இலக்கியம் கிடையாது. இவ்விதமான உணர்த்துத் திறமையைத் தான் கலை என்பர். படைப்பாளர் எவ்வளவு மேதையாக இருந்தாலும், அவருடைய படைப்பில் நல்ல உத்தி நுணுக்கங்கள் இல்லை எனில் அது மக்களிடம் சிறந்த படைப்பு என்று பெயர் பெறாது எனலாம்.*

**உத்தியின் இலக்கணம்**

**(தொல்காப்பியம், நன்னூல்)**

*தொல்காப்பியத்திலே 'உத்தி' எனும் சொல் இடம்பெறுகிறது. தொல்காப்பியச் செய்யுளியல் இலக்கணத்தில் 32 வகை உத்திகளைப் பின்வருமாறு வகைப்படுத்துகிறார்.*

ஒத்த காட்சி உத்தி வகை விரிப்பின்
நுதலியதறிதல் அதிகார முறையே
தொகுத்துக் கூறல், வகுத்து மெய் நிறுத்தல்
மொழிந்த பொருளோடொன்ற வைத்தல்
மொழியா ததனை முட்டின்றி முடித்தல்
வாராத தனான் வந்தது முடித்தல்
உரைத்து மென்றல் உரைத்தாமென்றல்[122]

*என்று தொல்காப்பியம் சொல்கிறது.*

*நன்னூலார் உத்தி பற்றி பின்வருமாறு வரையறுக்கிறார்.*

நுதலிப் புகுதல் ஒத்துமுறை வைப்பே
தொகுத்துச் சுட்டல் வகுத்துக் காட்டல்
முடித்துக் காட்டல் முடிவு இடம் கூறல்
தான் எடுத்து மொழிதல் பிறன் கோள் கூறல்
சொற்பொருள் விரித்தல் தொடர்ச்சொல் புணர்த்தல்
இரட்டுற மொழிதல் ஏறுவின் முடித்தல்

ஒப்பின் முடித்தல் மாட்டு எறிந்து ஒழுகுதல்
இறந்தது விலக்கல் எதிரது போற்றல்
முன்மொழிந்து கோடல் பின்னது நிறுத்தல்
விகற்பத்தின் முடித்தல் முடிந்தது முடித்தல்
உரைத்தும் என்றல் உரைத்தாம் என்றல்
ஒருதலை துணிதல் எடுத்துக்காட்டல்
எடுத்த மொழியின் எய்த வைத்தல்
இன்னது அல்லது இதுவென மொழிதல்
எஞ்சிய சொல்லின் எய்தக் கூறல்
பிறநூல் முடிந்தது தான் உடன்படுதல்
தன்குறிவழக்கம் மிக எடுத்து உரைத்தல்
சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல்
ஒன்றின முடித்தல் தன்னினம் முடித்தல்
உய்த்து உணர வைப்பு எனஉத்தி எண் நான்கே[123]

*யுக்தி என்னும் சமற்கிருதச் சொல் தமிழில் உத்தி என வழங்கப்படுகிறது. இதற்குத் தமிழில் பொருந்தும் முறை என்று பொருளாகும். இது நூலாசிரியரின் அறிவு நுட்பத்தால் அமைவதாகும். ஒரு கருத்தை வெளிப்படுத்த நூலாசிரியன் கடைபிடிக்கும் முறையே உத்தி எனக் கூறப்படுகிறது. இவை முப்பத்திரண்டாகப் பாகுபடுத்தப்பட்டுள்ளன.*

1. *நான் இதனைச் சொல்லப் போகிறேன் எனக் கூறித் தொடங்குதல்.*
2. *இயல்களைக் காரண, காரிய முறைப்படி அமைத்தல்.*
3. *பல பொருள்களையும் ஓரிடத்தில் தொகுத்துச் சொல்லுதல்.*
4. *தொகுத்துக் கூறியதை வேறு வேறாக வகுத்துக் காட்டுதல்.*
5. *விரித்துச் சொன்ன பொருள்களை முடித்துக் காட்டுதல்.*
6. *சொல்லும் இலக்கணத்திற்குரிய இலக்கியம் தோன்றும் இடத்தைக் கூறுதல்.*
7. *முன்னோரின் கூற்றுக்களை அப்படியே எடுத்துக்காட்டுதல்.*
8. *பிறர் கொள்கைகளைக் கூறுதல்.*
9. *சொல்லின் பொருள் தெளிவுபட விளக்குமாறு விரித்துரைத்தல்.*
10. *ஒன்றற்கொன்று தொடர்புடைய சொற்களை ஓரிடத்தில் கூறுதல்.*
11. *இரண்டு பொருள்படச் சொல்லுதல்.*

12. முன்னர்க் காரணம் கூறாமல் கூறியவற்றைப் பின்னர் காரணம் காட்டி நிறுவுதல்.
13. ஒன்றற்குரிய இலக்கணத்தைப் பொருந்தும் பிறவற்றிற்கும் இலக்கணமாகக் கூறுதல்.
14. ஒன்றற்குக் கூறிய இலக்கணம், அதனைப் பெறுதற்குரிய மற்றவற்றோடு தொடர்புபடுத்திக் கூறுதல்.
15. வழக்கு இழந்தவற்றை நீக்குதல்.
16. புதியதாய்த் தோன்றியதனைத் தழுவி இலக்கணம் அமைத்தல்.
17. பின்பு எடுத்து ஆள்வதற்குரிய ஒன்றை முன்னரே கூறுதல்.
18. பின்னர் எடுத்தாளுவதற்கு ஏதுவாக ஒன்றைப் பொருத்தம் கருதிப் பின்னே வைத்தல்.
19. மாறுபட வருவனவற்றை வேறு வேறாக முடித்துக் காட்டுதல்.
20. வேறு வேறாக முடிந்ததைப் பொது இலக்கணத்தால் தொகுத்துக் கூறுதல்.
21. இவ்விதியைப் பின்பு சொல்வோம் எனக் கூறுதல்.
22. இவ்விதியை முன்னர்ச் சொன்னோம் எனக் கூறுதல்.
23. மாறுபட்ட இருவரின் கொள்கைகளுள் ஒன்றைத் துணிந்து ஏற்றுக் கொள்ளல்.
24. தான் கூறிய இலக்கணத்திற்கு உரிய இலக்கியத்தைத் தானே எடுத்துக் காட்டல்.
25. தான் சொல்லும் இலக்கணத்தைத் தான் எடுத்துக் காட்டிய இலக்கியத்தில் பொருந்தும்படி அமைத்துக் காட்டுதல்.
26. ஐயம் தோன்றிய இடத்தில் அவ்ஐயத்தை நீக்கும் முகமாக இதுதான் எனத் துணிந்து சொல்லுதல்.
27. சொல்லியவற்றைக் கொண்டு சொல்லப்படாதவற்றிற்கும் இலக்கணம் பொருந்தக் கூறுதல்.
28. பிற நூல்களின் முடிவுகளை ஏற்றுக் கொள்ளுதல்.
29. தன்னால் புதிதாக எடுத்துரைக்கப்பட்டதைப் பல இடங்களிலும் கூறுதல்.
30. சொல் முடிந்த இடத்திலேயே அதன் பொருளையும், முடிவு பெறுமாறு அமைத்துக் காட்டுதல்.
31. ஒன்றற்குக் கூறப்பட்ட விதி அதனோடு ஒற்றுமைப்பட்டதற்கும், அவற்றோடு இனமானவற்றிற்கும் பொருந்தும்படி அமைத்தல்.

32. சில விதிகளைக் கொண்டு ஒரு பொருளை ஆராய்ந்து அறியும்படி அமைத்துக் காட்டுதல்

போன்றவை ஆகும். மேற்கண்ட உத்தி முறைகளை மீரான் தனது சிறுகதைகள், புதினங்களில் நிரம்பக் கையாண்டுள்ளார்.

**கதை கூறும் முறையில் பயன்படுத்தும் உத்திகள்**

கதை கூறும் முறையில் பல்வேறு உத்தி முறைகள் உண்டு. கதைத் தலைவனோ அல்லது தலைவியோ தாமே கதையைக் கூறுவதாக அமைதல், தலைவனும் தலைவியும் மாறி, மாறி கூறல், கதையின் நிகழ்ச்சிகளோடு தொடர்புடைய ஒருவர் கடந்தகால நிகழ்ச்சிகளை எண்ணிப் பார்ப்பது போன்று துணைமாந்தர்களில் யாரேனும் ஒருவர் கதை கூறுவது,

1. ஆசிரியரே படர்க்கை இடத்தில் நின்று கதை கூறுதல்
2. சுயசரிதைப் போக்கு
3. நனவோட்ட உத்தி
4. கற்பனை உத்தி
5. கதை உத்தி
6. அங்கத உத்தி
7. தொன்ம உத்தி
8. உவமை உத்தி
9. பழமொழி உத்தி

போன்ற உத்திகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**சூழலைத் தலைப்பாகக் கொள்ளும் உத்தி**

கதைக்களம் அதாவது கதை நடைபெறும் இடத்தையோ, காலத்தையோ கதையில் முக்கிய இடம்பெறுமாறு அமைக்கப்படும் கதைகள் உண்டு. அவற்றிற்கு அக்கதை நடைபெறும் சூழலமைப்பின் பின்னணியையே தலைப்பாக அமைப்பர்.

1. நரகம் பூமியில்
2. அன்புக்கு முதுமை இல்லை
3. கருந்தேளின் கொடுக்குகள்
4. கொலுசு அணிந்த பாதங்கள்
5. குட்டி ஆடு

போன்ற கதைகள் சூழலைத் தலைப்பாகக் கொண்டுள்ளன.

**நிகழ்ச்சியைத் தலைப்பாக அமைக்கும் உத்தி**

*கதையில் இடம்பெறும் முதன்மையான ஒரு நிகழ்ச்சியைக் கதைக்குத் தலைப்பாக இடுவதும் உண்டு. இத்தகைய கதைகளில் கதையைப் படித்த பின்னர் அந்நிகழ்ச்சியோடு தொடர்புடைய வேறொன்றை எண்ணி அதைப் பற்றியே சிந்திக்கத் தூண்டும் வகையில் கதை அமைவது இவற்றின் இயல்பாகும்.*

1. *ஒரு சவ ஊர்தியின் நகர்வலம்*
2. *கடிகாரம்*
3. *இதை எப்படி நிறுத்துவது*
4. *நேற்று வந்த வழி*
5. *தலைப்பெருநாள்*

*போன்ற கதைகள் நிகழ்ச்சியைத் தலைப்பாக அமைக்கும் உத்தியை மேற்கொண்டுள்ளன.*

**கதையில் எழும் சிக்கலைத் தலைப்பாக அமைக்கும் உத்தி**

*கதையின் சிக்கலாகத் தோன்றுவதையே தலைப்பாக வைத்து அமைப்பதும் ஒருவகை பெயரிடும் கலையாகும். இரண்டு பிரச்சினைகளுக்கு இடையே மோதலின் அடிப்படையின் கதை அமையுமாயின் அதனையே தலைப்பாக அமைத்தல் ஆகும்.*

1. *தஜ்ஜால் மேல் விழுந்த மலை*
2. *ஒரு மவ்லவியின் மரணம்*

*மேற்கண்ட கதைகள் கதைகளில் எழுகின்ற சிக்கல்களைத் தலைப்பாக அமைக்கும் உத்தியைக் கொண்டுள்ளது.*

**கதைமாந்தரின் பெயரைத் தலைப்பாக அமைக்கும் உத்தி**

*சிறுகதைகள் மற்றும் புதினம் ஒரு பாத்திரத்தின் பண்பையோ அவர் வாழ்க்கையின் முதன்மையான நிகழ்ச்சியோ சுற்றிச் சுழலுமானால், அக்கதைமாந்தரின் பெயரே தலைப்பாக இடம்பெறுவதும் உண்டு. தொழிலால், இனத்தால், காரணத்தால் இடம்பெறும் பெயர்களே சிறப்புப் பெயர்களாகும்.*

1. *கறவை தீர்ந்த மாடு*
2. *ஆதத்தின் மகன் மைதீன் பிள்ளை*

3. ஒரு மவ்லவியின் மரணம்

4. ஓர் உஸ்தாதின் அகமியம்

5. நெட்டோகாலி என்ற நூறுல்ஹஸன்

6. தங்கராசு

7. குட்டி ஆடு

8. பேரன்

9. குட்டன் பிள்ளை சார்

10. மிஸ்டர் மார்ட்டின்

11. அப்துல்லா இப்னு அபூபக்கர்

மேற்கண்டவற்றில் முதன்மைப் பாத்திரம், துணைப் பாத்திரங்கள் பெயர்களைத் தலைப்பாக அமைக்கும் உத்திகளின் பயன்பாடுகளைக் காணமுடிகிறது.

**நனவோடை உத்தி**

நனவோடை என்பது இலக்கிய உத்திகளுள் ஒன்றாகும். இது நாவலில் இடம்பெறும் சிறந்த உத்தியாகும். பாத்திரப் படைப்புகள் அல்லது படைப்பாளரின் நினைவுகள் வரிசையாகக் காட்சிப்படுத்தப்பட்டு இலக்கியமாகப் புலப்படுவதற்கு இவ்வுத்தியைப் பயன்படுத்துகின்றனர்.

1. நடந்த நிகழ்வுகள்

2. பிற்காலத்தில் அதாவது ஒருவர் நினைத்துப் பார்க்கும் பொழுது நடப்பது.

3. கதை கடந்த காலத்திற்கும், நிகழ்காலத்திற்குமாக மாறி மாறிப் பயணிப்பது

மேற்காணும் வகையில் அமைவது இவ்வகை உத்தி முறையாகும்.

புதினங்களில் மனிதச் செயல்களை விவரிப்பதோடு அவனுடைய அகவுலகைச் சித்தரிக்கும் போக்கும் தொடர்ந்து இடம்பெற்று வருகின்றது. தொடக்கத்தில் ஆசிரியரின் கூற்றுக்களாலும் நினைவோட்டம் (Flash-back) என்ற உத்தியாலும் சித்திரிக்கப்பட்டன. எல்லையற்றதும் ஒரே சீரற்றதுமான மனித மனத்தின் அலைபாயும் போக்கை உண்மையாக (Realistic) வெளிப்படுத்த முழுமையாக உதவவில்லை என்னும் குறை உணரப்பட்டபோது நனவோடை என்ற அமைப்பு தோன்றலாயிற்று.

*1890இல் வில்லியம் ஜேம்ஸ் என்னும் உளவியலறிஞரால் உருவாக்கப்பட்டது. ஸ்டீரிம் ஆப் கான்ஸியஸ்னஸ்* (Stream of Consciousness) *என ஆங்கிலத்தில் குறிப்பிட்ட தொடரை நனவோடை எனத் தமிழ்ப்படுத்தி வழக்கத்தில் கொண்டு வந்தவர் தெ.பொ.மீ. ஆவார்.*

> இதில் கண்ணிய மனத்தின் உள்ளத்தையும் காணலாம். மன விகாரங்களின் அருவருப்பையும் காணலாம். அதன் சுயரூபத்தில் இருப்பதில்தான் நனவோடை உத்தியின் பண்பு உள்ளது[124]

*என்னும் கருத்து விளக்குகிறது.*

*மனித மனத்தின் ஆழமான எண்ண ஓட்டங்களை ஆசிரியன் எவ்விதக் குறுக்கீடுமின்றி அதன் உண்மை நிலையில், வாசகன் நேரடியாகத் தானே அனுபவிக்குமாறு அமைத்துத் தருதலே ஆகும்.*

1. *கதைமாந்தர்களே தமது கடந்த கால வாழ்க்கையைப் பற்றி நினைத்துப் பார்ப்பது.*
2. *கதை நிகழ்விற்குத் தொடர்பில்லாத சில மனிதர்கள் நினைத்துப் பார்ப்பது போன்று அமைவது.*
3. *படைப்பாளனே தம் கடந்த கால அனுபவத்தைப் பற்றி நினைப்பது*

*மேற்கண்ட மூன்று முறைகளில் நனவோடை உத்தி பின்பற்றப்படுகிறது.*

*எண்ணங்களும், உணர்வுகளும் மடை திறந்து வெளிப்பாடாகவும் முடிவின்றி தொடர்கதை, தனி மொழியாகவும் குறிப்பிட்ட கதை மாந்தரின் மனக்கண் வழியே காண்கின்ற காட்சியாகவும் அமைகின்ற உத்திக்கு நனவோடை என்று பெயர். காலம், இடம் கடந்தவர்களாகப் பாத்திரத்தைப் படைக்க இந்த உத்தி பயன்படுகிறது.*

> உறக்கம் வரவில்லை. வருடங்களாக ஆறிக் கிடந்த நரம்புகளுக்கு அவள் சூடேற்றி விட்டாள். மறந்துவிட்ட உணர்ச்சியைக் கிண்டிக் கிளறி விட்டாள். நரம்பு உட்பிரிகலேறி முறுகின. வறண்ட நரம்புகள் தாகம் கொண்டன. தாகமடக்காமல் இனி உறக்கம் வரவே வராது என்ற நிலையில் கண்முன் அவள் நின்றாள். கண்ணுக்குப் பளிச்சிடும்படி நிர்வாண உறுப்புகளைக் காட்டி நடந்தாள். சட்டையைக் கழற்றினாள்.

சேலையை உரிந்து விட்டாள். முழு நிர்வாண மேனியில் நின்று கொண்டிருந்தாள் . . .[125]

மன இடிவுடன் கூடம்பறைக் கிடந்திருந்த இடத்திலிருந்து படிப்புரைக் கட்டிலை நோக்கிச் செல்லும் போது மனசில் ஒரு சிந்தனை மின்னியது. ஒருவனை நல்லவனாக்குவதும் தீயவனாக்குவதும் அவனது வீட்டுச் சூழல் . . . மனித இயல்பான உணர்ச்சிகள் நரம்புகளில் காய்ந்து கருகிப் போனதால் அந்த இணையைக் கண்டு மிரண்டோடி அதுவும் மற்ற இணை . . .[126]

*மேற்கண்டதில் நனவோடை உத்திப் பயன்பாட்டை அறியலாம்.*

**அகமன பேச்சு உத்தி**

*இது நனவோடை உத்தியின் ஒரு பகுதியாகும். ஒரு கதைமாந்தரின் நினைவோட்டத்தில் எழும் எண்ணங்களையோ, உணர்வுகளையோ படைத்துக் காட்டும்பொழுது பாத்திரங்களின் மனத்திற்குள் ஒலிப்பது போன்று பேசுவது அகமனப் பேச்சு உத்தியாகும். புதினவாசிரியர்களினால் பெரிதும் போற்றி பயன்படுத்தப்படுகின்றது. கதைமாந்தரின் மனப் போராட்டத்தைச் சித்திரிப்பதற்கு இவ்வுத்திமுறை சிறந்ததொரு கருவியாகப் பயன்படுகிறது.*

*பெண் கதைமாந்தர்கள் புனைவுகளில் இத்தகைய உத்தி முறைகளைப் படைப்பாசிரியர் பயன்படுத்தும் விதங்களைக் காணலாம்.*

**தொன்ம உத்தி**

*மனிதன் தான் அன்றாடம் பயன்படுத்தும் பழமொழிகள், அறிவுரைகள், கதைக்கூறுகள் முதலானவற்றிலும் தொன்மத்தின் தாக்கம் மிக்குள்ளது. நாகரிகம் மிகுந்த இவ்வுலகில் தொன்மம் சுவை மிக்கதாகவும், பயனுடையதாகவும் எளிதாகவும் இருந்து வருவதால் இது சிறப்பிடத்தைப் பெற்று விட்டது எனலாம்.*

*தொன்மம் என்பது நெடுங்காலங்களாக வழங்கி வருவதும் எல்லோருக்கும் தெரிந்ததுமான பழங்கதையைக் குறிக்கும். ஆங்கிலத்தில் மித்* (Myth) *எனப்படுவது கதையமைப்பைக்* (Plot) *குறித்ததுண்டு.*

*தொன்மம் சமயக் கருத்தில் பெரும்பங்கு வகிக்கிறது. தெய்வத்தின் மேன்மையை, சிறப்பினை உணர்த்திய இது ஒரு கருவியாகச் செயல்படுகிறது. நாளடைவில் மக்களின் விருப்பத்திற்கு இலக்காகி இசை, நடனம், ஓவியம், சிற்பம்*

*போன்ற நுண்கலைகளிலும் சிறப்பான இடத்தைப் பெற்றுவிட்டது. நல்ல குறிக்கோளுடன் கூடிய கருத்துக்களைத் தம் கற்பனைத் திறத்தோடு தமக்கு ஏற்பட்ட அனுபவங்களை எல்லாம் திரட்டி, நல்ல எழுத்து வடிவத்தில் எடுத்தியம்பி, மக்களை நல்வழிப்படுத்தவும் குறிப்பிட்ட காலகட்டத்தில் வாழ்ந்த மக்களின் பண்பாட்டுக் கூறுகளை வெளிப்படுத்தும் நோக்கமும் கொண்டு அறிஞர்களால் படைக்கப்படுகின்ற ஓர் உத்தியாக இத்தொன்மம் பயன்படுகிறது.*

தொன்மை தானே சொல்லுங் காலை
உரையொடு புணர்ந்த பழைமையின் மேற்றே[127]

*தொன்மம் என்பது பழங்காலத்தில் வாழ்ந்த மக்களின் நம்பிக்கைகள், சடங்குகள், இயற்கை நிகழ்வுகளுக்கான விளக்கங்கள், தெய்வத் தன்மை வாய்ந்த பொருள்கள், இடங்கள் ஆகியவற்றைக் குறிக்கிறது. மேலும் தொன்மங்கள் குறியீடுகளாய் அமைந்த அடிப்படை உண்மைகளை விளக்க இவை குறியீடுகளாய்ப் பண்டைக் காலச் சமூகத்தால் மரபு வழியாக வாய்மொழியாக வழங்கப்பட்டன.*

*முகமது மீரான் இஸ்லாமிய சமயத்தின் ஓதப்படுகின்ற உயிரின் பிறப்பு, இறப்பு இதற்கிடையேயான சடங்கு முறைகள், நரகம் வாழ்வின் இன்ன பிற கூறுகளையும் எடுத்துக்காட்டுகிறார்.*

பக்தர்கள் வாகனங்களில் இருந்தவாறு தர்காவிற்கு நேராகச் சில்லறை நாணங்களை வீசி எறிவார்கள் . . .[128]

. . . இப்போது எவரும் இந்தப் பட்ட மரத்தைக் கவனிப்பதேயில்லை. தர்காவின் பின் தலைமுறையினர் தரிசனத்திற்கு வரும் பக்தர்களின் கவனத்திற்கு மரத்தைக் கொண்டு வருவதுமில்லை . . .[129]

குருமார்களின் மனம் கசந்தால் குழந்தைகளுக்குப் படிப்பு வராது என்று முன்னோர்கள் சொல்லை வாப்பா நினைத்தார். வாப்பா எப்போதும் சொல்வதுண்டு, என்னை ஓத வைத்து ஒரு முஸ்லியார் மௌலவி ஆக்க வேண்டும் என்று வாப்பாவுக்கு நெடுநாள் ஆசை . . .[130]

ஸ்ரீ சித்திரைத் திருநாள் மகாராசாவின் ‘சிப்பாய்கள்’ ஒரு திருட்டுக் கேஸில் . . .[131]

சர்வ சக்தனாகிய அல்லாஹீவின் திரு இல்லச்சுவரின் காபீரிங்களின் காவியால் எழுதப்பட்ட நீண்ட வரிகளில் கண்களை ஒட்டினர்.[132]

புலவர்களும், பேரறிஞர்களும் அவுலியாக்களும் வாழ்ந்த ஊரல்லவா? பாக்கலாம்னுதான் ஆலிப்புலவர் மெஹ்றாஜ் மாலை அரங்கேற்றம் செய்த இடத்தைப் பார்த்தேன். வேம்படிப் பள்ளியில் தொழுதேன் . . .[133]

மக்கா மஸ்திஜிதின் வானைத் தொடும் மினாராவிலிருந்து ஒலித்துக் கொண்டிருந்த பாங்கு அவ்வப்போது முடங்கியது தொழுகை நடந்த இமாம் வருவது ஆபூர்வம் . . .[134]

நபிகள் நாயகம் அல்லாஹ்யவை சந்திப்பதுக்கு வானலோகம் போறப்போ அங்கிருந்து பூமியைப் பார்த்தாவளாம் . . .[135]

வருகிற மாதம் பிறை பத்தில் நிக்காஹ் . . .[136]

இஸ்லாமியச் சட்டப்படி வேறு ஒரு பெண்ணை நியாயமான முறையில் மனைவியாக்குவதற்கான முயற்சிதானே என்று அர்த்தம் கற்பித்தார் . . .[137]

*மேற்கண்ட சான்றுகளின் வழி இஸ்லாத்தின் சமயக் கூறுகளைத் தொன்ம உத்தியாக எடுத்துக் காட்டுகிறார்.*

**வருணனை உத்தி**

*படைப்பாளன் தான் கற்பனை செய்தவைகளைப் பற்றியும், தான் நேரில் கண்டவைகளைப் பற்றியும் பிறருக்குச் சொல்ல விழைவதன் விளைவாகத் தோன்றுவது வருணனை ஆகும்.*

வருணனை என்பது புலன்களால் உணர்வனவற்றை அல்லது புலன்களின் வாயிலாக உணரும் காட்சிகளைச் சொற்களில் மொழிபெயர்த்துக் காட்டுவதாகும்[138]

*என்னும் கருத்து வருணனை உத்தியின் இயல்புகளைச் சுட்டிக்காட்டுகிறது. மேலும் கருத்து விளக்கத்திற்கு இவ்வுத்தி துணை நிற்கிறது.*

சொற்களாலும் தொடர்களாலும் கண்முன் காட்சிப்படுத்தும் பாங்கில் தரப்படும் விரிவான விளக்கங்கள் வருணனையாகின்றன[139]

*என்னும் கருத்தும் இதற்குத் துணைநிற்கின்றன.*

எழுதுவோர் ஒரு பொருளையோ மனிதரையோ இடத்தையோ வர்ணிக்கும் நிலையில் அவ்வகை உரைநடையை வருணனை நடை எனப் பாகுபாடு செய்வர்[140]

*என்ற விளக்கமும் வருணனை உத்தியின் இன்றியமையாமையையும் அதன் சிறப்புகளையும் புலப்படுத்துகின்றன. முகமது மீரான் தனது படைப்புகளில் இட வருணனையும், காட்சி வருணனைகளையும் மிகுதியாகப் பயன்படுத்தித் தனித்துவம் பெறுகிறார்.*

*கடல் - கடல் சார்ந்த இடம். நெய்தல் நில மக்கள் வாழ்வியல் தொழில் இடங்கள் மிகுதியாக எடுத்துக்காட்டப்படுகின்றன. கூனன் தோப்பு, கடலோர கிராமத்தின் கதை, குடியேற்றம், துறைமுகம் முதலான புதினங்கள் இதற்குச் சான்றாக அமைகின்றன.*

தாழ்ந்திறங்கும் சூரியன், கடலும் வானும் கூடித் தழுவும் இடத்தை நோக்கிச் சூரியன் நகர்ந்தபோது வெட்கத்தால் அடிவானத்தின் கன்னம் சிவந்தது.[141]

பாறைக் கூட்டங்களுக்கு பின் பக்கமிருந்து தலை உயர்த்திய சந்திரன் குடில்களுக்கிடையே அரிசி மாவு கொட்டியது . . .[142]

மியாவூ . . . மியாவூ . . . நெத்தலி தலையும் மீன் குடலும் கிடைக்காமல் மதில் சுவர் மீது மதில் கற்களாக ஒட்டிக் கிடந்த பூனைகளின் பசிக் கூப்பாடு. அதன் சோக மௌனப் பார்வை. கொத்திப் பொறுக்க எதுவும் கிடைக்காமல் சொல்லைப் புறங்களைக் கிண்டிக் கிளறி நடக்கும் கோழிகள் அதன் பசிக் கொக்கரிப்புகள்.
பகலின் கடைசி மூச்சு போல் மரத் தலைகளின் முகடுகளில் எஞ்சி நின்ற மஞ்சள் வெயில் தேய்ந்து மறைந்தது . . .[143]

பார்வை கூல் விரிமாரில் ஊன்றியது. அரபிக் கூல் குட்டிக் காற்றில் எழுப்பும் சிற்றலைகளைப் பார்த்திருந்தான். பேய்க் காற்றில் இதே சிற்றலைகள் வளர்ந்து யானையை விழுங்கும் இராட்சதத் திரையாக உருமாறும் கொடூரம் நடப்பது எந்த நேரம் என்று கணிக்க முடியாது. அரபிக் கடல் அமைதியான கடல் என்று சொல்லுவார்கள். சில

நேரம் கோப அலைகள் எழுப்பும். இந்தக் கடலின் விரிமார்பு வழியாகத்தான். . .[144]

ஆற்றோரங்களில் நிற்கும் தென்னையின் தலைகளில் மேகங்களின் இடுக்கு வழியாகக் கடந்து வெளிப்பட்ட பொன்கதிர்களின் புன்னகை அந்தப் புன்னகையின் அழகில், அதன் போதையில் எல்லாம் மறந்து கிடக்கும் அரபிக்கடல்.

கடற்கரையின் நாடித் துடிப்புகளான மீனவக் குடில்களுக்கு முன் நாய்களும் பன்றிகளும் மோப்பம் பிடித்து நடந்தன. கட்டுமரங்களும் மீன் படகுகளும் கரையேற்றப்பட்டிருந்தன . . . மீன் பிடிப்பில்லாத வறுமை அந்தக் குடில்களின் முகங்களில் கரும்புள்ளிகளை உண்டு பண்ணியது அந்தக் குடில்களில் உயிர்த் துடிப்புகள் பசியெடுத்து அழுதன. தாய்மார்களின் ஏச்சும் பேச்சும் கடற்கரையில் காற்றில் மிதந்தன. . .[145]

*மேற்கண்டதில் வருணனைக் காட்சிகள் நிரம்ப பொதிந்துள்ளதை இவருடைய படைப்புகளின்வழி எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.*

**கடித உத்தி**

*பழையன கழிதலும் புதியன புகுதலும் என்னும் கூற்றிற்கேற்ப இலக்கியங்கள் காலந்தோறும் பல்வேறு வகைகளில் பல்கிப் பெருகி வளர்ந்துள்ளன. அவற்றில்,*

1. *மரபுக் கவிதை*
2. *புதுக்கவிதை*
3. *புதினம்*
4. *சிறுகதை*
5. *கட்டுரை*
6. *கடித இலக்கியம்*
7. *பயண இலக்கியம்*

*போன்று பல்வேறு கிளைகள் செழித்து வளர்ந்துள்ளன.*

கடியென் கிளவி, காப்பே
கூர்மை விரையே விளக்கம்
அச்சம் சிறப்பே விரைவே
மிகுதி புதுமை ஆர்த்தல்

. . . . . வரைவே மன்றல்

கரிப்பின் ஆகும்[146]

என்று விளக்குகிறது நன்னூல். மேற்காணும் சொற்கள் யாவும் கடிதம் என்றச் சொல்லுக்குத் தொடர்பு உடையவையாகும்.

கடிதம் என்ற சொல், அபிதான சிந்தாமணி, கலைக்களஞ்சியம், பழந்தமிழ் அகராதிகள், சங்க இலக்கியங்களில் இடம்பெறவில்லை. ஆனால் கடிதம் எழுதும் வழக்கம் மட்டும் காலம் காலமாக இருந்து வருகிறது. இச்சொல் இலக்கிய வழக்கில் ஓலை, மடல், முடங்கல், பத்திரம், திரிமுகம் என்ற சொற்களால் வழங்கப்படுகின்றன. கடி என்ற வேர்ச் சொல்லிலிருந்து கடிதம் என்ற சொல் தோன்றியது. கடி என்ற சொல்லுக்குப் பலபொருள்கள் உரியதை மேற்கண்டவாறு அறியலாம்.

‘வேட்டமங்கலம் யானை’ என்னும் சிறுகதையில் இத்தகைய கடித உத்திப் பயன்பாடு பொதிந்துள்ளது.

> மகன் எழுதிய கடிதத்திலுள்ள கடைசி வாசகங்களைப் பலமுறை வாசித்தேன். வரிகளுக்கிடையிலெங்காவது சிறிதொரு நம்பிக்கையின் . . . மனிதத்தின் மகோன்னத இதயத்தில் கலக்கி விட்ட இரகசியக் கரங்கள் யாவை ? சிந்தனைகள் பல தடங்களைத் தேடிக் கொண்டிருந்த போது இரத்த உறவுகளே சவக்குழிகள் பறித்த கதைகள் நைனா ஒரு தடவை சொன்ன நினைவின் புள்ளியில் மனம் நின்றது.[147]

மேற்கண்டதில் கடித உத்திப் பயன்பாடுகள் எடுத்தாளப்படுகின்றன.

## கேள்வி கேட்டல், வினாவிடை உத்திப் பயன்பாடு

படைப்பாளரின் பல்வேறு வடிவ உத்திகளில் கேள்வி கேட்டல் உத்தியும் ஒன்று. சிறுகதை, நாவல்களில் ஆங்காங்கே இவ்வுத்தி காணக்கிடக்கின்றது. மேலும் வினாக்களை எழுப்பி விடையையும் கூறி, கருத்தைப் புலப்படுத்துதல் இவ்வகையில் அடங்கும். இதனால் வாசகர் விடை தேட வேண்டிய அவசியம் இல்லை. ஒரே இடத்திலேயே சரியானதும், தவறானதுமான கருத்துக்களைக் கூறவும், சரியானதைத் தேர்வு செய்யவும் இவ்வகை உத்தி உதவுகின்றது.

ஏய்ந்தானா என்ன காட்டுக்கு வரச் சொன்னது ?[148]

என்ன வாப்பா வாயுக்குள் தெரிந்தது ?[149]

பெண்கள் பள்ளி முற்றத்துக்கு வரக்கூடாதுன்னு தெரியாதா ?[150]

போ, பெண்கள் இங்கே வரக்கூடாது[151]

நான் போய்க் கேட்டா சேட்டு தருவானா ?[152]

பெண் சம்மதிக்கணுமே ?[153]

எக்க போட்டுல கடலுக்குப் போறீரூமா ?

போறேன் கேக்கதான் வந்தேன்

கடல் பேடி உண்டா ?

இல்லை

வெலங்க போவணும் முடியுமா ?

போவலாம்

திரும்பி வர ரண்டு மூணு நாளாகும்

தெரியும்[154]

வாற போற பிச்சைக்காரியோ சொன்னதைக் கேட்டுட்டா கரையா ?

தங்கூது நானில்லையா ? நீங்களா ? எக்க மக்களெ பாக்கண்டமா ?[155]

எவ்வளவு ?

மூணு

முடியாது ?

ஒண்ணு ?

முடியாது

ஏழு சக்கரம்

முடிடியாது

நாலு சக்கரம் ?

அவ்வளவு வேணுமா ?

பின்ன வேண்டாமா ? வயிறு ஊதாண்டாமா ?

வயிறு ஊதுமா ?

ஊதல்லேண்ணா நான் ஊதவச்சுத்தாரேன்

. . . . . . . . . . . .

என்ன லேப்பே ?

தெரியுமா ?

தெரியாது

கிராமிய நாளு அடுத்தாச்சு

என்ன ?

எங்கே ?

இங்கே . . .[156]

*இதுவும், இவைபோன்ற இன்ன பிற உத்திகளையும் படைப்பாளுமைகளின்வழி எடுத்தாள்கிறார்.*

**தொகுப்புரை**

*தோப்பில் முகமது மீரான் தனிப்பட்ட உளப்பண்புகள் கொண்ட ஆளுமைத்திறனால் சமூகத்தில் மேலோங்கி நிற்பதைக் காணமுடிகிறது.*

*செயல், உடலியல் தொடர்பான நடத்தை, உளவியல், சீராக இருத்தல், பன்முக வெளிப்பாடு போன்றவைகள் ஆளுமையின் கூறுகளாகப் பொதிந்துள்ளன.*

*அவருடைய வாழ்வியலில் சமுதாயத்தின் எதிர்பார்ப்புகளை அனுபவத்தினால் உணர்ந்து கொண்டு தனிநபர்ஆளுமைக் கொண்டவராகத் திகழ்வது புலப்படுகிறது.*

*காலத்தை வென்று சமூகத்தில் ஒரு படைப்பாளியின் படைப்பு நிலைப்பேற்றுடன் திகழ்வதற்குப் படைப்பாளுமைப் பெரும் பங்கு வகிப்பது எடுத்துரைக்கப்பட்டது.*

*சிறுகதை, புதினங்களில் கருத்து வளம், கற்பனை, சொல் கருத்தியல் வளங்களும், சமூகவியல் வாழ்வியல் கூறுகள் படைப்பாளுமைகளின் வழி ஆய்ந்தறியப்பட்டன.*

*உளவியல், உளவியல் நடத்தை, சீராக இருத்தல், செயல், தலைமைப் பண்பு, நுண்ணறிவு, இசுலாம் சமுதாயத்தின் நற்புகழ் முதலான சிந்தனைகளும் வெளிப்படுத்தப்பட்டன.*

*உடல், புலன், மனவெழுச்சி, இனக்க முறைகள், சமுதாய உறவு நடுநிலைகள் கண்டறியப்பட்டன.*

*வெளிப்பாட்டுத் திறன், இலக்கணக் கூறுகள், மொழிநடைத் திறன்கள், அறிவுக் கூர்மை, அனுபவம் போன்றவைகளும் இவருடைய வெற்றிக்குத் துணைநிற்கும் பாங்குகளும், இன்ன பிறவும் இவ்வியலில் ஆராய்ந்து விளக்கப்பட்டன.*

## சான்றெண் குறிப்புகள்

1. ***சுராவின் தமிழ் - தமிழ் - ஆங்கில அகராதி,*** *ப.288.*
2. **International Advanced Deluxe Dectionary,** p.985.
3. ***கலைக்களஞ்சியம், தொகுதி I,*** *ப.460.*
4. *சிற்பி,* ***அகமும் புறமும்,*** *ப.36.*
5. ***கலைக்களஞ்சியம், தொகுதி I,*** *ப.460.*
6. *மேலது.,*
7. ***கல்வி உளவியல்,*** *ப.140.*
8. *மேலது., ப.141.*
9. *மேலது., ப.141.*
10. *மேலது., ப.144.*
11. *மேலது., ப.140.*
12. *மேலது., ப.141.*
13. www.ilankavi.blogspot.com.
14. ***குறள்.611.***
15. *ஜோர்.ஆர்.பாட்டி,* ***ஆளை அசத்தும் ஆளுமை,*** *ப.14.*
16. *தோப்பில் முகமது மீரான், "முன்னுரை",* ***வேர்களின் பேச்சு,*** *ப.8.*
17. *மேலது., ப.13.*
18. *மேலது., ப.25.*
19. *மேலது., பக்.50-51.*
20. *மேலது., ப.50.*
21. *மேலது., ப.108.*
22. *மேலது., ப.133.*
23. *மேலது., ப.63.*
24. *மேலது., ப.81.*
25. *மேலது., ப.127.*
26. *மேலது., ப.191.*
27. *மேலது., ப.254.*
28. *மேலது., ப.391.*

29. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.269.

30. மேலது., ப.330.

31. மேலது., ப.157.

32. மித்ரா, **புதுக்கவிதைகளில் உளவியல் சிந்தனை,** ப.1.

33. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.23.

34. மேலது., ப.49.

35. மேலது., ப.105.

36. மேலது., ப.114

37. மேலது., ப.277.

38. மேலது., ப.351.

39. மேலது., ப.479.

40. **குறள்.**453.

41. மேலது.457.

42. மேலது.295.

43. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** பக்.351-352.

44. மேலது., பக்.543-544.

45. மேலது., ப.493.

46. மேலது., ப.433.

47. **குறள்.**69.

48. மேலது.70.

49. மேலது.504.

50. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.495.

51. மேலது., ப.590.

52. மேலது., ப.435.

53. மேலது., ப.527.

54. மேலது., ப.596.

55. கோ.வெ.கீதா, **தமிழ் நாவல் ஓர் அறிமுகம்,** ப.171.

56. ச.அகத்தியலிங்கம் மற்றும் சோ.ந.கந்தசாமி, **முதல் கருத்தரங்குத் தமிழ் இலக்கிய ஆய்வுக் கோவை, தொ.II,** ப.158.

57. ஜெ.நீதிவாணன், **நடையியல்,** ப.22.

58. மீனாட்சி முருகுரத்தினம், **கல்கியின் சிறுகதைக் கலை,** ப.147.

59. தா.ஏ.ஞானமூர்த்தி, **இலக்கியத் திறனாய்வியல்,** ப.83.

60. அ.ச.ஞானசம்பந்தன், **இலக்கியக் கலை,** ப.282.

61. தா.ஏ.பியூலாமெர்சி, **நாவலின் பண்பாட்டுத்திறன்,** ப.206.

62. மு.வரதராசன், **இலக்கியத் திறன்,** ப.252.

63. ந.பிச்சமுத்து, **படைப்பிலக்கியம்,** ப.59.

64. மதியழகன், **மலேசியத் தமிழ் நாவல்கள்,** ப.135.

65. அகிலன், **கதைக்கலை,** ப.124.

66. சி.அ.மறைமலை, **இலக்கியக் கொள்கை,** ப.39.

67. **தொல்.பொருள்.,** நூ.272.

68. பா.உதயகுமார், **அறிஞர் அண்ணாவின் சிறுகதைத் திறன்,** ப.290.

69. தமிழண்ணல், **சங்க இலக்கிய ஒப்பீடு,** ப.125.

70. மா.இராமலிங்கம், **விடுதலைக்கு முன் தமிழ்ச் சிறுகதைகள்,** ப.169.

71. **தண்டியலங்காரம்,** நூ.31.

72. இ.சுந்தரமூர்த்தி, **திருக்குறள் அணிநலம்,** ப.21.

73. வைரமுத்து, **எல்லா நதியிலும் என் ஓடம்,** ப.28.

74. அ.ச.ஞானசம்பந்தன், **இலக்கியக் கலை,** ப.171.

75. சு.பாலச்சந்திரன், **இலக்கியத் திறனாய்வு,** ப.177.

76. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.19.

77. மேலது.

78. மேலது., ப.24.

79. மேலது., ப.98.

80. மேலது., ப.103.

81. மேலது., ப.144.

82. மேலது., ப.603.

83. மேலது., ப.479.

84. மேலது., ப.82.

85. மேலது., ப.103.

86. மேலது., ப.105.

87. மேலது., ப.157.

88. மேலது., ப.201.

89. மேலது., ப.289.

90. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.144.

91. மேலது., ப.493.

92. மேலது., ப.418.

93. இ.சுந்தரமூர்த்தி, **நடையியல் அறிமுகம்,** ப.17.

94. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.29.

95. மேலது., ப.56.

96. மேலது., ப.67.

97. தோப்பில் முகமது மீரான், **துறைமுகம்,** ப.104.

98. மேலது., ப.47.

99. மேலது., ப.93.

100. மேலது., ப.223

101. தோப்பில் முகமது மீரான், **கூனன் தோப்பு,** ப.95.

102. மேலது., ப.145.

103. தோப்பில் முகமது மீரான், **ஒரு கடலோர கிராமத்தின் கதை,** ப.132.

104. மேலது., ப.104.

105. தோப்பில் முகமது மீரான், **சாய்வு நாற்காலி,** ப.261.

106. மேலது., ப.330.

107. தோப்பில் முகமது மீரான், **துறைமுகம்,** ப.95.

108. மேலது., ப.290.

109. தோப்பில் முகமது மீரான், **அஞ்சு வண்ணன் தெரு,** ப.259.

110. தோப்பில் முகமது மீரான், **குடியேற்றம்,** ப.127.

111. தோப்பில் முகமது மீரான், **துறைமுகம்,** ப.162.

112. தோப்பில் முகமது மீரான், **ஒரு கடலோர கிராமத்தின் கதை,** ப.54.

113. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.375.

114. தோப்பில் முகமது மீரான், **குடியேற்றம்,** ப.142.

115. வை.சச்சிதானந்தம், **மேலை இலக்கியச் சொல்லகராதி**, ப.34.

116. ஏ.ஆர்.ஏ.சிவகுமாரன், **சிங்கப்பூர் மரபுக் கவிதைகள் ஓர் திறனாய்வு,** ப.137.

117. ச.வே.சுப்பிரமணியன், **கம்பன் இலக்கிய உத்தி,** ப.42.

118. மார்க்ஸ்காரர், **இக்கால இலக்கிய பன்முகப் பார்வை,** ப.487.

119. க.ப.அறவாணன், **கவிதையின் உயிர் உள்ளம் உடம்பு,** ப.5.

120. தா.வே.வீராசாமி, **தமிழ் நாவல் முன்னோட்டம்,** ப.22.

121. புதுமைப்பித்தன், **புதுமைப்பித்தன் கட்டுரைகள்,** ப.160.

122. **தொல்.பொருள்.**656.

123. **நன்னூல்.**14.

124. வெங்கடசாமிநாதன், **பாலையும் வாழையும்,** ப.87.

125. தோப்பில் முகமது மீரான், **சாய்வு நாற்காலி,** ப.261.

126. மேலது., ப.263.

127. **தொல்.பொருள்.செய்யுளியல்,** ப.229.

128. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.146.

129. மேலது.

130. மேலது., ப.193.

131. தோப்பில் முகமது மீரான், **துறைமுகம்,** ப.145.

132. மேலது., ப.323.

133. தோப்பில் முகமது மீரான், **அஞ்சு வண்ணன் தெரு,** ப.93.

134. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.272.

135. தோப்பில் முகமது மீரான், **அஞ்சு வண்ணன் தெரு,** ப.287.

136. தோப்பில் முகமது மீரான், **சாய்வு நாற்காலி,** ப.196.

137. மேலது., ப.319.

138. சா.சவரிமுத்து, **அம்மானை இலக்கியத் திறன்,** ப.82.

139. ச.வே.சுப்பிரமணியன், **கம்பன் இலக்கிய உத்திகள்,** ப.327.

140. மா.எழில் முதல்வன், **புதிய உரைநடை,** ப.116.

141. தோப்பில் முகமது மீரான், **துறைமுகம்,** ப.15.

142. மேலது., ப.79.

143. தோப்பில் முகமது மீரான், **கூனன் தோப்பு,** ப.258.

144. தோப்பில் முகமது மீரான், **குடியேற்றம்,** ப.229.

145. தோப்பில் முகமது மீரான், **ஒரு கடலோரக் கிராமத்தின் கதை,** ப.65.

146. **நன்னூல்.**457.

147. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.295.

148. தோப்பில் முகமது மீரான், **குடியேற்றம்,** ப.45.

149. மேலது., ப.45.

150. மேலது., ப.45.

151. மேலது., ப.161.

*152.* தோப்பில் முகமது மீரான், **குடியேற்றம்,** *ப.161.*

*153.* மேலது., *ப.190.*

*154.* மேலது., *ப.223.*

*155.* தோப்பில் முகமது மீரான், **அஞ்சு வண்ணன் தெரு,** *ப.79.*

*156.* தோப்பில் முகமது மீரான், **ஒரு கடலோர கிராமத்தின் கதை,** *ப.62.*

## இயல் 3

# இனவரைவியலும் வட்டார வழக்குகளும்

சமுதாயத்தில் ஒரு குறிப்பிட்ட மனித இனம் அல்லது குறிப்பிட்ட சமூகத்தின் பண்பாட்டினை அறிவதற்கு அப்பண்பாட்டை உடைய குடிமக்களின் பிறப்பு முதல் இறப்பு வரையிலான வாழ்வியற் கூறுகளை அவர்களோடு குறிப்பிட்ட நாட்கள் தங்கி வாழ்ந்து, கள ஆய்வு முறைகளின் வழிப்பெறப்படும் முதன்மையான தரவுகளைக் கொண்டு விளக்கமாகக் குறிப்பிடப்படுவது இனவரைவியல் ஆகும். அம்மக்களிடையே மரபு ரீதியாகப் பேசப்பட்டு வழக்கத்தில் பயன்பட்டு வருகின்ற சொல்லாடல்களில் இருப்பது வழக்குச் சொற்கள் ஆகும். எனவே தோப்பில் முகமது மீரான் படைப்புகளை வரையறுத்துக் கொண்டு அப்படைப்புகள் உருவாகியுள்ள கன்னியாகுமரி மாவட்டத்தையும், அங்குள்ள மக்களின் வழக்காறுகளைப் பொதுவாகவும், இசுலாம் மக்களின் வழக்குச் சொற்களை சிறப்புக் கூறுகளாகவும் இன்ன பிறவும் இவ்வியல் ஆராய்கிறது.

### இனவரைவியல்: சொற்பொருள் விளக்கம்

இனவரைவியல் (Ethnography) எனும் சொல்லுக்கு மனிதவினப் பரப்பு விளக்கவியல் என்றும், பிரிட்டானிக்கா தகவல் களஞ்சியம் குறிப்பிட்ட மானிடச் சமுதாயம் ஒன்றினைப் பற்றிய விரிவான முழுவதுமான அறிவினை எடுத்துரைக்கின்ற. பழங்குடிச் சமூகம், கிராமச் சமூகம் முதலான சிறு சிறு சமூகங்களின் இடவியல்பு விளக்கம், மக்களின் உருவத்தோற்றம் வாழிட அமைப்பு, வாழ்க்கைமுறை, பேசும்மொழி, சமூக அமைப்பு, பொருளாதாரம், சமயம் சட்ட முறைகள், தொழில் நுட்பம், கலை மற்றும் பண்பாட்டின் அனைத்துக் கூறுகளையும் தனித்தனியாக ஆராய்ந்து அப்பண்புகளை முறைப்படுத்தி இனக்குழுவியல் விளக்கும் ஒவ்வொரு சமூகத்தின் அக, புறப் பண்பாடுகளை அறிவியல் நோக்கில் இது ஆராயும்[1] என்று ‘மானிடவியல் சொல்லகராதி’ விளக்கமளிக்கிறது.

இதனடிப்படையில் இனவரைவியல் என்பது குறிப்பிட்ட மனித சமூகத்தின் அல்லது இனத்தின் ஒட்டுமொத்த வாழ்வியல் கூறுகளையும் விரிவாக விளக்குவதே என்னும் பொருளில் அமைகிறது எனலாம்.

**பக்தவத்சல பாரதி**

‘இனக்குழுவியல்’ என்னும் பொருளுடைய ‘Ethnography’ என்னும் ஆங்கிலச் சொல் ‘Enthnos’ ‘graphein’ ஆகிய கிரேக்கச் சொற்களின் மூலங்களைப் பெற்றது. “Ethnos’ என்பதற்கு இனம் (race) இனக்குழு (ethnic group) மக்கள் (People) என்பது பொருள். ‘Graphein’ என்பதற்கு ‘எழுதுவது அல்லது வரைதல்’ (To write) என்பது பொருள். ஆகையால் இனவரைவியல் என்பது ஒரு தனிப்பட்ட இனக்குழு அல்லது மக்களைப் பற்றி எழுதுதல் என்னும் பொருளை உணர்த்துகிறது என்று மானிடவியல் ஆய்வாளர் பக்தவத்சல பாரதி விளக்கம் அளிக்கிறார்.

**பால் அட்கின்ஸன்**

இனவரைவியல் என்பது ஓர் ஆய்வு முறைமையைக் குறிப்பிடும், அதே வேளையில், அந்த ஆய்வுச் செயற்பாட்டின் விளைவாகச் செய்யும் எழுத்து வடிவப் படைப்பான தனி ஒரு கலை வடிவத்தைச் சுட்டிக்காட்டுகிறது என்று மேலைநாட்டு அறிஞர் விளக்கம் அளிக்கிறார்.

**இனவரைவியல் குறித்த வரையறை**

ஓர் குறிப்பிட்ட மக்கட் குழுவின் எல்லா வகையான மரபுகளையும் அவ்வினத்தாரின் உணர்வோடு பதிவு செய்வது இனவரைவியலாகும். அது எந்தக் குழுவைப் பற்றியதாக வேண்டுமானாலும் இருக்கலாம். மனிதப் பண்பாட்டின் விளக்கவியல், வருணனைக் கலை மற்றும் அறிவியல் அந்நியமான உலகங்களைப் பற்றி அறிதல், ஒரு இனத்தைப் பல்வேறு கூறுகளின் வாயிலாக இனங்காணுதல் குறிப்பிட்ட இனத்தின் கலாச்சாரப் பழக்க வழக்கங்களை முன் வைப்பது. எழுத்தாளன் ஆய்வுக்குட்பட்ட மக்களின் விளக்க உரைகள், துல்லியமான தரவுகளை வெளிக்கொணர்வதும், களப்பணிகளை மையமாகக் கொண்டதும் என்பது வருகிறது.

மானிடவியல் அறிஞரான பக்தவத்சல பாரதி, ஒரு தனித்த சமூகத்தின் பண்பாட்டைப் பற்றி மானிடவியலாளர்கள் அச்சமூகத்தாரோடு நீண்டகாலம் ஒன்றி வாழ்ந்து ஆய்வு செய்து அதனை, எழுத்தில் எழுதி அளிக்கும் தனி வரைவு நூலே இனவரைவியல் எனப்படும். இத்தகு நீண்டகாலக் களப்பணியில் உற்றுநோக்கிப் பண்பாட்டை விவரிக்கும் தனி வரைவுகளை (Monographs)

எழுதும், மானிடவியலாளர்கள் இனவரைவியலாளர் (Ethnographer) எனப்படுவர் என்று எடுத்துரைக்கிறார்.

இனவரைவியல் என்பது களப்பணியை அடிப்படையாகக் கொண்ட கண்ணோட்டமாகும். அதாவது மானிடவியலார் ஒரு குறிப்பிட்ட சமுதாயம் அல்லது ஏதேனும் ஒரு துணைப் பண்பாட்டைப் பற்றி அப்பண்பாட்டைக் கொண்டிருக்கும் மக்களோடு குறிப்பிட்ட காலம் தங்கியிருந்து அவர்களோடு வாழ்ந்து அவர்களுடைய அன்றாட வாழ்க்கையில் பங்கேற்று ஆராய்ந்து வெளிப்படுத்துவது என்று தனஞ்செயன் சுட்டுகிறார்.

இனவரைவியல் என்பது ஒரு குறிப்பிட்ட மனித சமூகத்தில் மேற்கொள்ளப்படுகின்ற களப்பணி, பண்பாட்டு ஆய்வு முறையாகவோ ஆய்வின் வெளிப்பாடாக அமையக் கூடிய முடிவுகளின் பிரதியாகவோ இருக்கலாம். இதன்மூலம் அம்மக்களின் பண்பாடு, சட்ட நியதிகள், வழிபாட்டு முறைகள், சடங்குகள் சமய நிலைகள் போன்றவைகள் வெளியுலகிற்குப் புலப்படுத்துகின்றன என்று அன்பரசன் தனது ஆய்வேட்டில் பதிவிடுகிறார்.

ஒரு குறிப்பிட்ட மனித இனம் அல்லது சமூகத்தின் பண்பாட்டை அறிவதற்கு, அப்பண்பாட்டையுடைய மக்களோடு குறுகிய காலமோ அல்லது நீண்ட காலமோ வாழ்ந்து, கள ஆய்வு முறைகளைப் பயன்படுத்தி அவர்களின் எல்லாவிதமான மரபுகள் பற்றியும் அறிந்து அதனை அப்படியே முறைப்படுத்தி எழுத்துப்பூர்வமாக அளிக்கும் ஆவணமே இனவரைவியல் என்பது புலனாகிறது.

**ஹெர்கோவிட்ஸ் (Herkovits)**

ஏதேனும் ஒரு பண்பாட்டைப் பற்றி எழுதப்பட்ட வரைவு அல்லது விளக்கமே இனவரைவியல் *(தனஞ்செயன், ஆ., 2006:3)* என்று குறிப்பிடுகிறார்.

**புருனர் (Brunvand)**

ஒரு குறிப்பிட்ட மக்கள் அல்லது வட்டாரத்தில் காணப்படும் அனைத்து வகையான மரபுகள் பற்றி மேற்கொள்ளப்படும் விளக்கமுறை ஆய்வே இனவரைவியல் என்று சுட்டுகிறார்.

**ஏகார் (Agar)**

*நமக்கு மிகவும் அந்நியமான உலகங்களோடு போராடி, அவற்றைப் பற்றி அறிந்து கொள்வதற்கு முக்கியத்துவம் அளிக்கக்கூடிய சமூக ஆய்வு முறையை இனவரைவியல் என்றோ, நாட்டார் பார்வையிலான விவரிப்பு* (Folk Description) *என்றோ அழைக்கின்றனர் என்று வரையறைப் படுத்தியுள்ளார்.*

**பெடர்மேன் (Feterman)**

*ஒரு குழு அல்லது பண்பாட்டைப் பற்றி விளக்ககிக் கூறும் ஒரு வருணனைக் கலை மற்றும் அறிவியல் தான் இனவரைவியல். இந்த விவரிப்பானது, எங்கோ ஒரு நாட்டிலுள்ள சிறிய இனக்குழுவைப் பற்றியதாக இருக்கலாம் அல்லது ஒரு நடுத்தரமான நகரத்திலுள்ள ஒரு பள்ளிக்கூட வகுப்பறை பற்றிய சித்தரிப்பாகவும் கூட இருக்கலாம் என்றும் விளக்கம் தருகிறார்.*

**பெர்டாஸ், பிளண்மெர் (Pertux, Plummer)**

*ஒரு இனத்தை அடையாளப்படுத்துவது இனவரைவியலாகும். இது கடந்த காலம் பற்றியதாக இருக்கலாம். அதாவது, ஒரு குறிப்பிட்ட மக்களை உற்றுநோக்கல் உத்திகள் மூலம் ஆராய்ந்து, அவர்களின் வாழ்க்கை வரலாற்றுக் கூறுகளையும் மேலும் பல தகவல்களையும் எடுத்தியம்புவதை இனவரைவியல் என்று பெர்டாஸ் மற்றும் பிளன்மெர் ஆகிய இருவரும் சுட்டுகின்றனர்.*

**லன்ச் (Lunch)**

*ஒரு குறிப்பிட்ட இனத்தைப் பற்றிய நிகழ்கால நிகழ்வுகளையும், எதிர்காலத்தையும் சேர்த்து ஆராய்வது. இது கலாச்சார பழக்க வழக்கங்களை முன் வைப்பது இனவரைவியல் என்று தன் கருத்தைப் பதிவு செய்கிறார்.*

**டென்சின் (Denzin)**

*எழுத்தாளன் மற்றும் அவன் யாரைப் பற்றி எழுதுகிறானோ, அந்த மக்களாகிய அவர்களுடைய வாழ்க்கை முறையைப் பற்றிய விளக்க உரைகள், விவர அறிக்கைகளை உருவாக்கக் கூடிய விசாரணை முறை மற்றும் எழுத்து வடிவமே இனவரைவியல் என்கிறார்.*

**லெவிட்ராசு**

பல்வேறுபட்ட இனக்குழுக்களின் தொலைநோக்குடைய வாழ்வியல் நெறிகளைக் கூடிய வரையிலும் துல்லியமாகப் பதிவு செய்யும் குறிக்கோள் உடையது இனவரைவியல் ஆகும்.

**மாலினோவ்ஸ்கி**

குறிப்பிட்ட இனங்களின் உறவு நிலைகள் அவர்களின் வாழ்க்கை அவர்களின் சிந்தனை உலகம் ஆகியவற்றை அவ்வினத்தாரின் உணர்வோடு வெளிப்படுத்துவது இனவரைவியல் ஆகும்.

மேற்கண்டவாறு இனவரைவியல் பற்றித் தமிழ் அறிஞர்கள் மற்றும் மேலைநாட்டு அறிஞர்களின் விளக்கங்கள் காணப்படுகின்றன.

**இனவரைவியல் கூறுகள்**

ஓர் அயற்பண்பாட்டை விளக்க முற்படும் போது எந்த ஒரு சிறந்த இனவரைவியல் தொகுப்பும், பின்வரும் முதன்மையான கூறுகளைப் பற்றி விளக்குவதாக அமையப் பெறுகின்றன. அவற்றைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

1. புவிச்சூழல்
2. சுற்றுச்சூழல்
3. காலநிலை
4. குடியிருப்பு நிலை
5. பொருள்சார் பண்பாடு
6. குடும்ப அமைப்பு
7. திருமணமுறை
8. உறைவிட முறை
9. வாழ்வியற் சடங்குகள்
10. குழந்தை வளர்ப்பு முறை
11. பண்பாட்டு வயமாக்கமுறை
12. மக்களின் உளவியற் பாங்குகள்
13. மணக்கொடை

14. மணவிலக்கு முறை
15. வாழ்க்கைப் பொருளாதாரம்
16. தொழிற்பகுப்பு
17. உற்பத்திமுறை
18. நுகர்வுமுறை
19. பங்கீட்டு முறை
20. பரிமாற்ற முறை
21. கைவினைத் தொழில்கள்
22. அரசியல் முறை
23. அதிகார உறவுகள்
24. சமூகக் கட்டுப்பாடு
25. மரபுசார் சடங்குகள்
26. சமய நம்பிக்கைகள்
27. சடங்குகள்
28. வழிபாட்டு முறைகள்
29. மந்திரம்
30. சூனியம்
31. விழாக்கள்
32. இசை
33. விளையாட்டுகள்
34. அழகியற் சிந்தனைகள்
35. வழக்காறுகள்
36. ஈமச்சடங்குகள்
37. பிற தொடர்புடைய செய்திகள்

மேற்கண்ட வகைகளில் இனவரைவியல் கூறுகள் அமைகின்றன.

**இலக்கியம் (Literature)**

மனிதன் தன் அனுபவங்களை ஆவணப்படுத்தும் கருவி இலக்கியம். மனிதன் தன் உணர்வுகளை வெளிப்படுத்தும் பல்வேறு கலைகளுள் இலக்கியமும் ஒன்றாகும். இலக்கியம் காலந்தோறும் சூழலுக்கேற்ப பாடுபொருள் அமைப்பிலும், வடிவ அமைப்பிலும் மாறி வருகின்றன. இத்தகைய இலக்கியங்கள்

அவ்வக்கால மக்களின் பண்பாட்டுக் கருவூலமாகவும், வாழ்க்கையினைப் படம்பிடித்துக் காட்டுவதாகவும் அமைந்துள்ளன.

**இலக்கியம் சொற்பொருள் விளக்கம்**

"இலக்கியம் என்பதற்கு இலக்கணம் அமைந்தது"[2] என்றும், இலக்கணம் அமைந்த நூல், எடுத்துக்காட்டும் குறி, இலக்கணம் அமையப் பெற்ற பொருள்[3] என்றும், 'இலக்கண நூற்படி முன்னோர் தந்த செய்யுள் உதாரணம் குறி'[4] என்றும், ஆன்றோர் நூல், இலக்கு, கலையியல் வாய்ந்த எழுத்தாண்மை[5] என்றும் அகராதிகள் விளக்கம் தருகின்றன.

இலக்கியம் என்னும் சொல்லின் பொருள் பற்றியும் அச்சொல்லின் தோற்றம் பற்றியும் இது நாள் வரை விளக்கங்கள் எழுந்த வண்ணம் உள்ளன. இலக்கியப் படைப்பாளர்களும் திறனாய்வாளர்களும் இச்சொல் குறித்துப் புதுப்புது விளக்கம் தருகின்றனர். இவர்களுள் பெரும்பகுதியினர் இச்சொல்லுக்கு நேரடியான பொருள்தர இயலாது என்றே எழுதுகின்றனர். தமிழ் இலக்கியங்களில் இச்சொல் இடம்பெற்ற காலம் மற்றும் தோற்றம் குறித்தும் பல சான்றுகளை ஆராயலாம்.

இலக்கு + இயம் என்னும் இருசொற்களாகப் பிரித்து இதற்குப் பொருள் கூறுவர். அதாவது 'இலக்கு' என்னும் சொல்லுடன் 'இயம்' சேர்ந்தது. இலக்கு என்பது நோக்கு கொள்கை எனப் பொருள்படும். இயம் என்பது தன்மை அல்லது பண்பு எனப் பொருள்படும். ஒரு கொள்கையின் தன்மை, பண்பு என இதற்குப் பொருள் கூறுவர். ஒரு கொள்கையை அடிப்படையாகக் கொண்டு எழுந்த மொழிப்படைப்பு இலக்கியம் என்று கருதலாம். இலக்கு என்ற சொல்லே திரிந்து இலக்கியம் என்று வந்தது எனவும் பொருள் உரைப்பர்.

இதுபோலவே 'இலக்கணம்' என்ற சொல்லையும் இலக்கு + அணம் எனப் பிரித்துப் பொருள் கூறுவர். இலக்கு - விதி, அணம் - அழகு, விதிகளை அழகுடன் அல்லது முறையுடன் தருவது இலக்கணம் எனப் பாவலர் பாலசுந்தரம் தம் இலக்கணக் கலைச்சொல் அகராதியில் விளக்கியுள்ளார் எனலாம்.[6]

*வடமொழியில் உள்ள லட்சிய என்னும் சொல் திரிந்து இலக்கியம் என வந்தது என்றும் இச்சொல்லின் தோற்றம் பற்றிக் கூறுவர். ஆனால் இக்கருத்தை மறுத்தும் சிலர் எழுதியுள்ளனர். வடமொழியில் காவ்யா, சாகித்ய என்னும் இருசொற்களும் இலக்கியத்தைக் குறிக்கின்றன. எனவே இலட்சிய என்னும் வடசொல் இலக்கியத்தைக் குறிப்பதாகக் கொள்ள இயலாது என இக்கருத்தை மறுக்கின்றனர் என்பர்.*[7]

*தமிழில் 'இயம்' என்னும் பின்னொட்டு அல்லது சொல்லுருபு பல முதன்மைச் சொற்களுடன் இணைத்துக் கூறப்படுகிறது. பொருள்களை நோக்கும்போது இலக்கணம் என்பதற்கு 'விளக்கமானது' என்னும் பொருளைக் கொள்ள முடிகிறது. இலக்கு என்னும் பொருளையும் கொள்ள முடிகிறது. இலக்கு என்னும் சொல்லும் தொல்காப்பியத்தில் குறப்பிடப்பட்டுள்ளது. அதற்கு நோக்கம் எல்லை எனப் பொருள் கொள்ளப்படுகிறது.*

*இலக்கண நூல் வரிசையில் தொல்காப்பியத்தில் இடம்பெறாத 'இலக்கியம்' என்னும் சொல் நன்னூலில் இடம்பெற்றுள்ளது. நன்னூலின் காலம் கி.பி.13 ஆம் நூற்றாண்டு. கால இடைநிலைகளின் இலக்கணம் கூறும் பவணந்தி முனிவர் நன்னூலில் இச்சொல்லைக் கையாண்டுள்ளார்.*

*இலக்கியம் கண்டதற்கிலக்கணம் இயம்பலின், பகுதி விகுதி பகுத்திடை நின்றதை வினைப்பெயர் அல்பெயர்க் கிடைநிலை எனவே*[8] *என்பது நன்னூல். இலக்கியம் என்னும் சொல் இதனுள் இடம்பெற்றிருப்பதுடன் இலக்கியத்தை வைத்தே இலக்கணம் எழுதப்படுகிறது என்ற இலக்கண மரபும் இதில் உணர்த்தப்படுகிறது. நன்னூல் இலக்கண அமைப்பு இளம்பூரணர் உரையின் அடிப்படையில் எழுந்தது என்பர். ஆனால் இளம்பூரணர் உரையில் எங்கும் இச்சொல் இடம்பெறவில்லை. எனவே இச்சொல்லை நன்னூலாரின் தேர்வு எனக் கொள்ளலாம். மேலும் நன்னூல் காலத்திற்கு முன்பே பழம்பாடல் ஒன்றில் இச்சொல் பயின்று வருவதாகவும் சிலர் சுட்டிக்காட்டியுள்ளனர்.*

இலக்கியம் இன்றி இலகக்ண மின்றே
எள்ளின் றாகில் எண்ணெயும் இன்றே
எள்ளின்று எண்ணெய் எடுப்பது போல
இலக்கியத் தினின்றும் எடுபடும் இலக்கணம்[9]

என்னும் இப்பாடல் நன்னூல் காலத்துக்கு முந்தையது எனில் நன்னூல் காலத்திற்குமுன் சமூக நடைமுறையில் இச்சொல் இடம்பெற்றுவிட்டது என்பதை அறியலாம்.

இலக்கிய வரிசையில் 'இலக்கியம்' என்னும் சொல் தோலாமொழித்தேவர் எழுதிய 'சூளாமணி'யில் பயன்படுத்தப்பட்டுள்ளது.

காம நூலினுக்கு இலக்கியம் காட்டிய வளத்தால்[10]

என்பது சூளாமணி. இது நன்னூலுக்கு முன்னர்ப் பாடப்பட்ட நூல் என்பர்.

**இலக்கியம் பற்றி அறிஞர்கள் விளக்கம்**

'இலக்கியம்' என்னும் சொல் பரந்துபட்ட பொருளில் விளக்கப்படுகிறது. இலக்கியம் பற்றி விளக்கப் புகுந்த பலரும் அதன் பொருளை வரையறுக்க இயலாது என்று கூறுகின்றனர். எனவே இச்சொல்லின் விளக்கத்தையும், பண்பையும் நுணுக்கமாக ஆராயலாம்.

ஆர்ப்பரித்து எழும் உணர்ச்சியை அடக்கவும் அடக்கி ஒடுங்கிக் கிடக்கும் உள்ளத்திற்கு உணர்ச்சி ஊட்டவும் முனையும் மொழிப்புனைவு இலக்கியம் எனலாம். இலக்கியத்தின் உள்ளே அமைந்திருக்கும் கருத்து வெளிப்படும்போது ரசனை உணர்ச்சி முழுமையடைகிறது.

இலக்கியம் என்பது ரசனையின் அடிப்படையில் தோன்றுகிறது. ஆங்கிலத்தில் லிட்டரேச்சர் (Literature) என்று கூறப்படும் சொல்லிற்கு இணையான சொல்லாக 'இலக்கியம்' என்னும் சொல்லைக் குறிப்பிடுகின்றனர். இலக்கியம் என்ற சொல்லிற்குத் தமிழ் அகராதிகள் பொருள் கூறுவது போலவே ஆங்கில அகராதிகளும் பொருள்கூறி விளக்குகின்றன. 'The Advanced Learner's Dictionary' என்னும் ஆங்கில அகராதி, கலைத்திறம் மிகுந்த படைப்புகள் இலக்கியம், கலையழகுடன் எழுதப்படும் எழுத்துக்கள் இலக்கியம் குறிப்பாக புனைகதை, நாடகம், செய்யுள், கவிதை முதலியன இதில் அடங்கும் (Writings that are valued as works of art fiction, drama and poetry) எனக் குறிக்கப்பட்டுள்ளது. இலக்கியம் என்பது மொழியினால் உண்டாகும் கலை வடிவம் என்பது இதன் மையக் கருத்தாகும். (The English Reference Dictionary) கலை இயல்புடன்

எழுதப்படுவனவும் குறிப்பிட்ட பொருள் குறித்து எழுதப்படும் நூல்களும் இலக்கியம் என்றே கொள்ளப்படுகின்றன. (Written works that are regarded as having artistic merit books and writing as a particular subject) எனக் கூறுகிறது.

இலக்கியம் பற்றிய முழுமையான விளக்கம் இன்னும் தேடலில்தான் உள்ளது எனத் திறனாய்வாளர்களும், படைப்பாளர்களும் கூறி வருகின்றனர்.

'இலக்கியம்' என்பது இதுதான் என வரையறுக்க முயலும் போது சிக்கல்கள் ஏற்படுகின்றன. ஒரு சரியான முடிவுக்கு வர முடியவில்லை எனக் கருதும் தமிழவன்,

> இலக்கியம் என்பது ஒன்றுதான் எனப் பேச முடிகின்றது. இதுதான் இலக்கியம், அதுதான் இலக்கியம் என்ற கூச்சல்கள் அர்த்தமிழ்க்கின்றன[11]

என்கிறார்.

இலக்கியத்திற்குரிய பொருள் சமூகம், பொருளாதாரம், அரசியல் என்னும் துறைதோறும் மாறுபட்டு நிற்கிறது. எனவே அதனைப் புரிந்து கொள்ளும் முயற்சியே தேவை என்பதும் அது பற்றி விளக்க முற்படுதல் தேவையற்றது என்பதும் இவர் கருத்தாகும்.

இலக்கியம் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் கண்ணாடி (Literature is the Mirror of the Life) எனக் கூறப்படுகிறது. வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் சில கூறுகள் இலக்கியத்தில் உள்ளன. ஆனால் அது முழுமையாக வாழ்க்கையைப் பிரதிபலிக்கிறது எனக் கூறமுடியாது. தலைசிறந்த புனைகதைப் படைப்பாளியான புதுமைப்பித்தன் இலக்கியம் என்றால் என்ன என்பது பற்றி விளக்க முயல்கிறார்.

> இலக்கியத்தைப் பற்றி விஸ்தரிக்கலாம் விவாதிக்க முடியாது சூத்திரத்தால் விளக்க முடியாது தர்க்கத்திற்கு அடங்கியதல்ல[12]

என்பதிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

மக்களுக்கான கருத்தை மக்களுக்குரிய சிந்தனையை அவர்கள் விரும்பும் வண்ணம் மனங்கொள்ளத்தக்க வகையில் எடுத்துக் கூறுவது என 'இலக்கிய வரலாறு' பதிவு செய்கிறது.

> இலக்கியம் என்பது மக்களுக்குத் தேவையான கருத்துக்களை அல்லது மக்களது சிந்தனைகளைச் சிறந்த சொற்களால் சொல்லக்கூடிய கருவியாகும்.[13]

*தமிழ் இலக்கிய வரலாறு, வகைமை, திறனாய்வு, மொழி முதலிய தளங்களில் காலத்திற்கேற்ப நூல்களைப் படைத்த மு.வரதராசனார், இலக்கியம் பற்றி மிக எளிமையாக விளக்குகிறார்.*

> கலைகளுள் இலக்கியமே மிகச் சிறந்தது. மனித வாழ்வின் சிறப்பியல்பாக அமையும் மொழியின் சொற்களையே ஊடுபொருளாகக் கொண்டு அமைவது இலக்கியம்[14]

*என்பது அவர் கூற்றாகும்.*

*இலக்கியம் ஒரு கலை, அது கலைகளில் சிறந்த கலை உள்ளத்து உணர்ச்சியே கலை வடிவமாக அமைகிறது. உள்ளத்து உணர்ச்சியைச் சொற்களால் தீட்டும் ஓவியம் என்றும் கூறலாம். ஆகவே உள்ளத்தின் வேறுபாட்டிற்கு ஒப்ப இலக்கியமும் பல்வேறு வகையாக வேறுபட்டு நிற்கும்.*

*மொழியில் உருவாகும் சிறந்த கருத்தாடல்கள் யாவும் இலக்கியம் என்றே கூறப்படுகின்றன.*

> மனிதர்கள் வாழ்க்கையில் சிறப்பாகக் கண்டவை. அனுபவித்தவை எவையோ ? நம் எல்லார்க்கும் பன்னெடுங்காலத்திற்குப் பிறகும் கவர்ச்சி ஊட்டுவன எவையோ ? காலந்தோறும் நம் கவிஞர்கள் சிந்தித்து வருகின்றவை எவையோ ? அவற்றை எல்லாம் அறிவிக்கும் உயிர்த்துடிப்புடைய பதிவேடே இலக்கியமாகும். மொழி என்னும் கருவி வாயிலாக வெளிப்படும் வாழ்க்கை அனுபவமே இலக்கியம்[15]

*என்று கூறப்படும் கருத்தும் எண்ணத்தக்கது. அழகுணர்ச்சியைத் தூண்டும் சொற்கள் இலக்கிய உருவாக்கத்திற்குத் தேவையாகின்றன. அழகும் ஆழ்ந்த பொருளும் கொண்ட சொற்கள் இலக்கியத்தை முழுமை அடையச் செய்கின்றன.*

*“இலக்கியம் வடிவத்தோடு இணைந்தது என்பதை, பொருத்தமான வடிவத்துடன் வெளிப்படுத்தப்படும் கலை இலக்கியமாகும்”[16] என லெனின் கூறுகிறார். கவின்மிகு சொற்களைக் கொண்டு கற்பனை நயத்தோடு கலையழகும் புலப்படுமாறு படைக்கப்படுபவை எல்லாம் ‘இலக்கியம்’ எனப் போற்றத்தக்கன என்பது அ.ச.ஞானசம்பந்தன் கூறியுள்ளார்.[17] இந்த வாழ்க்கைக் குறிக்கோளை*

எடுத்துக் கூறுவது இலக்கியம் என்றும் சிறந்த மொழி அமைப்பைக் கூறுவது இலக்கணம்[18] என்றும் அவர் குறிப்பிடுகின்றார்.

'பிரச்சினைகளைப் பதிவு செய்தால் மட்டும் போதாது. அது மக்கள் மனத்தில் நிலைத்து நிற்குமாறு செய்வதே இலக்கியம்[19] என்று சி.மௌனகுரு தெரிவிக்கின்றார். இலக்கியம் வாழ்க்கையின் விமரிசனம், எழுத்து வடிவத்தில் தோன்றும் கலை, இயற்கை, அழகைப் படம்பிடித்துக் காட்டும் மொழிப்படைப்பு, வாழ்க்கையின் அனுபவக் கருவூலம் வாழ்க்கைக்கு வழிகாட்டும் ஒளி விளக்கு என்று அறிஞர்கள் பலவிதத்தில் விளக்கம் தருகின்றனர்.

இலக்கியத்தைப் படைக்கும் படைப்பாளி தன் உள்ள மகிழ்ச்சிக்காகவும், சமுதாயத்துக்காகவும் படைப்பதும் உண்டு. சமுதாயம் குறித்துப் பாடும்போது இருக்கும் பிரச்சினைகளை எடுத்துக் கூறுவதும் அவற்றிற்குத் தீர்வு காணுவதும், என இரண்டின் அடிப்படையில் இலக்கிய வெளிப்பாடுகள் ஏற்படுகின்றன. இவை தன் பொருட்டுக் கவிதை, பிறர் பொருட்டுக் கவிதை சமுதாய நிலைக்கவிதை எனப் பலவகைகளாகும்[20] என்கிறார் வையாபுரிப்பிள்ளை.

இலக்கியம் வாழ்க்கையோடு தொடர்புடையது. வாழ்க்கைக்கு அது அடிப்படையாக இருக்கிறது. நல்ல வாழ்க்கை அமைவதற்கு உரிய கருவியாக இலக்கியம் படைக்கப்படுகிறது. இலக்கியம் படைக்கப்படுவதற்குரிய உந்து சக்திகளை இலக்கியத் துடிப்புகள் (Literature Impulses) எனக் கூறுகின்றனர். இலக்கியம் மனித முயற்சியால் அன்றித் தெய்வீக அகத்தூண்டலால் (Divine inspiration) வெளிப்பட்டு வருகின்றது.

**இலக்கியம் தோன்றுவதற்குரிய காரணங்கள்**

பிராய்டு (Freud) போன்ற உளவியலாளர்கள் மனிதனின் அடிமனத்தில் பதிந்து கிடக்கும் உணர்ச்சிகள் அகத்தூண்டுதலால் வெளிப்படுகின்றன என்கின்றனர். இந்த அகத்தூண்டல் செயலும் இலக்கியப் படைப்பிற்குக் காரணமாக அமையலாம்.

*கலை தோன்றுவதற்குரிய காரணங்கள் நான்கை மு.வரதராசனார் குறிப்பிடுகின்றார். அவை,*

1. *தன்னுணர்ச்சியை வெளிப்படுத்தும் ஆர்வம்*
2. *பிறர் வாழ்வில் உள்ள அக்கறை*
3. *உண்மை உலகின் மீது உள்ள ஈடுபாடு*
4. *கற்பனை உலகைப் படைக்கும் ஆர்வம்*[21]

*என்பனவாகும்.*

*படைப்பாளர்களும் தங்கள் அனுபவத்தையே படைப்பாக வெளிப்படுத்துகின்றனர். அனுபவத்தின் வெளிப்பாடு படைப்பு என்று பலரும் கூறுகின்றனர். அனுபவம் இல்லாமல் ஒன்றை எழுத இயலாது என்பது இவர்கள் கருத்து. இக்கருத்து சீர்தூக்கிப் பார்க்கத்தக்கது. நேரடியாக அனுபவம் இல்லை எனினும் ஒரு அனுபவத்தின் மூலம் பிறிதொன்றை ஒப்பிட்டுப் பார்த்துத் தம் கற்பனையையும் சேர்த்துக் கவிஞர்களும், எழுத்தாளர்களும் படைப்பாக்கம் செய்ய முடியும். இதுதான் நேரில் அனுபவித்துச் செல்வது போன்ற பிரமையை* (Image) *நமக்கு உண்டாக்கி விடுகிறது. இதுதான் கலைப் படைப்பின் சிறப்பு. இந்த அடிப்படையில் இலக்கியம் உருவாக அனுபவம் துணை செய்கிறது எனக் கூறலாம். ஒவ்வொரு படைப்பாளனும் தன் அனுபவத்தைக் கூறும்போது வாசகர்கள் பலவகை இலக்கியச் சுவைகளைப் பெறுகின்றனர்.*

*எனவே சமுதாயத்தில் இலக்கியம் தோன்றப் பொதுவான காரணங்களும் தனிமனிதன் என்னும் வகையில் ஒரு படைப்பாளி இலக்கியம் படைக்கத் தூண்டுதலாக இருக்கும் உந்து சக்திகளும் அடிப்படையாய் அமைகின்றன.*

**இலக்கியமும் வாழ்க்கையும்**

*மனித சமூகம் பல வர்க்கங்களாகப் பிரிந்து கிடக்கிறது. வர்க்கங்களுக்கிடையில் முரண்பாடுகள் வளர்கின்றன. முரண்பாடுகளைத் தீர்த்து ஒரு வர்க்கமாக ஆக்கும் முயற்சியும் தொடர்கிறது. வர்க்கப் பின்புலத்தில் வாழும் மனிதர்களுக்கு அந்தந்த வர்க்கச் சூழலுக்கேற்ற வாழ்க்கை அமைகிறது. இலக்கியங்கள் இந்த வர்க்கங்களின் வாழ்க்கையை ஒட்டியே அமைகின்றன. எந்தக் காலத்தில் எந்த வர்க்கம். ஆதிக்கம் செலுத்துகிறதோ அந்த வர்க்கச் சாயலும்,*

பண்புகளும் இலக்கியத்தில் பதிவாகி விடுகின்றன. இது தவிர்க்க இயலாதது இயங்கியல் முறை சார்ந்தது. பாட்டாளி வர்க்கம் தலைமை தாங்கும் சமுதாயத்தில் மனிதனை அடிமைப்படுத்தும் நிலை மாற்றப்படுகிறது.

மனிதர்களின் சிந்தனைகள் அவர்கள் சார்ந்துள்ள வர்க்கத்திற்கேற்பவும் வாழ்நிலைக்கு ஏற்பவும் அமைகின்றன. இத்தகைய வாழ்க்கை முறைக்கு ஒத்த இலக்கியங்கள் அந்தந்தச் சமூகத்திலும் படைக்கப்படுகின்றன. குறிப்பிட்டதொரு சமுதாயத்தில் படைக்கப்பட்டுள்ள இலக்கியங்களின் உள்ளடக்கத்தைக் கொண்டு அந்தச் சமுதாயம் எந்த வர்க்கத்தைச் சார்ந்தது என்றும் கண்டு கொள்ளலாம். எனவே இலக்கியங்கள் மனித சமூகத்தோடு கொண்டுள்ள உறவு பிரிக்க இயலாதது. இலக்கியம் மனித வாழ்வை மையமாகக் கொண்டது. கற்பனையே ஆனாலும் அது மனித மனம் சம்பந்தப்பட்டது. இலக்கியத்திற்குப் பாடுபொருள் மனித வாழ்க்கையாக உள்ளது. மனிதனை அது நிழல்போலத் தொடர்கிறது. இலக்கியமின்றி வாழ்க்கை இல்லை எனக் கருதத் தூண்டுகிறது. இலக்கியங்கள் மனித வாழ்வில் மறைந்து கிடக்கும் சில உண்மைகளை அழகியல் உணர்ச்சிகளை வெளிப்படுத்த உதவுகிறது.

இலக்கியம் பொழுதுபோக்குச் சூழ்நிலைகளிலும் பயன்படுகிறது. மனிதனின் எத்தகைய வாழ்வோடும் ஒட்டிச் செல்லும் படைப்புகள் உண்டு. வாழ்வின் சுகதுக்கங்களைப் பகிர்ந்து கொள்ளும் ஆற்றல் அதற்குண்டு. ஆனால் கலை இலக்கியங்கள் அசல் அனுபவத்தை எப்பொழுதுமே அளிப்பதில்லை. ஒரு காலகட்டத்தில் நிலவிய தொழில், சமயம், தத்துவம் ஆகியவற்றின் மூலம் கிடைத்த அனுபவங்களைக் கலையிலக்கியங்கள் பிரதி செய்கின்றன.

**இலக்கியமும், இனவரைவியலும்**

இலக்கியம் பண்பாட்டுக் கூறுகளைத் தன்னகத்தேக் கொண்டுள்ளது. அதனால் இனவரைவியல் ஆதாரங்களில் ஒன்றாக இலக்கியம் காணப்பெறுகிறது.

ஒரு பண்பாட்டைப் பற்றி ஆராய முற்படும் பொழுது, அந்தந்தப் பண்பாட்டைச் சேர்ந்த மக்கள் குழுவினர் பின்பற்றும் உறவு முறைகள், ஒழுங்கு அமைப்புகள், அவர்களின் உணவு முறைகள், உணவைச் சமைக்க அவர்கள்

*கையாளும் முறைகள், வாழ்க்கை வட்டச் சடங்குகள் போன்ற பண்பாட்டுக் கூறுகளை ஆராய்வது எவ்வளவு முக்கியமோ அது போன்று இனவரைவியலார் இலக்கியத்தையும் ஆராய்வது அவசியமானது (தனஞ்செயன், 2006: 12) ஆகும்.*

*படைப்பாளி ஒரு படைப்பை உருவாக்கும் பொழுது அவருடைய கருத்தோடு அவ்வக்கால மக்கள், அவர்களின் சூழல், வாழ்வியல் முறைகள், இயங்கும் இயங்காப் பொருட்கள் ஆகியன தெரிந்தோ தெரியாமலோ படைப்பில் இடம்பெற்று விடுகின்றன என்பது மறுக்க முடியாத உண்மையாகும்.*

*இவற்றை படைப்பாளி ஒருவன் சுயசிந்தனை என்ற எல்லைக்குள் நின்று மட்டும் ஒரு இலக்கியத்தைப் படைத்துவிட இயலாது. அவனைச் சுற்றியுள்ள புறவுலகின் அசையும் பொருட்கள் அசையாப் பொருட்கள் ஆகிய அனைத்தையும் உற்றுநோக்கி அவற்றின் தனிப்பட்ட இயல்புகளையும், இயக்கங்களையும் இணைத்து இலக்கியம் படைக்க வேண்டியிருக்கும் (சிவசுப்பிரமணியன், ஆ., 2009:13) என்று குறிப்பிட்டுள்ளார்.*

**இலக்கியங்களில் காலந்தோறும் இனவரைவியல் பதிவுகள்**

*சங்க இலக்கிய எட்டுத்தொகை அடிவரையறையை மையமாகக் கொண்டு ஐந்திணை அடிப்படையில் அகச் செய்யுட்கள் தொகுக்கப்பட்டுள்ளன. இவற்றைக் கொண்டு குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்திணைக் குடியினரின் இனவரைவியலைப் பெற இயலுகிறது. மேலும் பத்துப்பாட்டின் மூலம் பாணர், பொருநர், கூத்தர், விறலி ஆகிய இனத்தவரின் இனவரைவியலைப் பெற இயல்கிறது.*

**சங்ககாலம்**

*சங்ககால மக்களின் வாழ்வியல் முறைகளையும் வரலாற்றையும் சங்க இலக்கியங்களைக் கொண்டே பேசி வருகின்றோம்.*

1. *நம்பிக்கைகள்*
2. *பழக்க வழக்கங்கள்*
3. *விழுமியங்கள்*

4. வாழ்க்கை முறைகள்
5. சடங்குகள்
6. தொழில்கள்
7. புழங்குப் பொருட்கள்
8. மக்கள் குழுக்கள்
9. உணவு, ஆடை, அணிகலன்கள்
10. வழிபடு தெய்வங்கள்
11. குழுத் தலைவர்கள்
12. போர்
13. விலங்குகள்
14. பறவைகள்
15. நிலை உயிர்கள்
16. ஐம்பூதங்கள்

போன்றவை குறித்த செய்திகளைச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன. மேற்கண்டவை அனைத்தும் இனவரைவியல் தரவுகள் ஆகும் (ஸ்டீபன், ஞா., 2010: 16) எனும் கருத்து குறிப்பிடத்தக்கதாகும்.

**காப்பிய காலம்**

அதனையடுத்து, காப்பிய காலத்தில் வணிகக்குடியினர் போன்ற உயர்குடி மக்களின் இனவரைவியலையும் தொல்குடியினரான, வேட்டுவர், ஆயர், குறவரின மக்களின் இன வரைவியலையும் மற்றும் பிற குடியினர்களின் இனவரைவியலையும் பெறமுடிகிறது.

**சிற்றிலக்கியக் காலம்**

சிற்றிலக்கியங்கள் பள்ளு, குறவஞ்சி முதலான விளிம்புநிலை மக்களின் இனவரைவியலை இனங்காட்டுவதாய் அமைந்துள்ளன.

**இக்கால இலக்கியங்கள்**

இக்கால இலக்கியங்களான கவிதை, சிறுகதை, புதினங்களின் வழியே விளிம்பு நிலை மக்களின் சமூக இயங்கியலைப் பிரதிபலிப்பதாக அமைவதனை அறியமுடிகிறது.

எனவே, காலந்தோறும் படைக்கப்பெறும் இலக்கியங்கள் ஒரு குறிப்பிட்டப் பண்பாட்டையுடைய சமூகத்தைப் பற்றிய இனவரைவியல் செய்திகள் இடம்பெறும் என்பது நிலையான பதிவாக அமைகின்றன.

வேறு வகையான ஆவணங்கள் எவையும் கிடைக்கப் பெறாத, ஒரு கடந்த காலத்திய சமூகத்தை அதன் பண்பாட்டைப் புரிந்து கொள்வதற்கு, ஆராய்வதற்கு அச்சமூகம் படைத்தளித்த கலை இலக்கிய வடிவங்களையே முக்கிய ஆதாரங்களாகப் பயன்படுவதை ஒரு தவிர்க்க முடியாத விதி மீறலாக சமூகம் ஏற்க வேண்டியுள்ளது. மேற்கண்டவாறு இலக்கியங்களில் இனவரைவியல் பதிவுகளைக் காணமுடிகிறது.

**இலக்கியம் - இனவரைவியல்; ஒன்றுபடும் இடங்கள்**

இலக்கியம், இனவரைவியல் ஆகிய இரண்டுமே அடிப்படையில் பண்பாட்டைச் சித்தரிப்பனவாக அமைந்துள்ளன. இலக்கியம், இனவரைவியல் இரண்டுமே மக்களின் வாழ்க்கை அனுபவங்களையும், சமய நம்பிக்கைகளையும் எழுத்துப்பூர்வமாக அளிக்கும் பிரதி ஆகும்.

இலக்கியவாதி இனவரைவியலான் ஆகிய இருவருடைய களமாக அமையும் எதார்த்த உலகம் ஒன்றுதான். எதிர்கொண்ட உலகினைப் பற்றிய சித்தரிப்பாக அமையும் படைப்புக்காகப் பயன்படுத்திக் கொண்டிருக்கும் மொழியும், அணி இலக்கணக் கூறுகளும் கூட இருவருக்கும் பொதுவானவைதாம் (தனஞ்செயன், ஆ., 2006:42-43) என்பவற்றிலிருந்து இலக்கியமும் இனவரைவியலும், ஒன்றுபடும் இடங்களை உணரமுடிகின்றது.

**இலக்கியம் - இனவரைவியல் வேறுபடும் இடங்கள்**

இலக்கியவாதி, இனவரைவியலான் ஆகிய இருவருமே தம் முன்னோர்களின் வழியில் செயல்படுகின்றனர். இதில் இலக்கியவாதி, தம் முன்னோர்கள் பற்றிக் கூறுவதில்லை. ஆனால் இனவரைவியலார் தம் முன்னோர்களைத் தவறாமல் குறிப்பிடுவர்.

இனவரைவியலானது அறிவியல் பூர்வமானது காய்தல் உவத்தலின்றிக் கறாராகச் சேகரிக்கப்பட்டத் தரவுகளின் தொகுப்பாக இது அமைகிறது. இதற்கு

நேர்மாறாக இலக்கியமானது வெறும் செய்திகளின் தொகுப்பாக அன்றி அழகியல் பூர்வமாக அமைவது. படைப்பாளியின் உலகக் கண்ணோட்டத்திற்கு உருவாக்கப்படுவது (சிவசுப்பிரமணியன், ஆ., 2009:12) என்று குறிப்பிட்டுள்ளார்.

இனவரைவியலாளன் தான் சேகரித்தத் தரவுகளையும், கண்ட சமூகத்தையும் தன்னுடைய கருத்தினை ஏற்றாமல், கற்பனை கலவாது உளப்பாங்கிற்கேற்ப முறைப்படுத்தி அளிப்பது இனவரைவியல் எனலாம். எனினும் இலக்கியவாதி தான் எடுத்துக் கொண்ட எதார்த்த உலகின் மையக்கரு அல்லது சிக்கலைக் கற்பனை கலந்து தன் கருத்தினை ஏற்றி புதிய ஒன்றாக மாற்றி அளிப்பது இலக்கியமாகும்.

இனவரைவியலாளன் கள ஆய்வு மூலமே தரவுகள் சேகரிக்க வேண்டிய கட்டாயத்திற்குக் கள ஆய்வு அவசியமன்று. பயண இலக்கியம், வாழ்க்கை வரலாறு இலக்கியம் மட்டும் விதிவிலக்கு ஆகும்.

சமூகத்தோடு படைப்பாளி இருக்கும் உணர்வுப்பூர்வமான நெருக்கம் இனவரைவியலாளனுக்கு இருப்பதில்லை (தனஞ்செயன், ஆ., 2006:44) என்று குறிப்பிட்டுள்ளார். இவ்வாறாக இலக்கியமும், இனவரைவியலும் வேறுபடும் இடங்களை அறியமுடிகிறது.

**மானிடவியல் தோற்றம், வளர்ச்சி**

தொடக்கக் காலத்திலிருந்தே ஐரோப்பியர்கள் உலகின் எந்தெந்தப் பகுதிகளுக்குச் சென்று வாழ்ந்தனரோ, அங்கெல்லாம் சமகாலத்திய மேற்கத்தியத் தத்துவ மரபுகளின் அடிப்படையில் பல சமுதாய அறிவியல்கள் தோன்றின. மானிடவியலும் பல மேற்கத்தியத் தத்துவக் கூறுகளின் தொகுப்பாகக் காலத்தினூடே வளர்ந்துள்ளது. தொடக்கக்காலத் தத்துவவியலார் மனிதனையும், அவனது சமுதாய அமைப்புகளையும், பண்பாட்டுக் கோலங்களையும் கண்ணுற்று அவற்றை உய்த்துணரும் போக்கில் பலவாறு சிந்தனை செய்தனர். அச்சிந்தனைகளின் வெளிப்பாடே இன்றைய சமுதாய அறிவியல்களின் வளர்ச்சியாகும்.

*பல்வேறு கால மக்களின் மரபுகள், வாழ்க்கை முறைகள், நம்பிக்கைகள் முதலானவற்றைத் தொடக்கத்திலிருந்து எந்தெந்த முறைகளில் ஆராய்ந்தனர் என்பதை அறியவேண்டும். இதற்கடுத்து மனிதனைப் பண்பாட்டு நிலையிலும், உயிரியல் நிலையிலும் ஆராயும் இக்கால மானிடவியல் முறை எவ்வாறு வளர்ச்சி பெற்றது என்பதையும் அறியவேண்டும்.*

*பண்பாட்டு வகைகளையும், பண்பாட்டுப் பரவலையும் ஆராய்வதில் செல்வாக்குப் பெற்று விளங்கும் பண்பாட்டுப் பரப்புக்* (Culture Area) *கோட்பாட்டை அன்றே சீசர் பயன்படுத்தியுள்ளார் எனக் கருத வேண்டியுள்ளது. இதுபோன்று பல செய்திகளைத் தொகுத்துக் காணும்போது மட்டுமே தொன்மைக் காலத்தில் மனிதனைப் பற்றி அறிவதில் எவ்வாறான சிந்தனைச் செயற்பாடுகள் நிலவின என்று அறியமுடியும் எனலாம்.*[22]

*மானிடவியல் வரலாற்றினைப் பல நிலைகளாகப் பகுத்து அறியவேண்டியது அவசியமாகிறது. மானிடவியல் தோன்றியது முதல் இன்றைய நிலை வரை அது நான்கு காலக்கட்டங்களாக வளர்ச்சியடைந்துள்ளது என்பார் பென்னிமன் என்னும் அறிஞர். அவை,*

1. *கருவுற்ற காலம்* (Formulatory Period - *கி.பி.1835க்கு முன்னர்*)
2. *ஒருமுகப்படுத்தப்பட்ட காலம்* (Convergent Period - *கி.பி.1935 முதல் 1859 வரை*)
3. *ஆக்கநிலைக் காலம்* (Constructive Period - *கி.பி.1859 முதல் 1900 வரை*)
4. *வளர்ச்சியுற்ற காலம்* (Critical Period - *1900 முதல் 1935 வரை*)

*மானிடவியலின் தோற்றமும் வளர்ச்சியும் உலக வரலாற்றோடு பின்னிப் பிணைந்தவையாக உள்ளதால் மேற்கூறிய நான்கு நிலைகளுடன் முதல் மூன்றினைப் பின்வரும் வரலாற்றுப் படி மலர்ச்சியோடு* (Evolution) *இணைத்து அறிவது மிகப்பொருத்தமாக இருக்கும்.*

1. *புத்தாய்வுக் காலத்திற்கு முந்தைய காலம்* (Period Before Age of Exploration)
2. *புத்தாய்வுக் காலம்* (Age of Exploration)
3. *அறிவொளிக் காலம்* (The Enlightenment Period)

*போன்றவைகளாகும்.*

மானிடவியல் சார்ந்த சிந்தனை எந்தக் காலகட்டத்தில் தோன்றியது என்று மிகவும் துல்லியமாகக் கூறமுடியாது. அவ்வாறு ஒருவர் அறிய முயன்றால் பிளாட்டோ அரிஸ்டாட்டில் காலம் வரை செல்ல வேண்டும் அல்லது அவர்களுக்கு முந்தையவர்கள் காலத்திலிருந்தே அறியவேண்டும் எனலாம்.[23]

## செனோபேன்ஸ் (ஏறக்குறைய கி.மு.570-475)

*மானிடவியல் சார்ந்த கருத்துக்களை முதன் முதலில் சிந்தித்தவர் சைனோபேன்ஸ். இவர் கிரேக்க நாட்டைச் சேர்ந்தவர். பல இடங்களுக்குப் பயணம் செய்தவர். பல்வேறு வகையான மக்களை நேரில் கண்டவர். பல இடங்களுக்குப் பயணம் செய்து புதிய, புதிய மக்களினத்தவர்களை நேரில் கண்டதால் மனித சமுதாயத்தைப் பற்றிப் பலநிலைகளில் சிந்தித்தார். 'மனித சமுதாயம்' என்பது மக்களால் ஏற்படுத்திக் கொள்ளப்பட்ட அமைப்பே என்பார் சைனோபேன்ஸ். அதோடு கடவுளர்கள் மனிதர்களாகப் பூமியில் படைக்கப்பட்டனர் என்றும், சமயம் என்பது ஒரு சமுதாயப் படைப்பே என்றும் இவர் உறுதியாக நம்பினார்கள்.[24] இவ்வகைக் கருத்துக்களைத் தெரிவித்த முதல் சிந்தனையாளர் என்னும் சிறப்பு இவருக்குண்டு எனலாம்.*

## ஹெரோடாட்டஸ் (ஏறக்குறைய கி.மு.484-425)

*தொடக்கக் காலத்தில் உலகின் பல பகுதிகளுக்கும் அரிய பயணங்களை மேற்கொண்டவர் ஹெரோடாட்டஸ் போக்குவரத்து வளர்ச்சியுறாத அக்காலத்தில் இவர் இருந்த இடத்திலிருந்து கிழக்கு மேற்காக 1700 மைல்களும் தெற்கு வடக்காக 1600 மைல்களும் சென்று வந்தவர் என்பர் வரலாற்றியலார். இவர் மேற்கொண்ட பயணங்கள் மூலம் 50க்கும் மேற்பட்ட மக்களினத்தவர்களைக் கண்டு அவர்களின் வாழ்க்கை முறைகளை விரிவாக எழுதினார். அதோடு இவர் சென்று வந்த பகுதிகளைப் பற்றி, அவற்றின் புவியியல் இயற்கைக் கூறுகளைப் பற்றியும் விரிவாக எழுதினார். இதனாலேயே இவரை வரலாற்றியலின் தந்தை எனப் போற்றுகின்றனர்.*

*ஹெரோடாட்டசின் சமகாலத்தவர்கள் பல்வேறு இன மக்களையும், அவர்களின் மாறுபட்ட வாழ்க்கை முறைகளையும் ஆராய முற்பட்டனர் என்றாலும் இவர் அளவிற்குப் பரந்த நிலையில் அவர்களால் ஆராய இயலவில்லை.*

மக்கள் வழங்கிய மொழிகள், மக்களின் உருவ வகைகள், பொருள்சார் பண்பாடு (Meterial culture) திருமணம், மணவிலக்கு (Divorce) சமுதாயச் சட்ட முறைகள், அரசு, நீதிமுறைகள், போர், சமயம் போன்ற பல கூறுகளை விரிவாக ஆராய்ந்து எழுதினார். அதோடு குழந்தையைப் பெற்றெடுக்கும் பேறுகாலத்தின் போது மனைவி பெறும் துன்பங்களுக்கும் விலக்குகளுக்கும் ஈடானக் கணவனும் அவ்வகையான சிரமங்களை ஏற்கும் பேறுகாலத் தனிமையை (Couvade) முதன் முதலில் கண்டறிந்து எழுதினார்.[25]

*இத்தகைய முறை பண்பாட்டு மானிடவியலில் சிறப்பிடம் பெற்றுள்ளதால் ஹெரோடாட்டஸ் பெயர் இன்றும் மானிடவியலில் இடம்பெற்றுள்ளது. எண்ணற்ற மனித இனத்தவர்களை அவர்களின் சூழலிலேயே ஆராய்ந்து எழுதிய அறிஞர் ஆவார்.*

*இனவரைவியல்* (Ethnography) *என்பது பண்பாட்டு மானிடவியலில் முதன்மையான பிரிவுகளுள் ஒன்று. இப்பிரிவில் ஒவ்வொரு தனிப்பண்பாட்டைப் பற்றி அல்லது ஓர் இனக்குழுவைப் பற்றி விரிவாக அறியலாம்.*

*ஒரு பண்பாட்டைச் சேர்ந்த எந்த ஒரு பழக்க வழக்கமும் பொருளற்ற தன்மையில் அவர்களின் பண்பாட்டில் இடம்பெறவில்லை என்பதை நன்கு உணர்ந்தார். இக்கருத்தே இன்றைய மானிடவியலின் மையக்கருத்தாக உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.*

**டெமொகிரிட்டஸ் (ஏறக்குறைய கி.மு.460-370)**

இவர் தொன்மை மக்களிடம் காணப்பட்ட வழக்கங்களை வகுக்க முயன்றார். தொன்மை மக்கள் காட்டும் பகுதியில் வாழ்ந்த காலத்தில் தன்னந்தனியாக உணவு ஈட்டவோ கொடிய விலங்குகளிடமிருந்து காப்பாற்றிக் கொள்ளவோ இயலவில்லை. ஆகவே அவர்கள் மற்றவர்களுடன் ஒன்று சேர்ந்து அவர்களின் உதவியுடன் வாழ முற்பட்டனர். இதனால் தோன்றியதே சமுதாய வாழ்க்கை இவ்வமைப்பு தேவையின் அடிப்படையிலேயே தோன்றியது.[26]

*மேற்கண்ட டெமோகிரிட்டசின் இக்கருத்துக்கள் அனைத்தும் பரவலாக ஏற்றுக்கொள்ளப்பட்டன.*

*இவர் மனித சமுதாயத்தின் படிமலர்ச்சி குறித்தும் விவரித்தார். மனித சமுதாயம் தொன்மை நிலையிலிருந்து நாகரிக நிலை வரை படிப்படியாக வளர்ச்சியுற்று வந்துள்ளது என்றும் இவ்வளர்ச்சி அந்தந்தக் காலத்தில் ஏற்பட்ட வாழ்க்கைப் போராட்டத்திலிருந்து மீளுவதற்கு மக்கள் மேற்கொண்ட முயற்சிகளின் மறுவடிவமே என்றும் கூறினார். படிமலர்ச்சிக் கருத்துகளுக்கடுத்து இவர் பண்பாட்டுக் கூறுகள்* (Culture traits) *தோன்றிய முறை குறித்தும் சிந்தனை செய்தார். இதற்கு மனிதனை விலங்கினங்களோடு ஒப்புமைப்படுத்தினார். மனிதன் விலங்குகளிடமிருந்து கற்ற பல்வேறு உத்திகளின் அடிப்படையிலேயே பல பண்பாட்டுக் கூறுகள் தோன்றின என்று இவர் நம்பினார். இதனால் இவர் மனிதனை முதன் முதலில் பறவைகளோடும், விலங்குகளோடும் ஒப்புமைப்படுத்தி ஆராய்ந்தவர் ஆவார்.*

> மனிதன் சிலந்தியிடமிருந்து நெசவு செய்தலையும், தூக்கணாங் குருவியிடமிருந்து வீடு கட்டும் முறையையும், நைட்டிங்கேல் பறவையிடமிருந்து இசையையும், அன்னத்திடமிருந்து பாடுவதையும் கற்றுக் கொண்டான் என்பார் இவர்.[27]

**புரோட்டோகோரஸ் (ஏறக்குறைய கி.மு.480-410)**

*இவர்தம் சீரிய சிந்தனைகள் மூலம் பண்டைய கிரேக்க இலக்கியத்தில் ஒரு நிலையான இடத்தைப் பெற்றவர். உண்மை அல்லது ஒதுக்குதல்* (Truth or the Rejection) *என்ற புகழ்ப்பெற்ற நூலை எழுதியவர்.*

> தொடக்கக்காலச் சமுதாயம் ஏற்றத்தாழ்வுகளின்றி ஒரு படித்தானதாக (Homogeneous) இருந்தது என்றும் மனித சமுதாயத்தில் குடும்பச் சிக்கல்களைத் தீர்க்கும் நீதிமுறை ஒழுக்கமுறை. மொழி போன்ற சில கூறுகள் தொடக்கத்திலேயே தோன்றிவிட்டன[28]

*என்றும் கூறுகிறார்.*

*மேலும் சாக்ரடீஸ் (கி.மு.470-399), பிளேட்டோ (கி.மு.427-347), அரிஸ்டாட்டில் (கி.மு.384-322) போன்றோர்களும், பிற அறிஞர்களும் உலகளவில் மானிடவியல் வளர்ச்சிக்கு வித்திட்டனர்.*

> மனித சமுதாயம் என்பது மக்களின் தேவைக்காகத் தோன்றியது. மிகத் தொடக்கக் காலத்தில் மக்கள் ஒரு குறிப்பிட்ட பகுதியில் ஒன்றுகூடி வாழ

முற்பட்டபோது அவர்களின் தேவையை ஈடுசெய்ய ஒவ்வொருவரும் அவரவருக்குத் தெரிந்த வேலையைச் செய்து தேவைகளை நிறைவேற்றிக் கொண்டனர். இதனடிப்படையிலேயே உழவர்கள், நெசவாளர்கள், குருமார்கள் தச்சர்கள், வணிகர்கள், தொழிலாளர்கள், படைவீரர்கள், ஆட்சியாளர்கள் போன்ற பல்வேறு வகுப்பினர் தோன்றினர் என்பார் பிளேட்டோ.[29]

*சமுதாயம் ஒரே வழியில் (Unilineal) மட்டுமே வளர்ச்சி பெற்று வந்துள்ளது எனக் கருதினர். சமுதாயத்தின் படிம வளர்ச்சி பற்றி ஆராய்வது இவரது முதன்மையான ஆய்வாக இல்லை என்பதை இங்கு நாம் கவனத்தில் கொள்ள வேண்டும். இவர் சிந்தனைகள் அனைத்தும் பல காலகட்டங்களைக் கடந்து வந்துள்ள மனித சமுதாயத்தில் அனைத்துக் காலங்களிலும் நிலைபெற்றிருந்த கூறுகள் என்னென்ன என்பதைப் பற்றியதாகவே இருந்தன.*

பிறக்கும் போதே மனிதனின் இயல்புகள் சமுதாயத்தோடு ஒன்றுபடும் தன்மைகளைப் பெற்றுள்ளன என்றும், இத்தன்மைகள் மொழி, பழக்கங்கள், வழக்கங்கள், அறிவார்ந்த முறையில் சிந்தித்தல் போன்றவற்றில் புதைந்து கிடக்கின்றன என்றும் இவர் கருதினார் எனலாம்.[30]

*சமுதாயம், பண்பாடு ஆகியவற்றை அறிவதில் அரிஸ்டாட்டில் கொண்டிருந்த அணுகுமுறை இக்கால முறையைப் பெரிதும் ஒத்திருப்பதால் இவர் மானிடவியல் கண் கொண்டு ஆராய்ந்த முன்னோடிகளுள் மூத்தவர் எனக் கருதப்படுகிறார்.*

சமுதாயம் என்பது முற்றிலும் மனிதனோடு மட்டும் தொடர்புடையது. கடவுளுடனோ பிற ஆற்றல்களுடனோ தொடர்பற்றது எனக் கூறினார். அதனோடு கடவுளைப் பற்றிய நம்பிக்கையும், அதிர்ஷ்டம், தலைவிதி, ஊழ்ப்பயன் போன்றவற்றில் கொண்டுள்ள நம்பிக்கையும் தவறானது மட்டுமல்லாமல் ஆபத்தானதுமாகும்[31]

*என்று எப்பிதரஸ் (கி.மு.341-370) என்பவர் வாதிட்டார்.*

**இந்தியாவில் மானிடவியலின் வளர்ச்சி**

*ஐரோப்பியர்களின் வருகைக்குப் பின்னரே இந்தியாவில் மானிடவியல் தோற்றம் பெற்றது. இந்திய மானிடவியல் இனவரைவியல் (Ethnography) இன ஒப்பாய்வியல் (Ethnology) ஆகியவற்றின் தோற்றத்திற்கும், வளர்ச்சிக்கும் பெரும்பங்காற்றியவர்கள் அவர்களே குடியேற்ற அரசின் அதிகாரிகளாகவும் சமயப்*

*பரப்பிகளாகவும், கல்விசார் பணியாளர்களாகவும் வந்த ஐரோப்பியர்களின் எண்ணிக்கை மிகுதியானது. அவர்களின் பெரும் உழைப்பினாலேயே இந்திய மானிடவியல் பெரும் வளர்ச்சி கண்டது.*

*இந்தியாவில் மானிடவியலின் தோற்றம் வங்க ஆசியக் கழகத்தோடு* (Asiatic Society of Bengal) *தொடர்புடையது. இக்கழகம் கி.பி.1774இல் சர் வில்லியம்ஸ் ஜோன்ஸ் என்பவரால் தோற்றுவிக்கப்பட்டது.*

200 ஆண்டுக் காலத்தில் மானிடவியல் பெற்ற வளர்ச்சியை இந்திய மானிடவியலின் வளர்ச்சியை மூன்று நிலைகளாகப் பகுத்துக் கூறுவர். இப்பொருள் குறித்துப் பலமுறை எழுதிய வித்தியார்த்தி அண்மைக்கால கட்டுரையில் பின்வரும் மூன்று நிலைகளாகக்குறிப்பிடுகிறார்[32]

1. *கருவுற்ற நிலை* (Formative Phase: 1774-1920)
2. *உருவாக்க நிலை* (Constructive Phase: 1920-1950)
3. *பகுத்தாய்வு நிலை* (Analytical Phase: 1950 *முதல் இன்று வரை)*

*1770களில் தொடங்கிய இந்திய இனக்குழுவியல், முதல் 50 ஆண்டுகள் வரை குறைவான வேகத்தில் வளர்ந்தது தொடக்கக் காலத்தில் பழங்குடி மக்களின் பண்பாட்டையும் ஊரக மக்களின் வாழ்க்கை முறைகளையும் பற்றிய தரவுகளே சேகரிக்கப்பட்டன. இவ்வகைப் பணியில் ஈடுபட்டிருந்தவர்கள் பெரும்பான்மையோர் ஆங்கிலேய நிருவாகத்தினராகவும், பல்வேறு சமயப் பரப்பிகளாகவும், பயணியர்களாகவும் மானிடவியல் ஆர்வம் கொண்ட தனிமனிதர்களாகவும் இருந்தனர். இக்காலக் கட்டத்தைச் சேர்ந்தவர்களுள் பலர். அவர்கள் தொகுத்த செய்திகளைத் தனி நூல்களாக வெளியிட்டனர். மற்றவர்கள்,*

1. *வங்க ஆசியக் கழகத்தின் ஆய்விதழ்* (Journal of the Asiatic Society of Bengal)
2. *இந்தியப் பழம்பொருள்* (Indian Antiquary)

*மேற்கண்ட ஆய்விதழ்களில் கட்டுரைகளாக வெளியிட்டனர். இந்நிலையில் தான் இந்திய இனவரைவியல் வளர்ந்தது எனலாம்.*

*தர்ஸன் என்பவர் பிறந்து வளர்ந்தது இங்கிலாந்தில். ஆங்கிலேய ஆட்சியின் போது சென்னை அருங்காட்சியகத்தைக் கவனிக்கும் பொருட்டு இங்கு வந்தவர்*

*கால் நூற்றாண்டுக் காலம் (1885-1908) சிறப்பாகப் பணியாற்றி, தென்னிந்திய இனக்குவியலை வளம்பெறச் செய்தார். அவர் 7 தொகுதிகளாகத் தொகுத்த தென்னிந்தியச் சாதிகளும் பழங்குடிகளும்* (Castes and Tribes of Southern India) *என்னும் நூல் வரிசை தென்னிந்திய இனக்குழுவியலில் என்றும் அழியாச் சின்னமாகத் திகழும். அந்நூலில் தர்ஸ்டன் தென்னிந்தியாவின் வடகோடிப் பகுதியில் வாழும் கோண்டுப் பழங்குடி தொடங்கி தென் தமிழ்நாட்டைச் சேர்ந்த கோட்டைப் பிள்ளைமார், செறுமர்வரை இரண்டாயிரத்திற்கும் மேற்பட்ட பிரிவினரை ஆராய்ந்து அவர்களின் சமூகப் பொருளாதார முறைகள், பழக்க வழக்கங்கள் வாழ்க்கை முறைகள் போன்ற எண்ணற்ற பண்பாட்டுக் கூறுகளைத் தொகுத்து எழுதியுள்ளார்.*

*இந்தியாவில் மானிடவியலின் ஆய்வு முறையியலைப்* (Methodology) *பெருமளவு மேம்படுத்தியவர்கள் ஆங்கிலேயர்களே ஆவர் குறிப்பிட்டுச் சொல்வதானால் தொடர்கள், தென்னிந்திய உறவுமுறை முதலானவை பற்றி சிவர்ஸ் செய்த ஆய்வுகளும், அந்தமான் தீவினரைப் பற்றி ராட்கிளிஃப் பிரௌன் செய்த ஆய்வுகளும், இந்தியாவின் பல்வேறு பழங்குடிகளைப் பற்றி ஹெய்மண்டார்ஃப் மேற்கொண்ட ஆய்வுகளும் பெரும் வழிகாட்டிகளாய் அமைந்தன. அவர்களின் ஆய்வுகள் அனைத்தும் கொள்கைசார் நிலையில் ஆராயப்பட்டவை. அவர்களைத் தொடர்ந்து பலர் அதே வகையில் ஆய்வுகளை மேற்கொண்டு இந்திய அறிஞர்களுக்கு வழிகாட்டினர்.*

*இரண்டாம் உலகப் போருக்குப்பின், குறிப்பாக இந்தியா விடுதலை பெற்றப்பின் அமெரிக்க மானிடவியலாருடன் தொடர்புகள் பெருகின. அவர்களின் வருகையால் புதிய அணுகுமுறைகளும் ஆய்வு நெறிகளும் வளர்ந்தன. அமெரிக்க அறிஞர்கள் பலர் இங்கு வந்து நெடுங்காலம் தங்கி ஆய்வுகள் செய்ததன் வாயிலாக இப்பயன் ஏற்பட்டது. இந்தியாவில் தங்கி ஆய்வு செய்தவர்களுள் கார்னல் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த மோரிஸ், ஆப்லர், இல்லினாய்ஸ் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த ஆஸ்கார் லூவி, கலிபோர்னியப் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த டேவிட்மேணிடம்பாம், சிக்காக்கோ பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த ராபர்ட் ரெட்பீல்டு, மில்டன் சிங்கர்மக்கிம் மேரியட் முதலான அறிஞர்கள் குறிப்பிடத்தக்கவர்கள் அவர்கள் அனைவரும் இந்திய*

அறிஞர்களோடு கிராமங்களில் தங்கி ஆய்வு செய்தனர். இந்தியச் சமுதாயத்தில் சிறப்புக் கூறாகத் திகழும் சாதி அமைப்புடைய சமூகங்கள் சிற்றூர்களில் வாழ்வதால் இந்தியச் சிற்றூர்களைப் பற்றிய ஆய்வுகள் (Village Studies) தொடக்கத்தில் பெரும் ஆய்வுப் பரப்பாகக் கருதப்பட்டது. இவ்வகை ஆய்வுகளை வளப்படுத்திய அமெரிக்க அறிஞர்கள் இந்திய மானிடவியலுக்குப் பின்வரும் மூன்று நிலைகளில் பங்களிப்புச் செய்துள்ளனர்.

1. இந்தியச் சிற்றூர்களை முறைப்படி ஆராய்ந்து அதன்மூலம் நடைமுறையிலுள்ள சில எடுகோள்களைச் (Hypotheses) சோதித்தல்.
2. இதுவரை மானிடவியலில் ஏற்படுத்தப்பட்ட முறையியலை இந்தியச் சூழலிற்கேற்ப நெறிப்படுத்துதல்.
3. இந்தியச் சிற்றூர்களில் மேற்கொள்ளப்பட வேண்டிய சமூக நலப்பணித் திட்டங்களுக்கு மானிடவியல் அறிவுமூலம் உதவுதல்.

அமெரிக்காவின் வருகைக்குப்பின் இந்திய மானிடவியலானது ஆங்கிலேய மானிடவியலையும் அமெரிக்க மானிடவியலையும் தொகுத்துப் பகுத்தாயும் நிலையை ஏற்படுத்திக் கொண்டது.

மேற்கண்ட வகையில் இனவரைவியல், இலக்கியம், இனவரைவியல்-மானிடவியல் வரலாறுகள் தொகுத்து ஆராயப்பட்டன.

## ஆய்வு எல்லையும் வரையறையும்

தோப்பில் முகமது மீரான் கன்னியாகுமரி மாவட்டத்தைச் சார்ந்த நாகர்கோவிலில் பிறந்தார். இவர் தன்னுடைய சிறுகதை, புதினம் படைப்புகளில் கன்னியாகுமரி மாவட்ட சமூக வழக்காறுகள் வட்டார வழக்குகள் பொதிந்துள்ளன. எனவே கன்னியாகுமரி மாவட்டத்தை ஆய்வு பரப்பாக எடுத்துக்கொண்டு இம்மாவட்டத்தின் இனவரைவியலும் வழக்குச் சொற்களும் நிரம்ப உள்ளதால் மேற்கண்ட காரணிகளை ஆய்வின் வரையறையாக எடுத்து அணுகப்படுகின்றன.

## குமரிக்கண்டம்

கி.மு.2,00,000 வருடங்களுக்கு முந்தைய தமிழர்கள் வாழ்ந்த கண்டம், குமரிக்கண்டம் (Kumari Kandam) என்பது இந்தியப் பெருங்கடலில்

அமைந்துள்ள இந்தியாவின் தெறகே இருந்ததாகக் கருதப்படும் இழந்த ஒரு கண்டத்தைக் குறிக்கிறது.[33]

*இது பண்டைய தமிழர் நாகரித்துடன் தொடர்புடைய ஒர முக்கியமான நிலப்பகுதியாகவும் கருதப்படுகிறது. குமரிக்கண்டம், குமரிநாடு என்ற வேறுபெயர்களாலும் இப்பகுதி அழைக்கப்பட்டது.*

*19 ஆம் நூற்றாண்டில், ஐரோப்பிய மற்றும் அமெரிக்க அறிஞர்களின் ஒரு பகுதியினர் லெமூரியா என்று அழைக்கப்படும் ஒரு மூழ்கிய கண்டம் இருந்திருக்கலாம் என்று ஊகித்தனர். ஆப்பிரிக்கா, ஆத்திரேலியா, இந்தியா மற்றும் மற்ற நாடுகளுக்கு இடையே காணப்படும் புவியியல் மற்றும் பிற ஒற்றுமைகளை தொடர்புப்படுத்தி விளக்க முயன்ற போது, அவர்களுக்கு இத்தகைய சிந்தனை தோன்றியது. தமிழ் மலர்ச்சி ஆதரவாளர்களின் ஒரு பகுதியினர் இக்கோட்பாட்டை ஏற்றுக் கொண்டனர். பண்டைய தமிழ் இலக்கியங்களில் விவரிக்கப்பட்டுள்ளபடி தங்கள் நிலப்பகுதிகளில் உலாவிய பாண்டியர்களின் புராணக் கதைகளுடன் அவர்கள் இதை இணைத்துக் கொண்டனர்.*

*பண்டையத் தமிழர் நாகரிகம் இலெமூரியா கண்டத்தில் இருந்தது கடலுக்குள் சென்றது என்று இந்த எழுத்தாளர்கள் கூறுகின்றனர். 20 ஆம் நூற்றாண்டில் தமிழ் எழுத்தாளர்கள் இந்த மூழ்கிய இலெமூரியா கண்டத்தைப் பற்றி விவரித்துக்கூற 'குமரிக்கண்டம்' என்ற பெயரை பயன்படுத்தினர். இலெமூரியா கண்டக் கோட்பாடானது பின்னர் கண்டறியப்பட்ட புவித்தட்டுகள் சீரமைப்புக் கோட்பாட்டால் வழக்கற்றுப் போனது. இருப்பினும் இந்த கருத்தாக்கம் 20 ஆம் நூற்றாண்டின் தமிழ் மறுமலர்ச்சியாளர்களிடையே பிரபலமாக தொடர்ந்து இருந்து வருகிறது. இவ்வறிஞர்களின் கருத்துப்படி இலெமூரியாவில் ஆட்சி செய்த பாண்டியர்களின் காலத்தில் தமிழ் இலக்கிய கல்வியாளர்கள் உருவாக்கிய இரண்டு சங்கங்கள் இங்கு இருந்ததாக கருதப்படுகிறது. தமிழ்மொழி மற்றும் கலாச்சாரத்தின் பழங்காலத்தை நிரூபிக்க உதவும் குமரிகண்டம் தமிழர்கள் நாகரிகத்தின் தொட்டில் என அவர்கள் கூறுகின்றனர்.*

**பெயர்களும், சொற்பிறப்பியலும்**

*1890களில் லெமூரியா என்ற கருத்துரு தமிழ் எழுத்தாளர்களுக்கு அறிமுகமான பிறகு அவர்கள் அக்கண்டத்தின் பெயரை தமிழ்ச் சூழலுக்கு ஏற்ப இலெமூரியா எனத் தமிழ்ப்படுத்தினர் 1900களின் தொடக்கத்தில் அவர்கள் பண்டைய தமிழ் நாகரீகமான இலெமூரியாவின் இருப்பை ஆதரிப்பதற்காக கண்டத்தின் தமிழ் பெயர்களைப் பயன்படுத்த ஆரம்பித்தனர். 1903இல் பரிதிமாற் கலைஞர், வி.கோ.சூர்யநாராயண சாஸ்திரி தமிழ்மொழியின் வரலாறு என்ற சொல்லைப் பயன்படுத்தினார். 1930களில் இலெமூரியா கண்டத்தைப் பற்றி விவரிப்பதற்கு குமரிக்கண்டம் என்ற சொல்லை பயன்படுத்தத் தொடங்கினார்கள்.*[34] *சுமேரியா மொழியில் 5000 ஆண்டுகட்கு முன்பு பயன்படுத்தப்பட்ட வாக்கியமான 'கிரிஅகிபட்ரியா' என்ற வாக்கியமே குமரிக்கண்டமாகும். இதன் அக்கால தமிழ் உச்சரிப்பு 'கரியரவனட' ஆகும். இதன்படி சுமேரிய நாகரித்தில் 5000 ஆண்டுகளுக்கு முன்பே குமரிக்கண்டம் என்ற வார்த்தை இருந்ததை அறியலாம்.*[35] *உலகில் முதன் முதலில் எழுதப்பட்ட மொழி சுமேரியம் என்றும், அது கி.மு.3100இல் எழுத்து மொழியாய் வழங்கியதற்குச் சான்றுகள் உள்ளதென்றும் பிரித்தானியக் கலைக்களஞ்சியத்தில் கூறப்பட்டுள்ளது. தமிழகத்தினின்று சென்ற ஒரு கூட்டத்தாரே சுமேரியன் முன்னோர் என்ற கருத்தும்.*[36] *அச்சுமேரியர் குமரியை பெயர் வைத்து அழைத்ததும் வியப்பில்லை என்பர்.*

> கடைச்சங்கத்தில் குமரியாறு மற்றும் பஃறுளியாறு உற்பத்தியான மேருமலை இருந்ததற்கான சாத்தியக் கூறுகள் சீன பழங்கதைகளில் (Chronicles) கூட தென்படுகின்றன.[37]

*பாண்டிய மன்னனொருவன் தங்க சுரங்கங்களை தோண்ட சீன அடிமைகளைப் பயன்படுத்தினான். அவர்களை பொன் தோண்டி எறும்புகள் என இலக்கியம் கூறுகிறது.*[38]

*மேருவைச் சேர்ந்த காகமும் பொன்னாம் என்ற பழமொழியுண்டு. 1350-1420 காலப்பகுதியில் வாழ்ந்த கச்சியப்ப சிவாச்சாரியார் சிகந்தபுராணம் என்ற வடமொழி காவியத்தை தமிழில் கந்தபுராணம் என்ற பெயரில் எழுதினார். இக்காவியத்தில் குமரிக்கண்டம் என்ற சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. முருகனின் இலக்கியப் பெயர் குமரவேல் பாண்டியன் ஆகும். குமரனின் மனைவி குமரியாதலால் இஃது குமரிக்கண்டமென பெயர் பெற்றிருக்கலாம்*[39] *என்பர்.*

*கந்தபுராணத்தில் இடம்பெற்றுள்ள அண்டகோசப் படலத்தில் உலகம் என்பது பின்வரும் மாதிரியாக விவரிக்கப்பட்டுள்ளது. பிரபஞ்சத்தில் பல உலகங்கள் உள்ளன. ஒவ்வொரு உலகமும் பல கண்டங்களால் ஆனது ஆகும். இக்கண்டங்களில் பல பேரரசுகள் இருந்தன. இப்பேரரசுகளில் ஒன்று பரதன் என்ற மன்னனால் ஆளப்பட்டது. அவனுக்கு எட்டு மகன்களும் ஒரு மகளும் இருந்தனர். பரதன் தன்னுடைய பேரரசுகளை ஒன்பது பகுதிகளாகப் பிரித்து நிர்வகித்தார். பரதனின் மகள் குமரியால் ஆளப்பட்ட பகுதி குமரிக்கண்டம் எனப்பட்டது. குமரிக்கண்டம் பூமியில் ஒரு சிறந்த பேரரசாகக் கருதப்பட்டது.*

> கந்தபுராணம் உண்மையில் குமரிக்கண்டத்தை தமிழர்கள் வசிக்கும் இடமாக விவரிக்கிறது. அங்கிருந்தவர்கள் முருகனை வழிபாடு செய்ததாகவும் மீதமிருந்த பேரரசுகள் அனைத்தும் மிலேச்சர்கள் பிரதேசமாக விரிக்கப்பட்டுள்ளது.[40]

*மேலும் கந்தபுராணத்தின்படி குடிலை, உமை, தரணி, சுமனை, சிங்கை மற்றும் குமரி என்று ஏழு ஆறுகள் ஓடியதாகவும் தெரிகிறது.[41]*

> குமரிக்கண்டம் வெள்ளத்தில் மூழ்கிய போது தப்பிப் பிழைத்தவர்களால் கன்னியாகுமரி கோவில் நிறுவப்பட்டது என்று அவர் கூறினார். இந்திய ஆரியர்கள் போன்ற இனக்குழுக்களின் தொடர்புக்கு முன்னர் இருந்த நாகரிகத்தினர் மற்றும் மொழியின் தூய்மையை கன்னி என்ற பொருள் கொண்ட குமரி என்ற சொல் குறிக்கிறது என கலாச்சார வரலாற்றாசிரியரான எழுத்தாளர் சுமதி ராமசாமி கூறுகிறார்.[42]
>
> 1912 ஆம் ஆண்டில் சோமசுந்தர பாரதி முதன் முதலில் லெமூரியாவின் கருப்பொருளாகக் கொண்ட தமிழகம் என்ற ஒரு பெயரைப் பயன்படுத்தினார். பாண்டியர்கள் தொன்மை வாய்ந்தவர்கள் என்பதால் அப்பண்டைய நாகரிகத்தைக் குறிப்பிட்ட பாண்டிய நாடு என்ற பெயரும் பயன்படுத்தப்பட்டது. சில எழுத்தாளர்கள் சம்புத்தீவு என்ற பொருள் கொண்ட நாவலந்தீவு என்ற பெயரையும் பயன்படுத்தினர் எனலாம்.[43]

**பண்டைய இலக்கியங்கள் காட்டும் மூழ்கிய நகரங்கள்**

*முதற்கடற்கோளால் குமரிக்கண்டம் என்று கூறப்படும் நிலப்பகுதி அறிவுற்றதென பண்டைய நூற் தகவல்கள் குறிக்கின்றன. குமரிக்கண்டம் எனும் கண்டம் போன்ற பெரும் நிலப்பகுதியானது, இன்றுள்ள இந்தியாவின்*

*எல்லையான குமரி முனைக்குத் தெற்கே முற்காலத்தில் பாண்டியர்களின் ஆட்சிக்குக்கீழ் அமைந்திருந்தெனக் கருதுவதற்கு இடம்தரும் வகையில் பண்டைத் தமிழ் இலக்கிய நூற்களில் சில தகவல்கள் உண்டு. இவ்விலக்கிய நூல்களில் கிடைக்கப்பெறும் தகவல்கள் சிலவற்றையும் மூழ்கிய நகரங்கள் பற்றியக் குறிப்புகளையும் பின்வருமாறு அறியலாம்.*

தேவநேயப் பாவாணர் முதலானோர் இந்தக் குமரிக்கண்டத்தில் தான் மாந்தர்களும் தமிழர்களும் முதன் முதல் தோன்றினரென எழுதியுள்ளார்.[44]

*ஆதிமனிதன் தோன்றியிருக்கக் கூடிய தென்குமரிக் கண்டம் கடல்கோளால் (சுனாமி போன்ற ஆழிப்பேரலைகளால்) அழிவிற்குட்பட்டது என்பது சில தமிழர்களின், அறிவியல் முறைப்படி நிறுவப்படாத கருத்து ஆகும்.*

*இறையனார் அகப்பொருள் உரையில் விரிவாக ஆண்ட அரசர்களின் வரிசை தமிழ் அவையில் இருந்த புலவர்களின் வரிசை முதலியன குறிக்கப் பெற்றுள்ளன.*

வடவேங்கடந் தென்குமரி ஆயிடைத்
தமிழ்கூறும் நல்லுலகத்து....[45]

*இரண்டாம் சங்கம் இருந்த காலத்தில் கபாடபுரம் என்ற தலைநகரம் மூழ்கிய பின்னரும் குமரி ஆறு இருந்ததென்பதை தொல்காப்பிய சிறப்புப்பாயிரம் சுட்டுகிறது.*

தெனாஅ துருகெழு குமரியின்
தெற்கும்
குமரியம் பெருங்துறை யனிரை
மாந்தி[46]
மலிதிரை யூர்ந்துதன் மண்கடல்
வெளவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார்நா
பிடம்பட[47]

*மேற்கண்ட குறிப்பு, பழம் பாண்டிய நாட்டைக் கடல் கொண்டதைக் குறிக்கிறது.*

*இறையனார் அகப்பொருள் உரையில் கூறியுள்ளது. உண்மையாக இருப்பின் தமிழர்களின் இலக்கிய காலம் சுமார் கி.மு.10,500 ஆண்டுகள் வரை*

செல்லும் இதற்கு வலுவான பிற உறுதிகோள்கள் ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை.

கடலில் மூழ்கிய குமரிக்கண்டத்தின் பரப்பு குறித்தத் தகவல்கள் ஏதும் நக்கீரரின் உரையில் குறிப்பிடப்படவில்லை. 15 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சிலப்பதிகாரத்தில்தான் முதன் முதலில் இக்கண்டத்தின் பரப்பளவு பற்றிய தகவல் குறிப்பிடப்பட்டுள்ளன. வடக்கில் பஃறுளி நதியில் இருந்து தெற்கில் குமரி ஆற்றின் கரை வரைக்கும் சுமார் 700 அளவுக்கு இக்கண்ட நிலப்பகுதி இருந்ததாக அடியார்க்கு நல்லார் குறிப்பிட்டுள்ளார்.

ப.்.றுளி யாற்றுடன் பன்மலை
யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல்
கொள்ள
வடதிசைக் கங்கையும் இமயமும்
கொண்டு
தென்திசை யாண்ட தென்னவன் வாழி[48]

எனச் சிலப்பதிகாரமும்,

செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த
முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் ப.்.றுளி மணலினும் பலவே....[49]

என்று புறநானூறும் எடுத்துக்காட்டுகின்றன. மேற்கண்டவற்றின் வழிக் குமரிக்கண்டம் இருந்தமைக்கான சான்றுகளை அறியலாம்.

**கன்னியாகுமரி மாவட்டத்தின் வரலாறு (தொல் பொருள் ஆய்வு)**

குமரி மாவட்டத்தின் மனித நாகரிகமானது சுமார் 4000 ஆண்டுகள் பழமை வாய்ந்தது. உத்தேசமாக கி.மு.1500 முதல் 1000மாவது ஆண்டுகளுக்கு இடையிலான கற்கால ஆண்டுகளுக்கு இடையில் ஆன கற்கால கோடாரி கண்டுபிடிப்பிலிருந்து குமரி மாவட்டத்தின் வரலாற்றுக்கு முந்தைய கலாச்சாரம் தெளிவாகிறது.

கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள தூத்தூர் கிராமத்தின் அருகே கையால் செய்யப்பட்ட சொரசொரப்பான மண் ஜாடிகள் மற்றும் பழம்பொருட்கள் கண்டுபிடிக்கப்பட்டன.

*அதனுடைய வடிவம், ஆடை, அலங்காரங்கள் பெரும்பாலும் கற்காலம் அல்லது வரலாற்றுக்கு முந்தைய காலத்தினை பிரதிபலிக்கிறது.*

*இப்பகுதியில் கிடைக்கப் பெற்ற புராணங்கள் மற்றும் கலாச்சாரப் பதிவுகளிலிருந்து மொகஞ்சதாரோ மற்றும் ஹரப்பா நாகரிகத்திற்கு இணையான ஒரு பெரிய நகரம் கற்காலத்தில் தழைத்தோங்கியது என்று சந்தேகத்திற்கு இடமின்றி நம்பப்படுகிறது. கடலடியில் கண்டெடுக்கப்பட்டுள்ள பழம்பொருட்கள் மூலமாக இந்த நாகரிகமானது கடல் அரிப்பின் மூலமாக முற்றிலுமாக அழிந்துள்ளது என நம்பப்படுகிறது.*

*தற்போதைய கன்னியாகுமரி மாவட்டத்தைப் பற்றிய தகவல்கள் முதன் முதலில் பொனிஷியர்களால் குறிக்கப்பட்டுள்ளது. கி.பி.276இல் இந்தியாவில் விஜயம் செய்த நொஸ்தனில் என்பவரின் குறிப்பேட்டிலும் கன்னியாகுமரி 'கொமரி' என்பது துறைமுகமாகவும் அதுவரையிலும் உள்ள நிலப்பகுதி பாண்டிய நாட்டின் பகுதியாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது.*

**கன்னியாகுமரி மாவட்டத்தின் சுருக்கமான காலவரிசை**

*டாலமி காலக்கட்டத்தில் நாஞ்சில் நாடானது சேரர்களுக்கும் பாண்டியர்களுக்கும் இடையே ஒரு தாங்கலாக இருந்தது.*

**கி.பி. இரண்டாம் நூற்றாண்டு**

*சங்ககாலப் புலவர்களான மருதஇளநாகனார், ஔவையார், ஒருச்சிறைப் பெரியனார் கருவூர், கடைப்பிள்ளை போன்றோர்கள் நாஞ்சில் பொருநரைப் போற்றிப் பாடிய பாடல்கள் மூலமாக இவர் நாஞ்சில் நாட்டின் ஒரு பகுதியை ஆட்சி செய்தார் எனத் தெரிய வருகின்றது.*

**கி.மு.மூன்றாம் நூற்றாண்டு**

1. *கடுங்கோன் - கி.பி.560-590*
2. *மாறவறம் அவனி கலாமணி - கி.பி.590-620*
3. *சென்டன் - கி.பி.620-650*
4. *அரிகேதி பரங்குச மாறவர்மன் - கி.பி.650-700*

5. *கோச்சடையன் - கி.பி.700-730*

6. *மாறவர்ம ராஜசிம்கா - கி.பி.730-765*

7. *ஐக்கிய பராந்தக நெடுஞ்சடையல் - கி.பி.765-815*

8. *பறிமாற ஸ்ரீ வல்லபா - கி.பி.815-862*

9. *இண்டாம் வரகுணா - கி.பி.862-885*

10. *பரந்தாட்ச வீர நாராயணன் - கி.பி.880-905*

11. *இரண்டாம் மாறவர்ம இராமசிம்கா - கி.பி.905-920*

**கி.பி.10 ஆம் நூற்றாண்டு**

**சோழ வம்சத்தின் வளர்ச்சி**

*உத்தம சோழ வளநாடு என நாஞ்சில் நாடு குறிப்பிடப்பட்டுள்ளது. 1019 முதல் 1070 நாஞ்சில் நாடானது சோழ பாண்டிய வைசிராய்களால் ஆட்சி செய்யப்பட்டது.*

**கி.பி.11 ஆம் நூற்றாண்டு**

**பாண்டியன் ஆட்சிக்காலம்**

*வேநாடு அரசர்கள் ஆட்சி காலம் 15 ஆம் நூற்றாண்டு வரை.*

**கி.பி.12 ஆம் நூற்றாண்டு**

*கி.பி.1532 முதல் 1558 வரை விஜயநகரப் பேரரசின்கீழ் ஆட்சி நடைபெற்றது.*

**கி.பி.16 ஆம் நூற்றாண்டு**

**மதுரை நாயக்கர் ஆட்சி**

*கன்னியாகுமரி மாவட்டத்தின் தற்கால வரலாறு பாலமார்த்தாண்ட வர்ம ஆட்சியில் (கி.பி.1729-1758) தொடங்குகிறது.*

*இராமவர்ம கார்த்திகைத் திருநாள் 175-1798 முதல் ராமவர்ம சுவாதித் திருநாள் 1829-1847 வரை நடைபெற்றது.*

**கி.பி.17 ஆம் நூற்றாண்டு**

*மார்த்தாண்டம் வர்ம உத்தராடம் திருநாள் (1847) முதல் ராமவர்ம ஸ்ரீசித்திர திருநாள் 1932 முதல் மன்னர் ஆட்சி முடியும் 1949 செப்டம்பர் 1 வரை ஆகும்.*

*மேற்குறிப்பிட்ட அனைத்து மன்னர்களும் ஆங்கிலேயர்களுடன் நல்லுறவு மேம்படுத்துவதே தங்களது அயல்நாட்டுக் கொள்கையின் முக்கியக் கொள்கையாகக் கொண்டிருந்தனர்.*

*கன்னியாகுமரி மாவட்டம் 1956 வரை திருவாங்கூர் சமஸ்தானத்தின் ஒரு பகுதியாக இருந்தது. குமரி மாவட்டத்தை பொறுத்தமட்டில் 1945 முதல் 1956 வரையிலான காலகட்டம் அதன் தற்காலிக 1945 முதல் பல்வேறு செய்திகள் கிடைக்கின்றன. மேலும் 1966-1976 வரை புதிய வருவாய் கண்டெடுப்பு தொடங்கப்பட்டது. தீர்வைத் துறை உருவாக்கப்பட்டது. 1976, 2012 ஆம் ஆண்டுகளில் கிராமங்களைப் பிரித்தல் முறையும் அறியப்படுகிறது.*

**கன்னியாகுமரி மாவட்டம் பிற புள்ளி விவரங்கள்**

*நாடு - இந்தியா*

*மாநிலம் - தமிழ்நாடு*

*தலைநகரம் - நாகர்கோவில்*

*பகுதி - தென்மாவட்டம்*

*மாநகராட்சி - 1*

*நகராட்சிகள் - 3*

*வருவாய் கோட்டங்கள் - 2*

*வட்டங்கள் - 6*

*பேரூராட்சிகள் - 55*

*ஊராட்சி ஒன்றியங்கள் - 9*

*ஊராட்சிகள் - 95*

*வருவாய் கிராமங்கள் - 188*

*பரப்பளவு - 1672 ச.கி.மீ.*

*மக்கள் தொகை - 18,70,374 (2011-2020)*

*அலுவல்மொழி(கள்) - தமிழ்*

*இணையதளம்* - https/kanniyakumari

*தமிழ்நாட்டின் 38 மாவட்டங்களில் ஒன்றாகும். இந்தியாவின் தென்கோடியில் அமைந்துள்ள இம்மாவட்டத்தின் தலைநகரம் நாகர்கோவில்*

ஆகும். இந்த மாவட்டம் 1672 ச.கி.மீ. பரப்பளவைக் கொண்டுள்ளது. இம்மாவட்டத்தில் தமிழ் மற்றும் மலையாள மொழிகள் பேசப்படுகின்றன.

மக்கள் தொகை அடர்த்தியில் தமிழகத்தில் இரண்டாம் இடம் (ச.கி.மீ.க்கு 1111 பேர்) வகிக்கிறது. பத்மநாபபுரம், குளச்சல், குழித்துறை என 3 நகராட்சிகள் உள்ளன. நாகர்கோவில் மாநகராட்சி ஆகும். தமிழின் ஐந்திணைகளில் நான்கு திணைகள்,

முல்லை

குறிஞ்சி

மருதம்

நெய்தல் (தொல்காப்பியம்)

ஒருங்கமைந்த மாவட்டமாகும்.

இயற்கை அழகுக்குப் பெயர்போன இம்மாவட்டத்தில் ஒன்பதாம் நூற்றாண்டுக்கும், முந்தைய பல வரலாற்றுச் செய்திகளும் அமைந்திருப்பதால் சுற்றுலாப் பயணிகளுக்குச் சுவர்க்கமாகத் திகழ்கிறது.

இம்மாவட்டத்தின் மேற்கில் கேரள மாநிலத்தின் திருவனந்தபுரம் மாவட்டமும், வடக்கு மற்றும் கிழக்கிலும் திருநெல்வேலி மாவட்டமும், தெற்கில் இந்தியப் பொருங்கடலும் எல்லைகளாக உள்ளன.

2004 திசம்பர் 26 அன்று தென் ஆசியாவையும், தென்கிழக்கு ஆசிய நாடுகளின் கடற்பகுதிகளைக் கடுமையாகத் தாக்கிய சுனாமிப் பேரலை இம்மாவட்டத்தையும் பெரும் அழிவிற்கு உள்ளாக்கியது. 2017 நவம்பர் 29, 30 டிசம்பர் 01 ஆகிய நாட்களில் வீசிய ஒக்கிப்புயல் மாவட்டம் முழுவதும் பெரும்பாதிப்பை ஏற்படுத்தியது. பல லட்சக்கணக்கான மரங்கள் வேரோடு சாய்ந்து விழுந்தன.

**புராண வரலாறு**

கன்னியாகுமரி என்ற பெயர் இப்பகுதியில் புகழ்பெற்ற குமரி அம்மன் என்னும் இந்து சமயக் கடவுளை மையப்படுத்தும் தலபுராணத்திலிருந்து இம்மாவட்டத்துக்குக் கிடைத்திருக்கிறது. இது பார்வதி தேவி தன்னுடைய ஒரு அவதாரத்தில் குமரிப் பகவதி என்னும் பெயருடன் சிவனை சேரும் பொருட்டு இந்நிலப் பகுதியின் தென்கோடியில் அமைந்துள்ள ஒரு பாறையில் தவம் செய்ததாகக் கூறுகிறது.

*சங்ககாலத்தில் கன்னியாகுமரி மாவட்டத்தின் பெரும்பகுதிகளை ஆய் என்னும் சிற்றரசனே ஆண்டதாகக் கூறப்படுகிறது. இப்பகுதியில் பொதுவாக அழைக்கப்படும்.*

*நாஞ்சில்நாடு*

*இடைநாடு*

*ஆகிய பகுதிகளை இம்மாவட்டம் உள்ளடக்குகிறது.*

*இப்பகுதியில் வயல்கள் அதிக அளவில் இருந்ததால், நிலத்தை (வயலை) உழப்பயன்படும் நாஞ்சிலிருந்து (கலப்பை) இந்நிலப்பரப்புக்கு இப்பெயர் வந்தது என்பது பெயரியல் நிபுணர்களின் துணிபு ஆகும்.*

*தற்போது அகத்தீஸ்வரம் மற்றும் தோவாளை வட்டங்களாக இருக்கும் நாஞ்சில் நாடு, பத்தாம் நூற்றாண்டின் முற்பகுதி வரை பாண்டியர்களின் ஆட்சி பகுதியாக இருந்து பின் சேரரர்கள் வசம் மாற்றமடைந்ததாகத் தெரிகிறது.*

*தற்போது கல்குளம், விளவங்கோடு வட்டங்களாக இருக்கும் இடை, நாடு (வேணாடு) சேரர்கள் ஆட்சிப்பகுதியாக இருந்தது. பின் ஒய்சலயர்கள் மற்றும் மேற்குச் சாளுக்கியர்களின் வளர்ச்சியினால் சேரர்கள் ஆட்சிப் பகுதியாக இருந்தது முதல் விடுதலைப் போராட்டம் தொடங்கிய 1956. நவம்பர் முதல்நாள் குமரி மாவட்டம் தமிழ்நாட்டின் ஒரு பகுதியாக மாறியதுவரை பல்வேறு தரவுகளைப் பெறமுடிகிறது.*

**சமயம்**




*இம்மாவட்டத்தில் இந்துக்கள் 9,09,872 (48.65%) கிறித்தவர்கள் 8,76,299 (46.85%) இசுலாமியர்கள் 78,590 (4.20%) மற்றவர்கள் 0.30% ஆக உள்ளனர்.*

1. நாடாளுமன்றத் தொகுதிகள் - கன்னியாகுமரி
2. 2. சட்டமன்றத் தொகுதிகள் - கன்னியாகுமரி, நாகர்கோவில், குளச்சல், பத்மநாபபுரம், வினவங்கோடு, கிள்ளியூர்

மேலும், புவியியல், தட்பவெப்பநிலை பற்றியக் கூறுகளும் நிரம்ப பொதிந்துள்ளன.

**ஆறுகள்**

இம்மாவட்டத்திற்கு முக்கிய நதிகளான குழித்துறை, தாமிரபரணி, வள்ளியாறு, பழையாறு போன்றவைகள் சிறப்பு சேர்க்கின்றன.

**அணைகள்**

பேச்சுப்பாறை அணை

பெருஞ்சாணி அணை

முக்கடல் அணை

சிற்றாறு அணை

மாம்பழத் துறையாறு அணை

போன்றவைகளும் வளம் சேர்க்கின்றன. இதுவும் இன்ன பிறவும் கன்னியாகுமரி மாவட்டத்தின் சிறப்புகளாகும்.

**சுற்றுலா மற்றும் ஆன்மீகத் தலங்கள்**

1. துவராசலதி விநாயகர் திருக்கோவில் இடலாக்குடி
2. கன்னியாகுமரி பகவதி அம்மன் கோயில்
3. விவேகானந்த கேந்திரம்
4. விவேகானந்தர்பாறை
5. மண்டைக்காடு பகவதி அம்மன் கோவில்
6. விவேகானந்தர் நினைவு மண்டபம்
7. அய்யன் திருவள்ளுவர் சிலை
8. காந்தி மண்டபம்
9. சுசீந்திரம் தேரூர் பறவைகள் சரணாலயம்
10. சுசீந்திரம் தாணுமாலபன் கோயில்

*11. நாகராஜா கோவில்*

*12. திருவட்டாறு ஆதிகேசவ பெருமாள் கோவில்*

*13. பத்மநாபபுரம் அரண்மனை*

*14. சிதறால் சமண நினைவுச் சின்னங்கள்*

*15. மாத்தூர் தொட்டிப்பாலம்*

*16. உதயகிரிக்கோட்டை*

*17. உலக்கை அருவி*

*18. பேச்சிப்பாறை அணைக்கட்டு*

*19. பெருஞ்சாணி அணைக்கட்டு*

*20. முக்கடல் அணைக்கட்டு*

*21. நீர்ப்பரப்பு நீர்வீழ்ச்சி*

*22. சொத்தவிளை கடற்கரை*

*23. முட்டம் கடற்கரை*

*24. தேங்காய்பட்டணம் கடற்கரை*

*25. ஆலஞ்சி கடற்கரை*

**வட்டார வழக்கு**

*வட்டார வழக்கு பெயர்ச்சொல் என்பது, 1. வட்டார மொழி ஒன்றில் காணப்படும் சொல் வழக்கு, 2. ஒரு நாட்டின் ஒரு குறிப்பிட்ட பகுதியினரால் மட்டும் பேசப்படும். மொழிவகை - இது ஒலிப்பு முறையிலும் இலக்கண அமைப்பிலும், சொற்களாலும் பொதுமொழியிலிருந்து சிறிது மாறுபட்டது எனலாம்.*

> வட்டார வழக்கு என்பதற்கு, ஒலிப்புமுறை சொல் அமைப்பு, இலக்கண அமைப்பு ஆகிய கூறுகளில் அடிப்படையில் பொது மொழியிலிருந்து சற்றே வேறுபடுவதும் ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியைச் சார்ந்தவர்களால் மட்டுமே பேசப்படுவது[50]

*விளக்கம் தருகின்றது க்ரியாவின் தமிழ் அகராதி. இவற்றைக் கொண்டு ஒரு குறிப்பிட்ட நிலப்பரப்பில் ஒரு குறிப்பிட்ட மக்களால் பேசப்பட்டு புரிந்துகொள்ளப்படும் மொழி வகையை வட்டார மொழி என வரையறுத்துக் கொள்ளலாம். இவ்வகை மொழியில் வழங்கும் சொற்களையே வட்டார வழக்குச்*

*சொற்களாக அடையாளப்படுத்துகின்றனர். வட்டாரச் சொல் எது என்பதற்குக் கீழ்வரும் ஒரு குறிப்பு இன்னும் அதிகப் புரிதலைத் தருகின்றன.*

> பொது வழக்கில் இருக்கும் ஒரு சொல், பொதுப் பொருளிலிருந்து வேறுபட்டு வழங்குதல், ஒரு சொல் குறிப்பிட்ட வட்டாரத்தில் மட்டுமே வழங்க, புரிந்துகொள்ளப்படுதல், பொது வழக்குச் சொல்லாக இருப்பினும் திரிந்து உச்சரிப்பில் வேறுசொல் போலத் தோற்றம் தருதல் என மூன்று நிலைகளில் இருப்பது வட்டாரச் சொல்லாகும்.[51]

*சூழலுக்கேற்ப வழக்கொழிந்து மறைந்து போகும் தன்மை கொண்டதாக வட்டார மொழிச்சொற்கள் உள்ள நிலையில் மிக வேகமாக மறைந்து வருகின்றன. வேளாண், மட்பாண்டம், தச்சு சலவை, மீன்பிடி, முதலானத் தொழில் முறைகளில் அறிவியல் சாதனங்கள் மிக வேகமாகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. சில தொழில்கள் போதிய வருவாய் இன்மையாலும், சமூக அங்கீகாரமின்மையாலும் கைவிடப்பட்டு விட்டன. இவ்வகைக் காரணங்களால் அந்தத் தொழில் சார்ந்து இயங்கி வரும் சொற்கள் காலப்போக்கில் மறைந்துவிடும் வாய்ப்பு ஏற்பட்டு வருகின்றது.*

*எனவே இத்தகைய வழக்குச் சொற்களையும், இனவரைவியல்களையும் மீட்டுருவாக்கம் செய்யும் பாங்கில் இவ்வியல் அமைகிறது.*

**தமிழ் வட்டார மொழி வழக்குகள்**

*தமிழ், துறைவாரியாகத் தமிழ், வட்டார வழக்குகள் என்பதில்,*

**தமிழ்**

1. *கொடுந்தமிழ்*
2. *செந்தமிழ்*
3. *தனித்தமிழ்*
4. *முத்தமிழ்*

**துறைவாரியாகத் தமிழ்**

1. *அறிவியல் தமிழ்*
2. *ஆட்சித் தமிழ்*
3. *இசைத்தமிழ்*

4. இயற்றமிழ், இயல்தமிழ்
5. சட்டத்தமிழ்
6. செம்மொழித்தமிழ்
7. தமிழிசை
8. நாடகத்தமிழ்
9. மருத்துவத் தமிழ்
10. மீனவர் தமிழ்
11. பிராமணத்தமிழ்

**வட்டார வழக்குகள்**

1. திருநெல்வேலித் தமிழ்
2. அரிசனப் பேச்சுத் தமிழ்
3. குமரி மாவட்டத் தமிழ்
4. கொங்குத்தமிழ்
5. செட்டிநாட்டுத் தமிழ்
6. சென்னைத் தமிழ்
7. மட்டக்களப்புப் பேச்சுத்தமிழ்
8. நாஞ்சில் தமிழ்
9. மணிப்பிரவாளம்
10. மலேசியத்தமிழ்
11. யாழ்ப்பாணத்துப் பேச்சுத் தமிழ்
12. சுலோன் தமிழ்
13. பெங்களூர் தமிழ்

தமிழ்மொழிப் பேச்சு வழக்கில் இடம் சார்ந்து அல்லது சமூகம் சார்ந்து அல்லது தொழில் சார்ந்து வழங்கும் வழக்குகள் தமிழ் வட்டார மொழி வழக்குகள் ஆகும்.

தமிழகத்தில் மட்டுமல்லாது உலகளவில் தமிழில் ‘22’ வட்டார வழக்குகள் இருப்பதாக எத்னொலோக் (Ethnologue) என்ற உலக மொழிகள் பற்றிய பதிப்பு நிறுவனம் தெரிவிக்கிறது. அவையாவன,

1. ஆதிதிராவிடர்
2. ஐயர்
3. ஐயங்கார்
4. அரவா
5. பருகண்டி
6. கசுவா
7. கொங்கர்
8. கொரவா
9. கொஞ்சி
10. மதராசி
11. பரிகலா
12. பாட்டுமொழி
13. இலங்கை தமிழ்
14. மலேரியா தமிழ்
15. பர்யா தமிழ்
16. தென்ஆப்பிரிக்காத் தமிழ்
17. திகாலு
18. அரிசன்
19. சங்கேதி
20. கெப்பார்

போன்றவைகளாகும். கொங்கு மற்றும் குமரி ஆவன வேறிரு தெரிந்த வட்டார வழக்குகள் ஆகும்.

இவ்வட்டார வழக்குகளில் சமூகம், தொழில், பண்பாடு, சாதி, மதம், அந்நிய மொழி சார்ந்து வட்டார வழக்குகள் வேறுபடுகின்றன. தொலைக்காட்சி இணையம் தொடர்பான முன்னேற்றம் காரணமாக புதிய வழக்குகளாக இன்று பெருமளவுக்கு ஆங்கிலம் கலந்த சொற்கள் வட்டார புழக்கத்துக்கு விடப்பட்டுள்ளன. மேனாட்டுக் கல்வி மற்றும் அறிவியல் வளர்ச்சி தொடர்பில் புதிய சொல்லாக்கம், கலைச்சொல்லாக்கம் முதலிய அம்சங்களில் ஒருங்கிணைந்த முயற்சிகள் வேறுபட்ட மொழி வழக்குகளை உருவாக்கியுள்ளன.

**வரலாறு**

*தொல்காப்பியச் சான்றுகளிலிருந்து இந்நூலாசிரியர் 13 தெளிவான பிரதேச மொழிகளை ஒப்புக்கொள்வதாகக் கருத இடமிருக்கிறது. இவற்றுள் ஒன்றை அவர் செந்தமிழ் என்று குறிப்பிடுகின்றார். மற்ற 12ஐக் குறித்து அவர் பொதுவாக 'செந்தமிழ் நிலத்தை ஒட்டியிருக்கும் 12 நிலங்களின்' பேச்சு வகைகள் என்று பேசுகின்றார்.*[52]

> தொல்காப்பியத்தில் செந்தமிழ் நிலத்தில் பேசப்பட்ட சொற்களை இயற்சொற்கள் என்றும் 12 மற்ற தமிழ் நிலங்களில் பேசப்படும் சொற்களை திசைச்சொல் என்றும் குறிப்பிடுகின்றார்.[53]

அவற்றுள்
இயற்சொல் தாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை இசைக்கும் சொல்லே[54]
செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்
தம் குறிப்பினவே திசைச்சொல் கிளவி[55]

*செந்தமிழ் நிலத்தைச் சார்ந்த, தென்பாண்டி, குடம், குட்டம், அருவா, குடகர், கருநாடர் போன்ற பகுதியினர் வழங்கும் சொற்கள் திசைச்சொல் ஆகும். தாயைத் தள்ளை என்றல், தந்தையை அச்சன் என்றால் போன்றவைகளாகும்.*

**வகைப்பாடுகள்**

*தமிழ்நாடு - தெற்கு கிளைமொழி.*

1. *மதுரை*
2. *இராமநாதபுரம்*
3. *திருநெல்வேலி*
4. *கன்னியாகுமரி*

*மேலும் மத்திய கிளைமொழி, மேற்கு கிளைமொழி, வடக்குக் கிளைமொழி இவற்றுள் 'கன்னியாகுமரி' கிளைமொழியும், வழக்குச் சொற்களும் ஆராயப்படுகின்றன.*

### குமரித் தமிழ் அல்லது நாஞ்சில் நாட்டுத் தமிழ்

*குமரித்தமிழ்* (Kumari Tamil) *அல்லது நாஞ்சில் நாட்டுத் தமிழ் என்பது தமிழின் வட்டார வழக்குகளுள் ஒன்றாகும். தமிழகத்தின் வேறு பகுதிகளில் வழங்காத சொற்களெல்லாம் 'கன்னியாகுமரி' மாவட்டத்தில் வழக்கில் உள்ளன. இப்பகுதி மலையாள நாட்டின் வாயிலாக இருப்பதால் மலையாளச் சொற்களும், இலக்கணமும் இப்பகுதியின் பேச்சு வழக்கில் மிகுதியாகக் கலந்திருக்கின்றன.*

### தோப்பில் முகமது மீரான் படைப்பும் வழக்குச் சொற்களும்

*ஆய்வு வரையறைக்குட்பட்ட படைப்புகளின் வழி இனவரைவியலும், வழக்குச் சொற்களும் ஆராய்ந்தறியப்படுகின்றன.*

1. *வேர்களின் பேச்சு - 75 சிறுகதைகள் (2009)*
2. *குடியேற்றம் (2017)*
3. *அஞ்சுவண்ணம் தெரு (2016)*
4. *ஒரு கடலோர கிராமத்தின் கதை (2014)*
5. *துறைமுகம் (2016)*
6. *சாய்வு நாற்காலி (2006)*
7. *கூனன் தோப்பு (2016)*

*மேற்கண்ட படைப்புகளின்வழி இஸ்லாமிய மக்கள் மற்றும் கடலும் கடல் சார்ந்த சமூக மக்களின் வாழ்வியலும், வழக்குச் சொற்களையும் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.*

1. *தோவாளை, அகஸ்த்தீஸ்வரம் வட்டங்களை உள்ளடக்கிய பண்டைய - நாஞ்சில் நாட்டுத் தமிழ்*
2. *கல்குளம், விளங்கோடு வட்டங்களை உள்ளடக்கிய பண்டைய இடைநாட்டுத் தமிழ்*
3. *கடலோரக் கிராமங்களை உள்ளடக்கிய வட்டார மீனவர் தமிழ்.*

*மேற்கண்டதில் இடைநாட்டுத் தமிழில் மட்டுமே மலையாள மொழியின் தாக்கம் அதிகமாகத் தென்படுகிறது. மற்ற இரு வகைகளிலும் மலையாளம் அவ்வளவாகக் கலவாமல் உள்ளது. தமிழ்ச் சொற்கள் / இலக்கணத்தின் மருவலே அதிகம் காணப்படுகிறது.*

கீழ்க்காணும் விளக்கங்களில், மலையாள வழக்கு என்பது மலையாளத்தில் இருந்து மருவியது என்று பொருள்படாது. மாறாக இந்தச் சொல் பிற வட்டார வழக்கில் அவ்வளவாகப் பயன்படுத்தப்படாமல், குமரித் தமிழிலும், மலையாளத்திலும் (மட்டுமே) வழக்கத்தில் உள்ளது என்றே பொருள்படுகிறது. அச்சொற்கள் அடிப்படையில் தமிழ் வேர்கொண்ட சொற்களாகவோ, மலையாளத்தின் தனித்துவமான சொற்களாகவோ இருக்கலாம்.

தோப்பில் முகமது மீரானின் படைப்புகளில் காணலாகும் வழக்குச் சொற்களும், இன்ன பிற குமரி மாவட்ட சொல்வழக்குகளும் குமரித் தமிழ்ச் சொல், பொதுத் தமிழ்ச் சொல் என அகரநிரலில் பகுத்துப் பின்வரும் அட்டவணையில் காட்டப்பட்டுள்ளன.

| **குமரித் தமிழ்ச் சொல் (வழக்கு)** | **பொதுத் தமிழ்ச் சொல்** |
|---|---|
| அக்கானி | பதநீர் |
| அங்கணம் / அங்ஙணம் | உள்முற்றம் / கழிவுநீர்மடை |
| அங்க/அங்கிண | அங்கே |
| அங்கோடி | அந்த வழியாக |
| அசல் | துணி உலர்த்தும் |
| அசை | துணிபோடும் கொடி |
| அடிச்சுமாத்துவது | திருடுவது |
| அண்டிப்பருப்பு | முந்திரிப் பருப்பு |
| அண்டை | அடுப்பு |
| அர்த்தம் | கடைசி |
| அத்தாழை அத்தாழம் | அந்தி உணவு அற்றாலம் |
| அத்து | வெட்டி |
| அந்தால | அந்த வழியாக / அப்படி / அதற்குப்பிறகு |
| அப்பசி | தாத்தா |
| அப்பம் | அப்போது |
| அம்மாசி | அம்மாவாசை |
| அம்படம் / அம்புடம் | அவ்வளவு |

| குமரித் தமிழ்ச் சொல் (வழக்கு) | பொதுத் தமிழ்ச் சொல் |
|---|---|
| அயத்து | மறந்து |
| அல்லா | அல்லவா |
| அல்லாம | அல்லாமல் / இல்லாமல் |
| அலட்டல் | பேசிக்கொண்டே இருப்பது |
| அலவாக்கரை | கடற்கரை |
| அவயம் | பெருத்த ஒசை |
| அவயான் | பெருச்சாளி |
| அவிய | அவர்கள் |
| அற்றம் / அத்தம் | கடைசி / இறுதி / முடிவு |
| அலங்கு வீடு | சேமிப்பு அறை, பூசை அறை |
| அரதி | துன்பம், விருப்பமின்மை |
| அரிஷ்டம் | போலிச்சாராயம் |
| அளி/அழி | கம்பி போட்ட பெரியசாரளம் |
| அளுவ | ஒரு உயர்தர வகை மீன் |
| அறுப்பு | தீட்டு, வசை, திட்டுதல், அறுவடை |
| அன்னா | அதோ, அங்கே |
| அனக்கம் | சத்தம், அசைவு, இயக்கம் |
| ஆக்கத்தி | சிறிய வகை அரிவாள் |
| ஆக்கர்கடை | காயலான்கடை |
| ஆகுல்லா | ஆகிறது அல்லவா |
| ஆட்டும் | சரியென ஆமோதித்தல் / ஆகட்டும் |
| ஆயின சக்கை / ஜணிச்சக்கை | ஈரப்பலா |
| ஆராங்கு | ஒரு மீன்வகை |
| ஆவி | ஆகி |
| இங்கன / இங்கிண | இங்கே |
| இங்கோடி | இந்த வழியாக |
| இஞ்ச | இங்கே |
| இஞ்சோத்திருங்கோ | இங்கே வந்து உக்காருங்கள் |

| குமரித் தமிழ்ச் சொல் (வழக்கு) | பொதுத் தமிழ்ச் சொல் |
|---|---|
| இணிஞ்சு / இனிஞ்சி | பிய்த்து / பறித்து பிடுங்குதல், கொய்தல் அடத்து எடுத்தல் கிள்ளி எடுத்தல் |
| இம்படம் / இம்புடம் | இவ்வளவு |
| இரி | இரு, உட்கார் |
| இலையப்பம் | தென்னை, பனை, பலா, பூவரசு, வாழை, பாதாம், தேரளி இலையில் அரிசி மாவு, வெல்லம் அல்லது உப்புக்காரம் தேங்காய், எள், இஞ்சி, சுக்கு சேர்ந்து |
| இவிய | இவர்கள் |
| இளச்சல் | சீவுதல் / வாருதல் |
| இன்னா | இதோ, இங்கே |
| ஈக்கல் | தென்னை ஓலையின் நடு நரம்பு |
| ஈக்கான்பெட்டி | பனை ஓலையால் செய்யப்பட்ட பெட்டி |
| ஈச்சி | ஈ |
| ஈரக்கொலை | ஈரல் |
| உச்சி/உச்சை | மதியம் |
| உத்திப்போல | மிகச்சிறிய அளவு கொஞ்சம் |
| உணக்கு / ஒணக்கு | காயவை |
| உப்புக்குத்தி | கணுக்கால் |
| உழுக்கு, பக்கா, மரக்கால் | அரிசி அளவைகள் |
| உழக்கான்பெட்டி | பனை ஓலையால் செய்யப்பட்ட பெட்டி |
| உரியாடல் | உரையாடல், பேச்சு |
| உருமா | திருமணத்தின் போது மணமகனின் தலையில் கட்டப்படும் துணி |
| உலும்புவாடை | இறைச்சி வாடை (கவுச்சி வாடை) |
| உள்ளுறுப்பு | பெண்களின் உள்ளாடை |
| உளுக்கு | சுளுக்கு |
| உறை | ஒருவகை நண்டு |

| **குமரித் தமிழ்ச் சொல் (வழக்கு)** | **பொதுத் தமிழ்ச் சொல்** |
|---|---|
| ஊச்சாளி | மற்றவர்களைவிட தகுதியில் உயர்ந்தவன் என ஏளனமாகச் சொல்லுதல் |
| ஊதாப்பட்டி | பலூன் |
| எங்கன / எங்கிண | எங்கே |
| எங்கோடி | எந்த வழியாக |
| எத்து | உதை |
| எதுப்பு | எதிராக |
| எப்பம் | எப்போது |
| எம்படம் | எவ்வளவு |
| எரப்பாளி | இழிச்சொல் / வசைச்சொல் / இரந்து உண்பவர் |
| எல்லு | எலும்பு |
| எவிய | எவர்கள் |
| எளளுப்போல | சிறிதளவு |
| ஏசுதல் | திட்டுதல் |
| ஏம்பக்கம் | ஏப்பம் |
| ஏத்தன்பழம் | நேந்திரன்பழம் |
| ஏனம் | பாத்திரம் |
| ஐயம் / அய்யம் | கெட்டது / கெட்டுப்போனது |
| ஐயா / அய்யா | தகப்பன் |
| ஐயாவழி / அய்யாவழி | அய்யா வைகுண்டர் எனும் சித்தரால் உருவாக்கப்பட்ட சமயநெறி |
| ஒக்கல் | இடுப்பு |
| ஒக்கும் / ஒக்காது | முடியும், முடியாது |
| ஒட்டாங்கண்ணி | உடைந்த மண்பானையின் துண்டு |
| ஒடக்கு / வடக்கு | சண்டை / மனக்கசப்பு |
| ஒடயக்காரன் | உரிமைக்காரன் |
| ஒடுக்கம் | பிறகு / கடைசியில் |
| ஒண்ணி | ஒன்றாக்கு |

| குமரித் தமிழ்ச் சொல் (வழக்கு) | பொதுத் தமிழ்ச் சொல் |
|---|---|
| ஒருபாடு / ஒருவாடு | நிறைய |
| ஒலுங்கு | கொசு |
| ஒறச்சு | உரக்கு |
| ஒறப்பு | தூரம் |
| ஒட்டன்காய் | பிஞ்சு புளியங்கா |
| ஒணப்பந்து விளையாட்டு | எருமைத் தோல் மற்றும் தேங்காய் நாரால் செய்யப்படும் பந்தினை ஏழுபேர் கொண்ட ஒரு அணி எறிந்திட அதனை எதிரணி காலால் தடுத்திடும் விளையாட்டு |
| ஓர்மை / ஓற்மை | நினைவு ஞாபகம் |
| கக்குமடி | வேட்டியை மடித்து கட்டுதல் |
| கச்சவடம் | வியாபாரம் |
| கசேரி | சாய்வு நாற்காலி |
| கஞ்சித்தாள் | ஈகநார் காகிதம் (பாலீதின் பேப்பர்) |
| சட்டை | குட்டை |
| கடலாசு | காகிதம் |
| கடவப்பெட்டி | பனை ஓலையால் செய்யப்பட்ட பெட்டி |
| கடுவன் | ஆண் மிருகம் |
| கணியான் ஆட்டம் | சுடலை மாடன். அம்மன் மற்றும் சாஸ்தா கோவில்களின் திருவிழாக்களில் பாடி ஆடப்படும் ஒரு கூத்தாட்டம் |
| கத்தம் ஓதல் | முழு ஆற்றுலுடன் ஒருவருக்கு எடுத்துக்கூறல் |
| கதம்பல் / கதம்ப | தேங்காய் மட்டை |
| கயப்பு | கசப்பு என்பதன் திரிபு |
| கம்புக்கூடு | கைக்குழி / அக்குள் கக்கம் / கழக்கட்டு |
| கயலி | ஒருவகை மீன்வகை |
| கயறு / சேறு | ஏறு |
| கரச்சி | அழுகை |

| குமரித் தமிழ்ச் சொல் (வழக்கு) | பொதுத் தமிழ்ச் சொல் |
| --- | --- |
| கரமடி | பெரியவகை மடிவலை |
| கருக்கு | இளநீர் / இளம் தேங்காய் |
| கருங்காய் | பச்சை முந்திரிக்காய் |
| கல்சான் | கால்சட்டை |
| கலவாய் | ஒருவகை மீன் |
| கலுங்கு | மதகு அணை / உயரம் குன்றிய சுவர் |
| கவக்கம்பு | பிரம்பு / லத்தி ஊன்றுகோல் / மூங்கில் கம்பு |
| கவுட்டை | கால்கள் இடுக்கில் கூடும் இடம் |
| கறண்டை | கணுக்கால் |
| கறுக்கு / கறுக்கல் | மருளாகும் மாலை பொழுது, அந்தி முன்னிரவு |
| கழச்சி / கச்சி | கோலிகுண்டு |
| கழஞ்சி | தண்ணீர் ஊற்றிய பழைய சோறு |
| கழனி / கழநி | கழுநீர் மாடுகள் குடிக்கும் ஒரு வகையான கலவை தோல் / தண்ணீர் / எல்லாம் சேர்ந்தது |
| கழுமாடன் | கழு மரமாடன் - காவல் கடவுள் |
| கழைக் / களைக்கம்பு | மரங்களிலிருந்து காய்கனிகள் பறிப்பதற்காக உதவும் நீண்ட கம்பு |
| கறண்ட | கணுக்கால் |
| கள்ளத்தீனி / கள்ளப்பண்டம் | நொறுக்குத்தீனி |
| களிம்பு | குழைவான பூசிக்கொள்ளும் படியான மருந்து |
| களை | தூண்டில் |
| கண்ணாமண்டை | உச்சந்தலை |
| கன்யாரி / கன்யாமாரி | கன்னியாகுமரி என்பதன் கொச்சை வடிவம் |
| கனமா | நிறைய |
| கஷண்டி | தலைவழுக்கை |
| காஞ்சவெள்ளம் | வெந்நீர் / சுடுதண்ணீர் |
| காத்தாடிமரம் | சவுக்குமரம் |
| காந்தல் | எரியும் உணர்வு |

| **குமரித் தமிழ்ச் சொல் (வழக்கு)** | **பொதுத் தமிழ்ச் சொல்** |
|---|---|
| காடந்தரம் | கால்விலங்கு |
| காணாம் | கொள்ளு |
| கிந்திதொட்டு | நொண்டி எடுத்து |
| கிண்டி | கிளறி |
| கிண்ணி | கரண்டி வாய கண்ட சிறு கிண்ணம் |
| கிரேந்தி | செவ்வந்தி எனும் செம்மஞ்சள் நிறப்பூ வகை |
| கிறங்கு / கெறங்கு / கறங்கு | சுற்று |
| கிளாத்தி / க்ளாதி | கெளுத்திமீன் |
| குசுனி | சமையல் அறை |
| குங்குவப் பச்சை | சுடலைமாடன் சிலைக்கு சார்த்தப்படும் சிகப்பான ஒரு கலவை |
| குட்டுவம், குத்துப்போணி | பெரியவாய் அகன்ற பாத்திரம் |
| குண்ணை | அனுறுப்பு |
| குண்டனி | கோள் சொல்லுதல், புறம் சொல்லுதல் |
| குத்தா | மீன்வகை |
| குத்துப்போணி | பெரிய பாத்திரம் |
| குப்பி | புட்டி |
| கும்பாரி | நண்பர் |
| கும்பிளி | நீர் (குமிழி) |
| குருசு | சிலுவை |
| குழை / கொழை | ஆடுமாடுகளுக்கு உணவாக வைக்கப்படும் இலைதழை |
| குழை இறக்கம் | மரத்தில் இருந்து உபரி இலைகளை வெட்டுதல் |
| குளிவு | சிறு கிண்ணம் |
| குளியை / குளிகை | மாத்திரை |
| குளுத்தி | குளிர |
| குளுவன் / குளுவத்தி | குறவன் / குறத்தி போன்ற நாடோடிகள் |
| குறுக்கு | பின் இடுப்பு, கீழ்முதுகு |

| குமரித் தமிழ்ச் சொல் (வழக்கு) | பொதுத் தமிழ்ச் சொல் |
|---|---|
| குறுங்கட்டி | உயரம் மிகக் குன்றிய சிறு மேசை |
| குன்னிமுத்து | குந்துமணி / குன்றிமணி / குண்டுமணி |
| கூந்தை / கூந்த | உண்டு முடித்த நுங்கின் எஞ்சிய பகுதி |
| கூறம் காய்வது | கடலில், ஆற்றில் குளித்து விட்டு சுடு மணலில் படுத்து வெயில் காய்வது |
| கூனி | உருவத்தில் சிறியதாய் இருக்கும் ஒருவகை இறால் |
| கெளிறு | மீசை வைத்த குளத்து மீன்வகை |
| கேரை | ஒரு மீன்வகை |
| கைலேஞ்சி / கைலேஞ்சு / கைலேஞ்ச் | கைக்குட்டை |
| கையும் கணக்கும் | அளவே |
| கொச்சங்காய் | குரும்பைத் தேங்காய் |
| கொச்சுமுறி | சிறிய அறை |
| கொண்டி | கதவு, சாரளங்களைச் சார்ந்த பயன்படும் சௌக்கி போன்ற அமைப்பு |
| கொதம்பு | தென்னம்பாளை |
| கொப்பன் | தகப்பன் |
| கொப்பு | மரப்பிளை |
| கொம்மை | தாயார் |
| கொமை | ஏளனம் செய், கிண்டல் செய் |
| கொய்வு | கொசு |
| கோடி | புதுத்துணி |
| கொடை | கோயில திருவிழா |
| கோம்பை | பித்தன், அசடு, கிறுக்கன் |
| கோரிகுடி | மொண்டுகுடி |
| கொல்லாம் / கொல்லமாவு / கொல்லாவு | முந்திரி |
| கொல்லைக்கு இருத்தல் | மலமிருத்தல் |

| குமரித் தமிழ்ச் சொல் (வழக்கு) | பொதுத் தமிழ்ச் சொல் |
|---|---|
| கொள்ளாம் | நன்று / நன்றாக உள்ளது |
| கோளாம்பி | துப்புக்கிண்ணம் |
| சக்கரம் | பணம் |
| சக்கரை | வெள்ளம் |
| சக்கைப் / சக்கப்பழம் | பலாப்பழம் |
| சக்கக்கொட்டை | பலாப்பழக்கொட்டை |
| சக்கோளி | அரிசி மாவு, தேங்காய் மற்றும் இரால் / இறைச்சியால் தயாரிக்கப்படும் உணவு (காரணமான) |
| சங்கு | கழுத்து |
| கட்டம்பி | கேடி, தாதா, ரவுடி |
| சட்டவம் | வாய் அகன்ற பெரிய பாத்திரம் |
| சட்டுவம் / சட்டாப்பை | தட்டையான கரண்டி |
| சடவு | சோம்பல் உடல் உளைச்சல் |
| சண்டமுறியன் | பஞ்சாமிருதம் போன்ற ஒரு உணவுப்பொருள் |
| சத்தி / சர்த்தல் | வாந்தி |
| சப்பட்டை | கெட்டுப்போன / கெட்டவர் |
| சப்புஞ்சவறும் | குப்பையும், கூளமும் |
| சமுட்டுதல் / சமுண்டு சவுட்டுதல் / சவட்டுதல் | மிதித்தல் |
| சரக்கு / வெடி / படக்கு டாக்ஸி | வேசி |
| சருவம் | சிறிய பாத்திரம் |
| சவன்டீஸ், ஸவன்டீஸ் | ஏழு தட்டை கற்களை அடுக்கி வைத்து இரு துணிகளாகப் பிரித்து ஒரு பந்தை வைத்து ஆடும் விளையாட்டு |
| சவுக்குமுட்டாய் | சவ்வுமிட்டாய் |
| சள்ளை | தொல்லை |

| குமரித் தமிழ்ச் சொல் (வழக்கு) | பொதுத் தமிழ்ச் சொல் |
|---|---|
| சளம் | வஞ்சகன், வீணானவன், உருப்படாதவன் |
| கறக்குதல் | சறுக்குதல், வழுக்குதல் |
| காடுதல் | தாவுதல், குதித்தல் |
| சாணாங்கி | சாணம் |
| சாணிப்பால் | நீர் ஊற்றிக் கலக்கிய மாட்டுச்சாணம் |
| சாப்பு / சேப்பு | சட்டையை |
| சாயிப்பு | இஸ்லாமியர் |
| சாரம் | லுங்கி |
| சாளை | மீன்வகை, மத்தி |
| சிக்கு | போதை |
| சிக்குவண்டி | குடிகாரன் |
| சிங்கன்பழம் | வாழைப்பழத்தில் நீண்ட வகை |
| சிங்காம்புள் | கிட்டிப்புள் |
| சிப்பல் | விருந்துகளில் சோறு பரிமாறப் பயன்படும் அகன்ற கரண்டி |
| சிவீந்திரம் | சுசீந்திரம் என்பதன் கொச்சை வடிவம் |
| சில்லாட்டை | தென்னை மரத்தில் இருக்கும் வலை போன்ற பகுதி பன்னாடை |
| சிலேபியாக் கெண்டை | சிலேபிக் கெண்டை மீன் |
| சிறுபயறு | பாசிப்பயறு |
| சின்ன உள்ளி / ஈருள்ளி | சின்ன வெங்காயம் |
| சீணம் / ஷீணம் | சோர்வு உடல் உபாதை |
| சீலா | மீன்வகை, வஞ்சிரம் |
| சீனிக்கிழங்கு | சர்க்கரைவள்ளிக் கிழங்கு |
| சீனிச்சட்டி | வாணலி |
| சீனிவரக்காய் | கொத்தவரங்காய் / சீனி அவரைக்காய் |
| சுட்டிபிடி | பெண்கள் ஆடும் ஒருவகை விளையாட்டு |
| சுண்டு | உதடு |

| குமரித் தமிழ்ச் சொல் (வழக்கு) | பொதுத் தமிழ்ச் சொல் |
|---|---|
| சும்மை | சும்மா |
| சுருக்கா | ஒருவகை பலகாரம் |
| சுவர்முட்டி | ஒருவகை நாட்டுச் சாராயம் |
| சூடு அடித்தல் | போர் அடித்தல் |
| சூரம்பாடு | சூரன்போர், சூரன் திருநாள் |
| செத்தோல | சிறிது |
| செணம் | சீக்கிரம் / விரைவாக |
| செயின்ற் | செயின்ட் / புனித |
| செரவி / செரவம் | தேங்காய்த் துருவி |
| செல்லி | தென்னை மரத்தைத் தாக்கும் ஒருவகை வண்டு |
| செவி | காது |
| செவிள் / செவளை | கன்னம் + காது சேர்ந்த பகுதி, மீன்களுக்கு செவுள் இருக்கும் பகுதி |
| செறை / செற | தொல்லை / எரிச்சல் |
| செறுத்தல் | தடுத்தல், வழிமறித்தல் |
| செறுப்பம் / சிறுப்பம் | சிறுவயது |
| சொக்காரன், சொக்காரி | சொந்தக்காரன், சொந்தக்காரி சகோதரன், சகோதரி ஒன்றுவிட்ட பெரியப்பா சித்தப்பாபிள்ளை பங்காளி |
| சொளவு / சொளகு | முறம் |
| சோக்கேழு / சூக்கேடு | நோய் |
| சோறு வைப்பு | திருமணத்தின் முந்தைய தின விருந்து |
| டப்பர்வாளி | நெகிழி, வாளி, பிளாஸ்டிக் வாளி |
| ஞாறாச்ச | ஞாயிற்றுக்கிழமை, ஞாயிறாழ்ச்சா எனும் மலையாளச் சொல்லின் திரிபு |
| டப்பி | சிறுபெட்டி |
| தட்டிப்பிழிச்சன் / தட்டிப்புளிச்சல் | காய்ச்சல், தலைவலி ஜலதோஷம் ஆகியவற்றிற்கு வீட்டில் தயாரிக்கப்படும் கைமருந்து |

| குமரித் தமிழ்ச் சொல் (வழக்கு) | பொதுத் தமிழ்ச் சொல் |
|---|---|
| தட்டு | மாடி |
| தட்டுமடி | சிறியவகை மடிவலை |
| தடியங்காய் | சாம்பற்பூசணிக்காய் |
| தடுக்கு | பனை ஓலையால் செய்யப்பட்ட சிறுபாய் |
| தண்டு | துடுப்பு |
| தணுப்பு | குளிர் |
| தலகெறக்கம் | தலைசுற்றல் |
| தலமண்டை | தலை |
| தவுக்கா | தவளை |
| தள்ளை | தாய் |
| தாக்கோல் | சாவி |
| தாமிரபரணி ஆறு | குழித்துறை ஆறு |
| தாளி | இலைச்சாறு, ஒரு வகைச்சொல் (தாயளி) |
| தாறா | வாத்து |
| திராணி | தைரியம், ஆற்றல், வலு |
| திருப்பன் | கொண்டையில் வைத்துக் கட்டும் அலங்காரப் பொருள் |
| துட்டிவீடு | துக்கவீடு |
| துண்டு | குற்றாலந்துண்டு, சுட்டித்துவர்த்து, ஒணத்துண்டு |
| துப்புணி | உமிழ்நீர் |
| துவர்த்து / தொவற்று / துவற்து / தொர்த்து | தலை துடைக்க பயன்படும் துண்டு துவட்டுவது |
| துவரன் | பொரியல் |
| துள்ளுமறி / துள்ளுமறி | பலி கொடுக்க பயன்படும் ஆட்டுக்கிடா அல்லது ஆட்டுக்குட்டி |
| துளுவன்பழம் | வாழைப்பழத்தில் ஒரு தடித்த வகை |
| துறையல் / தொறவால் | சாவி |
| தூப்பு | துடைப்பம் |

| குமரித் தமிழ்ச் சொல் (வழக்கு) | பொதுத் தமிழ்ச் சொல் |
|---|---|
| தூரணி | கடலுக்குள் அலை எழும் இடம் |
| தூரமா | வெளியே செல்கிறீர்களா? / எங்கே செல்கறீர்கள் |
| தூரை | சிறிய மண்டபம் |
| திருவலை | தேங்காய்த்துருவி |
| தின்னக்கு / உண்ணக்கு | தின்பதற்கு / உண்பதற்கு |
| தீட்டம் | மலம் |
| தெங்கு , தெங்நு | தேங்காய் / தென்னை |
| தெண்டல் | ஓணான் |
| தெரக்கு | தேடு |
| தெரச்சி | மீன்வகை |
| தெரளிஇலை | பிரிஞ்சி இலை |
| தெவக்கம் | தேக்கம், தாகம், தேம்புதல் மூச்சு வாங்குதல் |
| தெறி | இளகிய மணல்மேடு கெட்ட வார்த்தை |
| தெறிமண் | செம்மண் |
| தேரடு | இறுகிய மண்மேடு |
| தேழி / தேளி | மீசை வைத்த குளத்து மீன்வகை |
| தொட்டி | ஒரு கிழிச்சொல் , வசைச்சொல் ஊதாரி / நாகரீகம் இல்லாதவர் |
| தொரப்ப, துறப்ப தொறப்பை | துடைப்பம் விளக்குமாறு |
| தொலி | தோல் |
| தொளவடை | துளையிட்ட வடை |
| தொளி / தொழி | சேறு |
| தோளி உழவு | மழைக்கால / பனிக்கால உழவு |
| தோண்டி | பனை ஓலையில் செய்யப்படும் ஒரு தண்ணீர் சுமக்கும் குழிந்த பாத்திரம் |
| நம்பட்டி | மண்வெட்டி |
| (வீட்டு) கடை | வீட்டு வாசற்படி |

| குமரித் தமிழ்ச் சொல் (வழக்கு) | பொதுத் தமிழ்ச் சொல் |
|---|---|
| நடூஸ் | நடுவில், மையத்தல் |
| நம்மாட்டி | மண்வெட்டி |
| நல்லமாவு | |
| நளி | (செல்லமாக) கேலிசெய்தல் |
| நாணக்கேடு | கேவலம் |
| நாயடி | ஒரு பழங்குடியினத்தின் பெயர் |
| நாசோயில் / நாறோல் | நாகர் கோவில் என்பதின் கொச்சை வடிவம் |
| நிக்கர் | அரைக்கால்சட்டை |
| நிக்கான் / நிக்கா / நிக்கிறாள் | நிற்கிறான் / நிற்கிறாள் வேலை செய்கிறான் / வேலை செய்கிறாள் |
| நிச்சாம்பலம் | நிச்சயதாம்பூலம் |
| நிலவா | சோறு பரிமாறப் பயன்படும் கரண்டி |
| நுள்ளல் | கிள்ளல் |
| நீக்கம்பு | திமிர், வயிற்றுப்போக்கு பெருமழை |
| நிழல் தங்கல் | ஒரு அய்யாவழி வழிபாட்டுத்தலம் |
| நெக்கல் | அழுத்தி பிதுக்கல் |
| நெட்டி | கரண்டி போன்ற அமைப்பு |
| நெரிபிரி | அவசரகதி நெரிசல் |
| நேரியல் | நீண்ட துண்டு |
| நோவு / நோகல் | வலி |
| பக்கரா | சுருக்குப்பை |
| பக்கி | வண்ணத்துப்பூச்சி |
| பச்சம் | நட்புகொளல் |
| பசியாறல் | உணவு உண்ணல் சாப்பிடல் |
| பஞ்சசாரை | சீனி |
| பட்டை | கஞ்சிக்குடிப்பதற்காக பனை ஓலையில் செய்யப்பட்ட கரண்டி |
| படக்கு | பட்டாசு |

| குமரித் தமிழ்ச் சொல் (வழக்கு) | பொதுத் தமிழ்ச் சொல் |
|---|---|
| படத்தி | ஒரு வாழை வகை |
| படிக்கம் | அகண்ட வாய்கொண்ட பாத்திரம் |
| பண்டு | முன்பு, பழைய காலம் |
| பத்தாயம் | தானியங்கள் பாதுகாக்கும் அறை குதிர் |
| பதி | ஒரு (அய்யாவழி) வழிபாட்டுத்தலம் |
| பய்ய / பைய | மெதுவாக, மெல்ல |
| பயறுவது | பயம் கொள்வது |
| பயினி | பனை பதநீர் |
| பரவர் | மீனவரிடையே இருக்கும் ஒரு சாதி வகை |
| பல்பனாபுரம் | பத்மநாபபுரம் |
| பல்லாரி உள்ளி | பெரியவகை வெங்காயம் |
| பலவஞ்சனம் | மளிகை, பலசரக்கு |
| பலிசை | வட்டி |
| பராதி | குறை, புகார் முறைப்பாடு |
| பரானம் | படபடப்பு |
| பரிகேடு / பரியடு | இழிவு கேவலம் அவமானம் |
| பறதல் | பழைய பொருட்கள் |
| பறதி | அவசரம், பதற்றம் |
| பாச்சா | கரப்பான்பூச்சி |
| பாஞ்சப்பழம் / பாஞ்சிப்பழம் | சீதாப்பழம் |
| பாம்பிரி | திண்ணை, வராந்தா |
| பாம்பு | குடிகாரன் |
| பாம்புராணி | அரணை, பாம்பரணை |
| பாரை | மீன்வகை |
| பாளயன்கொட்டன் | புளிப்பும் இனிப்பும் உடைய வாழைப்பழம் |
| பாறக்கோல் / பாரைக்கோல் | கடப்பாரை |

| குமரித் தமிழ்ச் சொல் (வழக்கு) | பொதுத் தமிழ்ச் சொல் |
|---|---|
| பிறுத்தி / புறுத்தி | அன்னாசி |
| பின்ன | அப்பறம், அப்போ |
| பின்னல்லாம?<br>பின்னல்லாதக்கி? | எரிச்சலோடு ஆமோதித்தல் |
| பியாத்தி | கத்தி |
| புட்டான் | தட்டான்பூச்சி |
| புள்ளியோ | சிறுபிள்ளைகள் |
| புள்ளோ | மகனே / மகளே செல்லமாக யாரையும் அழைப்பது |
| புளியமுத்து | புளியம்பழகொட்டை |
| புளியாணம் | ரசம் |
| புறத்தால / புறத்தோடி<br>பொறத்தால /<br>பொறத்தோடி | பின்னால், வெளிய |
| பூஞ்சட்ட / பூஞ்சட்டை | துடப்பம் செய்ய பயன்படும் ஒருவகை<br>மெல்லியபுல், மெல்லிய மயிர் |
| பூவெண்ணெய் | நறுமணம் சேர்த்த கூந்தல் எண்ணெய் |
| பிழாவு | பனை ஓலையால் மாவு உலர்த்தப் பயன்பொருள் |
| பின்ன | அப்புறம் |
| பெனஞ்சு | பிசைந்து |
| பெர / பெரை | அறை / பந்தல் / ஓய்வுக்கூடம் |
| பெறம | பிறகு / பின்னால் |
| பெஹளம் | அமைதியின்மை / கொந்தளிப்பு குழப்பம் |
| பேடு | பூச்சி அரித்த ஒரு மரத்தின் கெட்டுப்போன பகுதி<br>முதிராமல் கேட்டுப்போன தேங்காய் |
| பேயன்பழம் | வாழைப்பழத்தில் தடித்த வகை |
| பேயிட்டு / பேயிற்று | போய் விட்டுப்போ என்பது பே எனத் தரிந்தது |
| பைத்தாறன் / பைத்யாறன் | பைத்தியக்காரன் |
| பொக்கன் | சின்னம்மை நோய் |

| குமரித் தமிழ்ச் சொல் (வழக்கு) | பொதுத் தமிழ்ச் சொல் |
|---|---|
| பொடவு | பொந்து |
| பொடி உழவு | வெயில்காலஉழவு |
| பொத்தை | உடல்பருத்த, குண்டு தடித்த |
| பொதப்பு | போர்வை |
| பொழி தட்டல் / மறம் அடித்தல் | விளை நிலத்தை சமன்படுத்துதல் |
| பொறவு / பொறபு | பிறகு அப்புறம் |
| பொறத்தால | பின்னால் |
| போஞ்சி | எலும்பிச்சைபழ ரசம் |
| போட்டு | அதுபோகட்டும் கவலை கொள்ளாதே |
| பொடதி | பின் மண்டை |
| போணி | வாய் அகன்ற உயரம் குறைந்த பாத்திரம் |
| போயில | புகையிலை |
| மக்கள / மக்களே | செல்லமாக அழைப்பது |
| மருடம் | தப்பட்டை போன்ற மேளம் |
| மங்களா | வரவேற்பு அறை |
| மசை | இளம் பெண்டிரைக் குறிக்கும் கொச்சையான சொல் |
| மஞ்சுணாத்தி | மல்பரி |
| மஞ்சு | முக்கோண வடிவிலான சுவர் அமைப்பு |
| மட்டுப்பாவு / மட்டுப்பா | மாடி, உப்பரிகை மொட்டை மாடி |
| மட்டம் | தடவை |
| மட்டிப்பழம் | வாழைப்பழத்தில் ஒரு சிறிய வகை |
| மடி | சோம்பல் / மீன்வலை |
| மண்ணாந்தை | அறிவிலி, முட்டாள் |
| மண்டகனம் | தலைவலி + ஜலதோஷம் திமிர் |
| மண்டக்குத்து / மண்டயிடி | தலைவலி |
| மணக்கா சோப்பு | சவக்காரம், சலவை சோப்பு |

| குமரித் தமிழ்ச் சொல் (வழக்கு) | பொதுத் தமிழ்ச் சொல் |
|---|---|
| மணிக்கூர் | மணிநேரம் |
| மணிமேடை | மணிக்கூண்டு |
| மம்பெட்டி | மண்வெட்டி |
| மயினி | மாமன்பொண்ணு மனைவியின் அக்கா |
| மரக்கறி | காய்கறி |
| மரச்சீனிக்கிழங்கு | மரவள்ளிக்கிழங்கு |
| மல்லாரி | ஆர்ப்பரிப்பு, உரத்த ஓசையோடு பேசுதல் |
| மலித்து | கவுத்து |
| மற்றவன் / மத்தவன்<br>மற்றவள் / மத்தவள்<br>மற்றது / மத்தது<br>மற்றவரு / மத்தவரு | இங்கு இல்லாத இன்னொருவர் மூன்றாமவர் |
| மனசிலாகுதல் /<br>மனசிலாவுதல் | புரிதல் |
| மாப்பிள்ளைக்கு<br>இருந்தாச்சா? | பெண்ணுக்கு திருமணம் நடந்துவிட்டதா? |
| மாம்பட்டை | ஒருவகை நாட்டுச் சாராயம் |
| மாறி | அதற்கு பதிலாக, அதற்கு மாறாக ஆனால் |
| மிட்டாசு / மிட்டாஸ்<br>மிட்டாசி | மிட்டாய் |
| மிளா | கடாமான் |
| முக்கு | மூலை |
| முக்குவர் | மீனவர்களிடையே இருக்கும் ஒரு சாதி |
| முந்திரி கொத்து | இனிப்புப் பலகாரம் |
| முட்டாசு / முட்டாஸ்<br>முட்டாசி | மிட்டாய் |
| முடுக்கு | சந்து |
| முடை / மோடை | பின்னு |

| குமரித் தமிழ்ச் சொல் (வழக்கு) | பொதுத் தமிழ்ச் சொல் |
|---|---|
| முண்டு | வேட்டி |
| முறி | அறை |
| முத்தம் | முற்றம் |
| முள்ளன் | ஒரு சுறாமீன் வகை |
| முனை | பின்னு |
| மூடு | மரத்தின் வேரின் மேலே தெரியும் கனமான பகுதி |
| மூப்ளு | தகப்பன் |
| மேல / மேல் | மேற்கு |
| மைக்கோட்டி | கம்பளி பூச்சி |
| மொந்தன்பழம் | வாழைப்பழத்தில் ஒரு தடித்தவகை |
| மொரால் | மீன்வகை |
| மௌவுக்கா | மிளகாய் |
| மொளவாடி | மிளகாய்ப்பொடி என்பதன் மருவல் |
| மொளுதிரி | மெழுகுத்திரி என்பதின் திரிபு |
| மோந்தி | வந்தி, சாயுங்காலம் |
| மோட்டுவளை | வீட்டுக்கூரையின் உச்சிச் சேர்க்கைக்கு ஆதாரமாக வைக்கும் மரத்துண்டு |
| மோளே | செல்லமாய் (மகளே) |
| மோனே | செல்லமாய் (மகனே) |
| யாமுல / யாம்ப்ல | என்னடா |
| யானம் | பாத்திரம் |
| ரஸகதலிப்பழம் | வாழைப்பழத்தில் ஒரு சிறியவகை |
| லாந்தல் | மந்தமான வான்நிலை |
| லாமடி | உலைமூடி, மீன்கறி வைக்கும் மண்சட்டியின் மூடி |
| லாறி | லாரி |
| லெட்டு | பந்துமுனை பேனா |
| வச்சூத்தி | புணல் (Funnel) |
| வசக்குதல் | வதக்குதல் |

| குமரித் தமிழ்ச் சொல் (வழக்கு) | பொதுத் தமிழ்ச் சொல் |
|---|---|
| வசக்கேடு | வதக்குதல் |
| வசக்கேடு | வசதிகுன்றிய, அசௌகரியமான |
| வட்டி | பனை ஓலையால் ஆன பாத்திரம் |
| வட்டிலு | தட்டு |
| வட்டு | மாத்திரை |
| வண்ணம் | உடல் பருத்த குண்டு, தடித்த |
| வத்தல் / வற்றல் | காய்ந்த மிளகாய் |
| வந்தேட்டி / வரத்தேட்டி | வந்தேறி |
| வல்லச்சாதியும் | ஒருவழியாக |
| வழுதலங்காய் / வழுதனங்காய் | நீண்ட கத்திரிக்காய் / வழுதுணைக்காய் |
| வார்ப்பு | உயரம் குறைந்த மிகப்பெரிய பாத்திரம் |
| வார்ப்புச்சோறு | திருமணம் மற்றும் விழாக்களில் மிக அகண்ட பாத்திரத்தில் சமைத்த சோறு |
| வாரியல் | துடைப்பம் |
| வாலாம் | பாதாம் |
| வாலாமடை | பொறுக்கி, சுட்டி, ரவுடி |
| வாறா / வாறாங் / வாறாவ / வருவு | வருகிறாள் / வருகிறான் / வருகிறார்கள் / வருகிறது |
| விசர்ப்பு | வியர்வை |
| வியாளா | ஒரு வகைமீன் |
| விரவி | பிசைந்து / கலந்து |
| விலக்கு | ஊரின் எல்லை |
| விளம்பு | பரிமாறு |
| விளை, வெளை | விளை நிலம் / தோப்பு |
| விறவு | விறகு என்பதன் திரிபு |
| வீச்சம் | துர்நாற்றம், கெட்ட வாடை |
| வீத்து | ஊற்று |

| குமரித் தமிழ்ச் சொல் (வழக்கு) | பொதுத் தமிழ்ச் சொல் |
|---|---|
| வீதி | அகலகம் |
| வீடி | பீடி |
| வெக்கை | சூடு |
| வெசேல | வேகமாக |
| வெட்டு | வலிப்பு நோய் |
| வெட்டெடோத்தி/ வெட்டுக்குத்தி/ வெட்டுக்கத்தி | வெட்டருவாள் |
| வெடலை | இளநீர் |
| வெப்ராளம் | மனப்புழுக்கம் |
| வெறச்சிற்று / வெறச்சிட்டு | நின்றுவிட்டது |
| வெறையல் | நடுக்கம் |
| வெள்ளுள்ளி / வெளுத்துள்ளி / வெள்ளாஞ்ஞும் வெள்ளக்கூடு | பூண்டு |
| வெளக்குமாறு | துடைப்பம் |
| வெளிக்குபோறேன் | மலமிருக்க போறேன் |
| வேண்டுதல் | வாங்குதல் |
| வேளம் | பேச்சு |
| வேனாவெயில் | கடுமையான வெயில் |
| வைசூரி / வசூரி | பெரியம்மை நோய் |
| ஜெம்பர் / ஜம்பர் | இரவிக்கை |

மேற்கண்ட வழக்குச் சொற்கள் கன்னியாகுமரி மாவட்ட இனவரைவியல் நோக்கில் ஆராய்ந்தறியப்பட்டன.

தோப்பில் முகமது மீரான் படைப்புகளில் காணலாகும் இஸ்லாமியர்களின் இனவரைவியல் நோக்கில் கையாளப்படுகின்ற வழக்குச் சொற்களைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

| | | |
|---|---|---|
| அங்கரட்சன் | - | மெய்க்காப்பாளன் |
| அங்ஙகத்தை | - | நாயர் |
| அச்சிமார் | - | வைப்பாட்டி |
| அசர் | - | மாலை நேரத் தொழுகைக்கான நேரம் |
| அசறுப்பூ | - | நாலுமணிப்பூ |
| அடுப்பளி கருவி | - | அடுப்படி ஒழுகி |
| அத்தம் | - | கடைசி |
| அத்தர | - | அவ்வளவு |
| அத்தாளம் | - | இரவு உணவு |
| அதபு | - | ஒழுக்கம் |
| அதபு மாலை | - | ஒழுக்கம், புகட்டும் ஒரு கவிதை நூல் |
| அதிர்வேலி | - | எல்லை |
| அதைத்த | - | வீங்கிய |
| அந்த ஈக்குலை | - | அப்புறம் |
| அம்பலம் | - | கோயில் பிரகாரம் |
| அம்புடு | - | அவ்வளவு |
| அம்மாயி | - | மாமியார் |
| அம்மாவன் | - | தாய்மாமா |
| அம்மை | - | வைசூரி |
| அனுக்கத்து | - | பிறை வடிவக் காது ஆபரணம் |
| அவுலியா | - | இறைநேசர் |
| அனந்திரவன் | - | மருமகன் |
| அஸ்மா | - | மந்திரம் |
| ஆங்கியம் | - | சைகை |
| ஆசந்திரதாகும் | - | சூர்யசந்திரர் உள்ளவரை |

| | | |
|---|---|---|
| ஆத்தியம் | - | முதல் |
| ஆயத்து | - | வசனம் |
| ஆருவாமொழி | - | ஆரல்வாய்மொழி |
| ஆலிம் | - | பண்டிதன் |
| இசா | - | இரவு |
| இத்தி | - | கொஞ்சம் |
| இபுலீசு | - | நம்பிக்கைக்கு மாறானவன் (சாத்தான்) |
| இலாஹி | - | இறைவன் |
| இறக்குவாரி | - | சாய்வுத்தளம் |
| இள்ளான் | - | மனிதன் |
| இஸ்மு | - | மந்திரச்சொல் |
| ஈக்காம்பெட்டி | - | ஓலைப்பெட்டி |
| ஈடு | - | முறை |
| உடம்பறை | - | மரக்கட்டில் |
| உடாட்டான் | - | விடமாட்டான் |
| உப்புக்குற்றி | - | குதிகால் |
| உம்மும்மா | - | அம்மாவின் அம்மா |
| உறுமால் | - | தலைப்பாகை |
| உந்தாது | - | ஆசிரியர் |
| ஏபியன் | - | மடையன் |
| ஒக்கில் | - | இடுப்பில் |
| ஒசா, ஒளா | - | நாவிதர் |
| ஒசாத்தி, ஒலாத்தி | - | நாவிதப்பெண் |
| ஒசியத் | - | மரணவாக்குமூலம் |
| ஒடுக்கத்த | - | கடைசி |
| ஒயந்து | - | மேலே |
| ஒருக்கி | - | தயார் நிலை |

| | | |
|---|---|---|
| ஒலி | - | இறைநேசர் |
| ஒளு | - | கைகால் சுத்தம் |
| ஒமன | - | அழகு |
| ஒர்மை | - | நினைவு |
| கஃபத்துல்லா | - | மக்காவிலுள்ள பள்ளிவாசல் |
| கஃபன் | - | கூலத்தைச் சுற்றும் துணி |
| கக்குமடி | - | மடித்துக் கட்டிய வேட்டி |
| கச்சமுறி | - | பெண்கள் அணியும் சாயக்கச்சை |
| கசண்டி | - | வழுக்கை |
| கசவுதட்டம் | - | ஜரிகை முக்காடு |
| கூடுக்குப்பாயம் | - | கையால் பின்னப்பட்ட பெண்களுக்கான கூடை |
| கண்ணும்மா | - | பாட்டி |
| கபர் | - | அடக்கம் செய்யும் குழி |
| கழறு | - | சமாதி (கபர்) |
| கய்யால | - | மண்சுவர் |
| கரச்சல் | - | அழுகை |
| கரமொழிவு | - | தீர்வையில்லா |
| கல்பனை | - | உத்தரவு |
| கல்பு | - | இதயம் |
| கலிமா | - | மூலமந்திரம் |
| கலிமாவிரல் | - | சுட்டுவிரல் |
| கவணி | - | மேலாடை |
| களீக்கள | - | களியக்காவிளை |
| கறாம் | - | தீயவழி |
| கறுத்தவாவு | - | அமாவாசை |
| கஷாயம் | - | மருந்து |
| காஃபீர் | - | முஸ்திமல்லாத |

| | | |
|---|---|---|
| காக்கா | - | அண்ணா |
| காணும் | - | இருக்கும் |
| காய் | - | காசு |
| காயிதா | - | அரபு ஆரம்பப்பாடம் |
| காயிலான் | - | காயப்பட்டினம் |
| காறு | - | பஸ் |
| கிண்ணாரம் | - | கொஞ்சல் |
| கியாமம் | - | உலக முடிவு |
| கிஸ்ஸா | - | கதை |
| கிலம் | - | கீறி |
| குஃபு | - | பொருத்தம் |
| குச்சங்காளி | - | தேங்காய்ப்பிஞ்சு |
| குசால் | - | திருப்தி |
| குடவண்டி | - | தொப்பை |
| குதரத் | - | அற்புதம், ஆச்சரியம் |
| குப்பாயம் | - | சட்டை |
| குப்பாயம் போடுதல் | - | பெண்கள் மதம் மாறுதல் |
| கும்பி | - | வயிறு |
| குமிஞ்சாண் | - | சாம்பிராணி |
| குறுக்கு | - | முதுகு |
| குறைச்சல் | - | வெட்கம் |
| கெங்கேமம் | - | படாடோபம் |
| கெங்கேமன் | - | பிரமாதம் |
| கேத்தல் | - | கெண்டி |
| கைக்கும்பிள் | - | கைகளை இணைந்து |
| கைமடக்கு | - | ஊதியம் |
| கைவடி | - | கம்பு |

| | | |
|---|---|---|
| கைவெள்ளை | - | உள்ளங்கை |
| கைறு | - | நல்லது |
| கொத்தவா | - | ஜீம்ஆ |
| கொதும்பு | - | தென்னம்பாளை |
| கொப்பு | - | கிளை |
| கொப்புறா | - | காய வைத்த தேங்காய் |
| கொம்பானை | - | ஆண் யானை |
| கொஸறா | - | வேடிக்கை வசை |
| சக்கரம் | - | மணம் |
| சக்கைப்பூஞ்சி | - | பலாப்பழத்தோல் |
| சங்கடம் | - | மன வருத்தம் |
| சங்கு | - | குரல்வளை |
| சங்குறைப்பு | - | தைரியம் |
| சட்டம்பி | - | வம்புக்காரன் |
| சபூர் | - | அமைதி, பொறுமை |
| சம்சயம் | - | சந்தேகம் |
| சவுட்டி | - | மிதித்து |
| சாக்கரிசி | - | வெள்ளை அரிசி |
| சாந்திக்காரன் | - | பூசாரி |
| சாபுகள் | - | சாகிபுகள், பக்கீர்கள் |
| சாரம் | - | கைலி |
| சாலாமாலா | - | அரைகுறையாக |
| சாரிஹ் | - | இறைபக்தியுள்ள |
| சிபத் | - | சிறப்பு |
| சில்லீடு | - | சிறு தேங்காய் பறிக்கும் காலம் |
| சிலா வரிசை | - | சிலம்பு அடவு |
| சின்னமக்கா | - | சாயல்பட்டணம் |

| | | |
|---|---|---|
| சீதம் | - | நீர் உபாதை |
| சீலாந்திக்காதல் | - | வைரம் பாய்ந்த பூவரசு மரம் |
| சுப்ரா | - | உணவுப்பாய் |
| சுப்ஹீ | - | அதிகாலைத் தொழுகை, வைகறை |
| சுருமா | - | மை |
| சுறவு | - | முறம் |
| சுணுமா | - | கண்மை |
| செத்தை | - | வேலி |
| செம்மு | - | சொத்துரிமை |
| செமை | - | இருமல் |
| செல்லம் | - | தட்டு |
| செளி | - | சேறு |
| செறுக்கன் | - | சிறுவன் |
| சேசகாரி, சேஷகாரி | - | மருமகள் |
| சொச்ணம் | - | தங்கம் |
| சொஸ்ததை | - | அமைதி |
| தகனம் | - | ஜீரணம் |
| தகிப்பு | - | ஜீரணம் |
| தகிப்பு | - | குீரணம் |
| தட்சு, மச்சு | - | மாடி |
| தம்மானம் | - | சன்மானம் |
| தம்மு | - | மூச்சு |
| தலஸ்தானம் | - | தலைநகர் |
| தவ்பா | - | மன்னிப்பு |
| தறவாடு | - | குடும்பம் |
| தறுவா | - | நிலைமை |
| தஸ்பீஹ் | - | குறிப்பிட்ட எண்ணிக்கையில் மணிகள் கோர்த்த மாலை ஜெபமாலை |

| | | |
|---|---|---|
| தஹஜ்ஜத் | - | நடு இரவுத் தொழுகை |
| தாத்தா | - | அக்கா |
| தாப்ளா | - | தாழ்ப்பாள் |
| தாமசம் | - | வசித்தல் |
| தாள | - | கீழே |
| திகிர் | - | ஜெபம் |
| திக்று | - | சுகம் |
| திர்மீது | - | மாணவர் |
| தீப்பட்ட | - | இறந்த |
| துஆ | - | பிரார்த்தனை, வேண்டுதல் |
| துசி | - | சுத்தம் |
| துனியா | - | உலகம் |
| தெங்கம்புரயிடம் | - | தென்னந்தோப்பு |
| தெங்கின் | - | பாரேடம் |
| தேச்சியம் | - | கோபம் |
| தொங்கல் | - | கடைசி |
| தொடல் | - | சங்கிலி |
| தொம்புற, லெவிண்டி | - | வசைச்சொல் |
| தொளி | - | சேறு |
| தொறய | - | கடற்கரையில் மீனவர்கள் குடியிருப்புப் பகுதி |
| தோவட்டம் | - | இரண்டு ரூபாய் (சங்கேத மொழி) |
| தௌபா | - | மன்னிப்பு |
| நகரா | - | டமாரம் |
| நரிச்சீது | - | ஒரு சிறு பிராணி |
| நல்லப்பம் | - | முதலில் |
| நன்னி | - | நன்றி |
| நஜிஸ் | - | அசுத்தம் |

| | | |
|---|---|---|
| நிக்காஹ் | - | திருமணம் |
| நீக்கம்பு | - | காலரா |
| நீர்க்கோலி | - | தண்ணீர் பாம்பு |
| நுதுபா | - | விந்து |
| நுனைந்து | - | ருசித்து |
| நேட்டம் | - | லாபம் |
| நேமிசம் | - | வேண்டுதல் |
| படிக்கம் | - | எச்சில் உமிழும் பாத்திரம் |
| படிப்புரை | - | உட்புறவாசல் அறை |
| படுவல் | - | பணம் |
| பண்டு | - | பழைய காலம் |
| பத்திரி | - | பச்சரிசி மாவில் பொரித்த சீடை |
| பர்த்தா | - | கணவன் |
| பரக்கத் | - | ஐஸ்வரியம், பலன் |
| பரக்கத் நிஃமத் | - | ஐசுவரியங்கள் |
| பரணம் | - | ஆட்சி |
| பலாய்முசிபத் | - | துர்ஆவி, தொந்தரவு |
| பஹ்ரு | - | கூல் |
| பாச்சான் | - | கரப்பான் பூச்சி |
| பாட்டம் | - | குத்தகை |
| பாடில்லெ | - | முடியவில்லை |
| பாத்திஹா | - | பிரார்த்தனை |
| பாதிரா | - | நடுஇரவு |
| பாறுகலி | - | வசைச்சொல் |
| பிடாவ | - | பிடாகை |
| பீநாறி | - | நித்தியகல்யாணி |
| பீரை | - | சக்கை |

| | | |
|---|---|---|
| புட்டான் | - | பட்டாம்பூச்சி |
| புடவை கொடுத்தல் | - | திருமணம் |
| புரயிடம் | - | தோப்பு, நிலம் |
| புலுக்கு | - | வயதுக்கு வருதல் |
| பூசறமாவு | - | முகப்பவுடர் |
| பூத்த | - | புதைக்க |
| பூமுகம் | - | முன்னறை |
| பேடி | - | பயம் |
| பேமாரி | - | பெருமழை |
| பைத்து | - | பாடல் |
| பொதனாச்சி | - | புதன்கிழமை |
| பொழிமுகம் | - | கூடுதுறை |
| பொறுதி | - | வாழ்க்கை |
| பொன்னரைஞானம் | - | தங்க ஒட்டியாணம் |
| மாஅனா | - | பொருள் |
| மக்கத்தாயம் | - | மகன்வழி வாரிசுரிமை |
| மக்ரிபு | - | அந்தி நேரத் தொழுகை |
| மகமூறு | - | நல்லபடி |
| மட்டுப்பா | - | மொட்டை மாடி |
| மதி | - | போதும் |
| மதுரம் | - | இனிமை |
| மதுஹ் | - | புகழ் |
| மய்யத்து | - | பிணம் |
| மருமக்கத்தாயம் | - | மருமகன் வழி வாரிசுரிமை |
| மலக்கு | - | வானவர் |
| மலினம் | - | மாசு |
| மஅத் | - | மரணம் |

| | | |
|---|---|---|
| மறவணை | - | மணவறை |
| மனாபியத் | - | கனவு |
| மஹ்லிஸ் | - | ஓதுவிடம், சபை |
| மின்னல்ஹகிப் | - | பணம் |
| மிஸ்கின் | - | ஏழை, யாசகன் |
| முசாபா | - | தேசாந்திரி |
| முதல்கூடி | - | நாட்டாண்மை |
| முராது | - | பஜனையின் போது ஏற்படும் சீற்றம் |
| முரீது | - | சீடர் |
| முஸிபத் | - | கேடு |
| மூணாம்வேதம் | - | கிறிஸ்தவம் |
| மூனி | - | வெறும் |
| மைலாஞ்சி | - | மருதாணி |
| மைனி | - | அண்ணி |
| மொச்சை | - | நாற்றம் |
| மௌத் | - | மரணம் |
| மௌவலி, தங்கள் | - | மதப்பண்டிதர் |
| மௌலுது | - | நபி புகழ் பாடுதல் |
| யாசீன் | - | குரானின் ஒரு பகுதி |
| ரகுமானே | - | ஆண்டவனே |
| ரசூல், ரசூலுல்லா | - | முகமது நபி |
| ரப்பு | - | ஆண்டவன், இறைவன் |
| ரபீ உள் அவ்வல் | - | அரபு வருட 3 ஆம் மாதம் |
| ரபி உல் ஆகிர் | - | அரபு வருட 4 ஆம் மாதம் |
| ரஹ்மத் | - | அருள் |
| ரஜபு | - | அரபு வருட 7 ஆம் மாதம் |
| ராத்திபு | - | பஜனை |

| | | |
|---|---|---|
| ரூஹ் | - | ஆன்மா, உயிர் |
| ஹஅனத் | - | சாபம் |
| லந்தக்காரர்கள் | - | டச்சுக்காரர்கள் |
| லந்தர் | - | டச்சுக்காரர் |
| லாலன்தில்லா, லாவாதிகில்லா | - | வெறுப்பை உமிழும் வசைகள் |
| ளுஹர் | - | மதிய நேரத்தொழுகை, மதியம் |
| லைத்தர் | - | ரெஜிஸ்ட்ரார் |
| வஅரு | - | சொற்பொழிவு |
| வட்டம் | - | தடவை |
| வர்த்தமானம் | - | பேசுதல் |
| வலிய | - | பெரிய |
| வலும், மரச்சீலை | - | இடுப்பில் தொங்கும் காசுப்பை |
| வஹ்தாப்பாடு | - | உறுதி, வாக்குறுதி |
| வாங்கிட்டு | - | பாங்கு அழைத்து |
| வாசி | - | பிடிவாதம் |
| வாடை | - | கருகும் நாற்றம் |
| வாப்பும்மா | - | வாப்பாவின் அம்மா |
| வாயில்பாடி | - | காட்டன் பனியன் |
| வாரி | - | இறவானம் (சரைச்சாய்வு) |
| வாலாமடைச்சுழி | - | அதிர்ஷ்டமில்லாத |
| விலாயத் | - | அற்புதம் சிருஷ்டிக்கும் |
| விள்ளல் | - | விரிசல் |
| வெலவி | - | விலகி |
| வெள்ளக்குடிகள் | - | சீர்வரிசைப் பண்டம் |
| வேசாடை | - | கோபம் |
| வேப்பாணம் | - | யாழ்ப்பாணம் |
| வேளம் | - | பேச்சு, சொற்கள் |

| | | |
|---|---|---|
| வேளி | - | திருமணம் |
| ஜாயிசு, ஜாயிஸ் | - | பொருத்தம் |
| ஜின் | - | அமானுஷ்ய சக்தி, அமானுஷ்யர் |
| ஜோகம் | - | யோகம் |
| ஷஹீத் | - | வீரமரணம் |
| ஸமான் | - | காலம் |
| ஸீனத் | - | அழகு |
| ஹதீஸ் | - | சொற்பொழிவு |
| ஹமாறு | - | கழுதை |
| ஹமுக்கு | - | வசைச்சொல் |
| ஹயா | - | வெட்கம் |
| ஹயாத் | - | உயிர் |
| ஹராம் | - | விலக்கப்பட்டது |
| ஹறவா | - | நாசமாப்போன |
| ஹறறாம்பிறப்பு | - | முறைகேடான பிறப்பு |
| ஹாஜத் | - | ஆசை, விருப்பம் |
| ஹீருலீன் | - | சொர்க்கலோகத் தேவதைகள் |
| ஹீறி | - | தேவதை |
| ஹீநுலின் | - | சொர்க்கலோகத் தேவதைகள் |
| ஹைறு | - | மாதவிடாய் |

| | | |
|---|---|---|
| அம்பு | - | அண்டி |
| அளிமா | - | மந்திரம் |
| அஸ்ஸலாமு அலைக்கும் | - | சாந்தி உண்டாவதாக |
| அசர் | - | மாலை நேரம் |
| அடக்கத்தில் | - | ரகசியமாக |
| அடிச்சூட்டு | - | வீட்டின் பின்புறம் |

| | | |
|---|---|---|
| அரவணைப்பாடல் | - | தப்பாடல் |
| அலிப் முதல்லாம்மீன்வரை | - | அரசு எழுத்தின் ஆரம்பம் முதல் கடைசி வரை |
| அனுக்கத்து | - | காதணி |
| அவுலியா | - | இறை நேசம் கொண்டவர், அற்புதங்கள் சிருஷ்டிப்பவர் |
| அஆதுபில்லாஹ் | - | இறைவனிடம் பாதுகாவல் தேடுகிறேன் |
| அளி | - | மரச்சட்டம் |
| ஆகிரம் | - | மறுமை |
| ஆயத்துல்குர்ஸி | - | குர் ஆனின் ஒரு பகுதி |
| இல்மு | - | கல்வி |
| இஸ்மு | - | மந்திரச்சொல் |
| இபாகத்தாரி | - | பக்திமான் |
| இபுலீசு | - | சாத்தான் |
| இமாம் | - | தொழுகையை நடத்தி வைப்பவர் |
| இராபிச்சை | - | வெட்டிவேர் |
| இஷா | - | இரவுத்தொகை |
| ஈமான் | - | நம்பிக்கை |
| உப்பா | - | பாட்டனார் |
| உம்மா | - | அம்மா |
| ஊர் முதல் கூடி | - | ட்ரஸ்டி |
| எட்டு முஸல்லி | - | வாரம் ஒரு முறை தொழுபவர் |
| எத்துவாளி | - | ஏமாற்றுபவன் |
| எலப்பை | - | லெப்பை (குர்ஆன் பயிற்றுபவர்) |
| ஏழுபணம் | - | ஒரு ரூபாய் |
| ஒசா | - | நாவிதர் |
| ஒடுக்கத்து | - | கடைசியான |
| ஒளூ | - | உடல் சுத்தம் |

| | | |
|---|---|---|
| கஞ்சி பாத்திஹா | - | வளைகாப்பு |
| கத்தம் | - | குர்ஆனை முழுவதுமாக ஒருமுறை ஓதுதல் |
| கத்தீபு | - | இமாம் (சொற்பொழிவாளர்) |
| கள்ளிக்கோட்டை | - | கோழிக்கோடு |
| கசவுக்கவணி | - | இரிகைத்தாவணி |
| கபர் | - | சமாதி |
| கலம் | - | எழுதுகோல் |
| கலாத்தை | - | இறைநாமத்தை |
| கலிமா | - | அடிப்பமை மந்திரம் |
| கரைதல் | - | அழுகை |
| கறாமத் | - | அற்புதம் |
| காக்கா | - | அண்ணன் |
| காபிர் | - | முஸ்லிமல்லாதோர் |
| காபிரிச்சி | - | முஸ்லிமல்லாதப் பெண் |
| காருவா | - | காதிர் பாவா |
| கீதாபு | - | குர்ஆன் |
| கியாமம் | - | உலகம் அழிதல் |
| கிஸ்ஸா | - | கதை |
| குப்பாயம் | - | சட்டை |
| குதூறத்து | - | ஆச்சரியம் |
| குடை வண்டி | - | தொந்தி |
| கூப்பாணி | - | எச்சில் |
| கூசில் | - | கூஜாவில் |
| கொத்துபாபள்ளி | - | வெள்ளிக்கிழமை தொழுகை நடைபெறும் பள்ளிவாசல் |
| கொதும்பு | - | தென்னம்பாளை |
| கைமடக்கு | - | அன்பளிப்பு |
| சக்கரம் | - | திருவாங்கூர் நாணயம் |

| | | |
|---|---|---|
| சதாகாஅத் | - | எந்நேரமும் |
| சபராளி | - | பயணி |
| சபூர் | - | பொறுமை |
| சில்லீடு | - | குறைந்த அளவு தேங்காய் காய்க்கும் சீசன் |
| சிஹர் | - | சூனியம் |
| சீலெ | - | துணி |
| சீனாஅடி | - | கிராமிய சண்டைக்கலை |
| சுப்ஹீ | - | அதிகாலைத் தொழுகை |
| சுப்ஹானல்லாஹ் | - | இறைவன் தூயவன் |
| சுருமாக்கண் | - | மைதீட்டிய கண் |
| சுறாப்பீலி | - | சுறாமீன் இறக்கை |
| செம்புக்குட்டி | - | ஆட்டிறைச்சி |
| டாப் | - | சித்தா மருந்து பட்டியல் |
| தண்டாசு | - | கச்கூஸ் |
| தப்பளம் | - | தலையில் தேய்க்கும் மருந்து |
| தம்மானம் | - | அன்பளிப்பு |
| தம்மு | - | பீடி |
| தம்புரான் | - | இறைவன் |
| தர்சில் | - | பாடசாலையில் |
| தஸ்பீக் | - | எண்மணிக்கோர்வை |
| தாகத்துள்ளவன் | - | வசதி படைத்தவன் |
| திருட்டி | - | கண் |
| திக்கு | - | ஜெபம் |
| துஆ | - | பிரார்த்தனை |
| துன்யா | - | உலகம் |
| நன்னி | - | நன்றி |
| நகரா | - | கொட்டு(மேளம்) |

| | | |
|---|---|---|
| நாக்கன் | - | திருடனின் பெயர் |
| நிக்காஹ் | - | திருமணம் |
| நிரவு | - | மூடுபலகை |
| நிஹ்மத் | - | சிறப்பு |
| பத்தாயம் | - | பெரிய மரப்பெட்டி |
| மத்ரீன்கள் | - | பதர்ப்போர் வீரர்கள் |
| பகயா | - | கெட்டவனே |
| படச்சரப்பு | - | படைத்த இறைவன் |
| படிப்புரை | - | வீட்டின் உட்புறப்பகுதி |
| பறக்கத், நிஃமத் | - | ஐசுவரியங்கள் |
| பஹறில் | - | கடலில் |
| பாத்திஹா | - | இறந்தவர்களின் ஈடேற்றத்திற்கான வழிபாடு |
| பாம்படம் | - | தண்டட்டி (காதணி) |
| பார்வர் | - | நாவிதர் |
| பிஸ்மில்லா | - | இறைவன் பெயரால் |
| பிரமாணம் | - | பத்திரம், ஆவணம் |
| பூர்த்தி | - | புதைத்து |
| புத்தி அறிதல் | - | வயதுக்கு வருதல் |
| பெறக்கே | - | பின்னால் |
| பெரட்டம் | - | பிருஷ்டம் |
| பேசா | - | பேசுகிறாய் |
| மக்கத்து | - | ஏமக்கா மாநகரத்து |
| மஹஸர் | - | மறுமை |
| மதரஸா | - | குர் ஆன் பாடசாலை |
| மலர்கறி | - | காய்கறி |
| மறவணை | - | மணவறை |
| மாலிக் இப்னுதீனார் | - | மேற்கு கடற்கரைப் பகுதிகளில் இஸ்லாமிய போதனை செய்ய வந்த குழுவின் தலைவர் |

| | | |
|---|---|---|
| மஹசிபு | - | அந்திக்கருக்கல் |
| மிம்பர் | - | மேடை |
| முஃமீன் | - | நம்பிக்கையாளர் |
| முள்ளி | - | இடத்தின் பெயர் |
| முஸ்லியார் | - | மதப்பண்டிதர் |
| முனாபியத் | - | கனவு |
| முரீது | - | சீடர் |
| முஹல்லதீவு | - | மாலத்தீவு |
| முளிப்பான | - | அருவருப்பான |
| முஸீபத் | - | நோய், நொடி |
| மோட்டிச்சி | - | திருடி |
| மோதீனார் | - | பாங்கு அழைப்பவர் |
| மௌத்து | - | மரணம் |
| மௌலவி | - | மதப்பண்டிதர் |
| மௌலூது | - | நபி மீதான புகழுரை |
| யாசீன் | - | குர் ஆனின் குறிப்பிட்ட அத்தியாயம் |
| ரப்பு | - | இறைவன் |
| ரசூலுல்லாஹ் | - | முஹம்மது நபி |
| ரபீஉல்அவவல் | - | ஹிஜ்சி ஆண்டின் 3வது மாதம் |
| ராவு | - | இரவு |
| ரூஹானி | - | மானுட ஆவி |
| லுஹர் | - | மதிய நேரத் தொழுகை |
| லைத்தரு | - | ரெஹிஸ்ட்ரார் |
| வட்டா? | - | பைத்தியமா? |
| வல்லா | - | ஏதாவது |
| வலிய | - | பெரிய |
| வாப்பாண | - | தகப்பன் மீது ஆணை |

| | | |
|---|---|---|
| வாசிலாக்கி | - | வசப்படுத்தி |
| வாரி | - | ஏரவாணம் |
| விட்டை | - | காணம் |
| விலக்குதீர்த்து | - | சமாதானம் செய்து |
| விலாய் | - | தொந்தரவு |
| வேதக்காரன் | - | வெள்ளைக்காரன் (கிறிஸ்தவம்) |
| வேண்டீரிக்கி | - | வாங்கி இருக்கிறது |
| ஸஹ்பான் | - | ஹிஜ்ரி ஆண்டின் 8ஆவது மாதம் |
| ஸபூர் | - | பொறுமை |
| ஸமான் | - | காலம் |
| ஸஹன் | - | பெரிய பீங்கான் தட்டு |
| ஷஹீது | - | வீரமரணம் |
| ஜவாபு | - | பதில் |
| ஜனாஸா | - | சடலம் |
| ஜின்னு | - | அமானுஷ்ய சக்தி |
| ஜிம்ஆ | - | வெள்ளிக்கிழமை மதிய கூட்டுத்தொழுகை |
| ஹவ்ரு | - | உடல்சுத்தம் செய்யும் தடாகம் |
| ஹலாக் | - | சீரழிவு |
| ஹயாத்து | - | உயிர் |
| ஹலால் | - | அனுமதிக்கப்பட்டது |
| ஹமுக்கு | - | வசைச்சொல் |
| ஹராம் | - | விலக்கப்பட்டது |
| ஹராங்குட்டி | - | முறைகேடாகப் பிறந்தது |
| ஹால் | - | மனநிலை |
| ஹாழிறு | - | பிரசன்னம் (தோன்றுதல்) |
| ஹாஜத் | - | ஆசை |
| ஹைர் | - | திருப்தி |

*மேற்கண்ட வழக்குச் சொற்கள் யாவும் இஸ்லாமிய மக்களின் சமூகத்தில் பிறப்பு முதல் இறப்பு வரை உள்ள வாழ்வியல் பண்பாடுகளின் வழி பயன்படுத்தப்பட்டு வருவனவாகும்.*

*பொதுவாகவும் சிறப்பாகவும் மேற்கண்ட வழக்குச் சொற்கள் கண்டறியப்பட்டன.*

> நபிகள் நாயகம் இசுலாம் மார்க்கத்தை நிறுவிய காலக்கட்டத்தில் அராபியர்கள் இங்கே வந்தாலும் மன்னர் மாலிக் ஹபீப் அவர்களின் மகன் மாலிக் இப்னுதீனார் வந்த நிகழ்ச்சியிலிருந்து தென் கேரள இசுலாமிய வரலாறு ஆரம்பமாவதாகக் கொள்ளலாம். மாலிக், இப்னுதீனார் அவரது குடும்பத்துடன் இசுலாம் மார்க்க அறிஞர்களுடன் இரண்டு கப்பல்களில் கொடுங்கல்லூரில் வந்து இறங்கினார். இவர்கள் கொடுங்கல்லூரில் தங்கிய போது ஒரு பள்ளிவாசலைக் கட்டினர். கி.பி.**825**இல் நடந்த நிகழ்ச்சி. எனவே இந்தியாவில் கட்டப்பட்ட முதல் பள்ளி வாசல் இது.[56]

*சமகாலத்தில் இசுலாமிய சமயத்தைச் சார்ந்தவர்களின் எண்ணிக்கை 1.5 இலட்சத்திற்கும் அதிகம். குமரி மாவட்ட மக்கள் தொகையில் 5 விழுக்காட்டினைச் சார்ந்தவர்களை இசுலாம் சமயத்தைச் சார்ந்தவர்களாகக் குறிப்பிட வேண்டும்.*

*இசுலாமிய மக்களின் தனிமனித வாழ்க்கை, குடும்பம், உறவுகள், மதச்சடங்குகள், வாழ்வியல் முறைகள், கல்வி, பொருளாதாரம், அரசியல், சமூகச் சிக்கல்கள், இன்ன பிறவற்றின் வாயிலாக இசுலாமியச் சமூகத்தின் இனவரைவியல் கூறுகளையும், அவற்றின் வழிப் பெறப்படுகின்ற வழக்குச் சொற்களையும் ஆராய்ந்தறிய முடிகிறது.*

**தொகுப்புரை**

*இனவரைவியலும் வட்டார வழக்குகளும் என்னும் இயலில், இனவரைவியல் சொற்பொருள் விளக்கம் குறிப்பிட்ட மனித இனத்தின் ஒட்டுமொத்த வாழ்வியல் கூறுகளின் விளக்கங்கள் சுட்டப்பட்டன.*

*இனவரைவியல் குறித்த வரையறை பல்வேறு அறிஞர்களின் விளக்கங்கள் சொல்லப்பட்டன. ஒரு குறிப்பிட்ட மனித சமூகத்தில் மேற்கொள்ளப்படுகின்ற களப்பணி என்பது குறிப்பிடப்பட்டன.*

இனவரைவியல் கூறுகள் இலக்கியம், இனவரைவியல் ஒப்பீடுகள், இலக்கியமும் வாழ்வியலும் இலக்கியங்களில் காலந்தோறும் இனவரைவியல் பதிவுகள் கண்டறியப்பட்டன.

மானிடவியல் தோற்றம், வளர்ச்சி, கருவுற்ற காலம் முதல், வளர்ச்சியுற்ற காலம், மேலைநாட்டாரின் விளக்கங்கள், இந்தியாவில் மானிடவியல் வளர்ச்சி, களஆய்வு பற்றியும் குறிப்பிடப்பட்டன.

ஆய்வு எல்லை வரையறையில் முகமது மீரானின் படைப்புகள் உள்ளடக்கிய குமரி மாவட்டத்தின் வரலாறு, தொல்பொருள் ஆய்வு, கால ஆராய்ச்சி சுருக்கம், பிற புள்ளிவிபரங்கள் தொகுத்தறியப்பட்டன.

வட்டார வழக்கு, தமிழ் வட்டார மொழி வழக்குகள், வகைகள் எடுத்தாய்ந்து வட்டார வழக்குகள், வரலாறு, வகைப்பாடுகள் கண்டறியப்பட்டு முகமது மீரானின் படைப்புகளில் காணலாகும் வழக்குச் சொற்களும், பொது, சிறப்பு வகையால் அட்டவணைப்படுத்தப்பட்டன.

சிறப்பாக இஸ்லாம் மக்களின் வழக்குச் சொற்கள் விளக்கமும் பட்டியலிடப்பட்டன.

ஆய்வின் எல்லைக் கருதி இனவரைவியலின் சுருக்கமும், நிறைவு இயலான இஸ்லாமியர் சமுதாய வாழ்வியலும் பண்பாடும் என்னும் இயலில் விரிவாகவும் ஆராயப்பட உள்ளன.

## **சான்றெண் குறிப்புகள்**

1. ***வாழ்வியல் களஞ்சியம், தொகுதி 4,*** *ப.561.*
2. **Tamil Lexicon, Vol.1**, ப.339.
3. ***கழகத் தமிழகராதி,*** *ப.127.*
4. *கதிரைவேற்பிள்ளை,* ***தமிழ் மொழி அகராதி,*** *ப.243.*
5. ***தமிழ்-தமிழ் அகராதி,*** *ப.150.*
6. *பாவலர் பாலசுந்தரம்,* ***இலக்கணக் கலைச்சொல் விளக்க அகராதி.***
7. *அ.ச.ஞானசம்பந்தன்,* ***இலக்கியக் கலை,*** *ப.5.*
8. ***நன்னூல்,*** *நூ.141.*
9. *அ.ச.ஞானசம்பந்தன்,* ***இலக்கியக் கலை,*** *ப.3.*
10. *சூளாமணி, ப.459.*
11. *தமிழவன்,* ***இலக்கியக் கருத்தாடல்,*** *ப.136.*
12. *புதுமைப்பித்தன்,* ***புதுமைப்பித்தன் கட்டுரைகள்,*** *ப.2.*
13. *கா.சு.பிள்ளை,* ***தமிழிலக்கிய வரலாறு,*** *ப.6.*
14. *மு.வ.,* ***இலக்கியத்திறன்,*** *பக்.44-45.*
15. *அ.ச.ஞானசம்பந்தன், மு.கு.நூ., ப.15.*
16. R.Lenin, **Problem of Literature,** p.159.
17. *அ.ச.ஞானசம்பந்தன், ப.24.*
18. *மேலது.,*
19. *சி.மௌனகுரு,* ***கலை-இலக்கியம்-பண்பாடு,*** *ப.10.*
20. *எஸ்.வையாபுரிப்பிள்ளை,* ***இலக்கியச் சிந்தனைகள்,*** *பக்.23-25.*
21. *மு.வ., மு.கு.நூ., ப.49.*
22. T.K.Penniman, **A Hundred Years of Anthropology,** p.9.
23. E.E.Evans-Pritchard, **A History of Anthropologied Thought,** p.3.
24. David E. Hunter and Phillip Whitten, **Encyclopaedia of Anthropology,** p.135.
25. Makhan Jha, **An Introduction to Anthropological Thought,** p.2.
26. *மேலது., ப.3.*
27. *மேலது.,*
28. *மேலது.,*

29. மேலது., ப.4.

30. James P.. Lechtenberger, **Development of Social Theory,** p.45.

31. A.C.Das, **An Introduction to the Study of Society,** p.66.

32. L.P.Vidyarthi, **The Rise of Social Anthropology in India,** pp.159-182.

33. Theresa Bane, **Encyclopedia of Imaginary and Mythical Places,** p.91.

34. Ramaswamy, pp.104-108 (http:/books/google...).

35. மேலது.,

36. இராமச்சந்திர தீட்சிதர், **தமிழரின் தோற்றமும் பரவலும்,** http.books

37. http:/books.google.com.in/books.

38. மேலது.

39. Ramasamy, மு.கு.நூ., pp.105-106.

40. கந்தபுராணம், 879, அண்டகோசப்படலம், 47.

41. C.Brito, **Curiosities of Tamil Literature,** pp.98-102.

42. Ramasamy, மு.கு.நூ., p.105

43. மேலது.

44. ஞா.தேவநேயப்பாவாணர், **தமிழ் வரலாறு (முதல் தொகுதி),** பக்.2-10.

45. தொல். சிறப்புப் பாயிரம்.

46. புறம்.6:67.

47. கலித்.104.

48. சிலம்பு.11:17-22.

49. புறம்., பா.9:9-11.

50. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.1194.

51. பெருமாள் முருகன், **அகராதி,** ப.15.

52. கமில்ஸ்வெலபில், ஜனவரி 1962 எழுதிய தமிழின் வட்டார மொழிகள் கட்டுரையில் இருந்து, ப.219.

53. செட்டிநாட்டு வட்டடார வழக்குச் சொல் அகராதி, பார்த்த நாள், சூன் 1, 2015.

54. தொல். எச்சவியல், நூ.58.

55. மேலது., நூ.883.

56. அ.கா.பெருமாள், **தென்குமரியின் கதை,** பக்.273-274.

## இயல் 4

# இசுலாமியர் சமுதாய வாழ்வியலும் பண்பாடும்

குமரி மாவட்ட இசுலாமியர் வாழ்வியலை சமூகவியல் நோக்கில் அணுகும் போது சமுதாயம், சமுதாயத்தின் அங்கமாகத் திகழும் நிறுவனம். அவற்றுள் ஒன்றான சமயம், சமுதாயக் கட்டமைப்பு, குடும்பம், வாழ்வியல் முறைகள், உறவு நிலைகள் , இவற்றோடு தொடர்புடைய வாழ்வியல் நம்பிக்கைகள், தொழில் முறைகள், கல்வி, பொருளாதாரம், வழிபாட்டின் இன்றியமையாமை, அரசியல், மரபு ரீதியான வரலாறு போன்ற இசுலாமியர் சமூகத்தில் காணப்படுகின்ற வாழ்வியல் பண்பாட்டுக் கூறுகளைத் தோப்பில் முகமது மீரான் படைப்புகள் முதன்மை ஆதாரமாகக் கொண்டு, குமரி மாவட்ட சமுதாய மக்களிடையே கள ஆய்வு அணுகுமுறைகளிலும் இவ்வியல் ஆராயப்படுகின்றது.

**சமுதாயம்**

தனிமனிதர்களையும் (individuals) பல்வேறு அமைப்புகளையும், நிறுவனங்களையும், குழுக்களையும், துணைக் குழுக்களையும் தன்னகத்தேக் கொண்ட ஓர் அமைப்பாகச் சமுதாயம் விளங்குகிறது. பொதுவாக உடற்கூறியல்புகளையும், பொதுவான விருப்பங்களையும் (Common interests), பொதுவான வாழ்க்கை நோக்கங்களையும் (common mode of life) பொதுவான விதிகளையும் கொண்டுள்ள உறுப்பினர்களை ஒன்றிணைக்கும் சிறியதும், பெரியதும் நிரந்தரமானதுமாகிய அமைப்பைச் சமுதாயம் என்று கூறலாம். மேலும் குறிப்பிட்ட எல்லைக்குள் (Specified territory) வாழ்கின்ற மக்களால் மேற்கொள்ளப்பெறும் உட்செயல்களின் (interactions) அனைத்து முறைகளையும் சமுதாயம் என்று கூறலாம் என்ற விளக்கமும் உள்ளது. ஒரு சமுதாயமானது தனிப்பட்டவர்களின் கட்டமைப்பு உரிமை மற்றும் ஒற்றுமை உணர்வு. ஏகதேசம் நிரந்தர இயல்பு முதலான சிறப்புத் தன்மைகளைக் கொண்டுள்ளதெனச் சமூகவியலாளர்கள் கருதுகின்றனர்.

**நிறுவனங்கள்**

சமுதாயம் பல்வேறு நிறுவனங்களைத் தன்னகத்தேக் கொண்டு திகழ்கின்றது. இந்நிறுவனம் குறித்துச் சமூகவியலாளர் அளிக்கும்

> விளக்கங்கள் சிலவற்றைக் குறிப்பிடுதல் தகும். ஒழுக்க பூர்வமானதாகவும் சமூகப் பூர்வமானதாகவும் நிர்ணயிக்கப் பெற்றவை எனக் கருதத்தக்க சமூக நடவடிக்கைகளின் சாதாரண முறையே நிறுவனம் ஆகும்.[1]

> நிலைத்து நிற்பதும் அமைக்கப் பெற்றதும், நிறுவப் பெற்றதும் சமுதாயத்தின் ஒன்று அல்லது பல சிக்கல்களைத் தீர்க்கும் ஒழுங்குமுறைகளைக் கொண்டதுமாகிய ஒன்றே நிறுவனம் எனப்படும்.[2]

*பொதுவாக மிக நீண்ட காலமாக நிறுவப் பெற்றதையும், சமூகத்தால் அங்கீகரிக்கப் பெற்றதையும் நிறுவனம் என்று கருதலாம். இந்நிறுவனங்கள் இன்றியமையாச் சமூகச் செயல்களைச் சுற்றியெழும் சமூக நியமங்களின்* (Social norms) *ஒழுங்கு முறைகள் எனக் கருதப்பெறுகின்றன.*

*ஒரு சமுதாயத்தைப் பற்றிய ஆய்வினை மேற்கொள்ளப் புகுவோருக்கு முதன் முதலில் நிறுவனங்களைப் பற்றிய அறிவு இன்றியமையாது தேவைப்படுகின்றது என்ற சிந்தனையைச் சமூகவியலாளர்கள் வெளிப்படுத்துகின்றனர். அத்தனை அளவுக்கு நிறுவனங்களின் செயல்பாடுகள்* (functions) *சமுதாயத்தில் அமைந்து காணப்பெறுகின்றன எனலாம். இக்காரணம் பற்றியே நிறுவனங்களைச் சமுதாயத்தின் கட்டப்பட்ட கூட்டங்கள்* (building blocks of society) *என வருணிப்பதாகத் தோன்றுகிறது. இந்நிறுவனங்கள் சிறப்புறச் செயல்படுவதன் மூலம் சமுதாய அமைப்பினை* (Social structure) *சிதறவிடாது கட்டிக் காக்கும் அரும்பணியைச் செய்கின்றன. இவ்வாறு சமுதாயத்தில் இயங்கி வரும் நிறுவனங்களுள் ஒன்றாக இசுலாமியர்களின் சமுதாய வாழ்வியலும் பண்பாடும் ஒன்றாகத் திகழ்கிறது.*

*சமுதாயம் என்பது மனித இனம் கூடி வாழ்கின்ற கூட்டமைப்பு ஆகும். இச்சொல்லினைத் தெளிவுப்படுத்துமிடத்து,*

> ஒவ்வொரு மனிதனும் ஏனைய மனிதர்களுடன் கொண்டிருக்கின்ற சிக்கலான சமூக உணர்வுகளைத் தான் சமூகம் என்கிறோம்[3]

*எனலாம்.*

*சமுதாயம், சமூகம் என்ற இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று ஒற்றுமையுடையது. இதனைக் கூட்டமாகக் கூடி வாழ்கின்ற இடத்தையும் பல*

*இனத்தவரின் தொகுப்பையும் குறிப்பதாகும். சமுதாயம் என்பது குறித்து அ.ஜெயக்குமார் குறிப்பிடும் இடத்து,*

> சமுதாயம் என்பது ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் வாழும் மனித இனத்தவர் தங்கள் தேவைகளை நிறைவு செய்து கொள்ள ஏற்படுத்திக் கொண்ட ஒரு கூட்டமைப்பு, மனிதன் கூட்டமைப்பின் உறுப்பினர் என்ற முறையில் அவன் நடத்தை செயல்கள் சமுதாயத்தின் நடைமுறைகள், விதிமுறைகள் ஆகியவற்றிற்குக் கட்டுப்பட்டுள்ளான். மனிதன் தன் பிறப்பு முதல் இறப்பு வரையில் உள்ள தங்களின் குழந்தைப் பருவம், இளமைப் பருவம், முதுமைப் பருவம் போன்ற நிலைகளுக்கு ஏற்ப தன் பழக்க வழக்கங்களை ஏற்படுத்திக் கொண்டு வாழ்கிறான்[4]

*என்பார்.*

*வாழ்வின் ஒவ்வொரு செயல்பாட்டிலும் மனிதன் இன்னொருவரையோ, இயற்கையையோ சார்ந்து வாழ வேண்டியிருக்கிறது. மனிதனின் கூடி வாழும் இயல்பே சமுதாயம் ஆகும்.*

> மனித ஊடாட்டங்களையும், உறவுகளையும் அவற்றின் நிலைகளையும், விளைவுகளையும் பற்றிய அறிவியல் தொகுப்பே சமூகவியல் என்று தெளிவைத் தருகிறார். எனவே சமூகம் என்பது மனிதர்களுக்கிடையே மற்றும் சமூகம் நிறுவனங்களுக்கிடையே ஏற்படும் உறவுகளைப் பற்றிக் கூறுவதாகும்[5]

*எனலாம்.*

**சமூகப் பார்வையின் தன்மைகள்**

1. *சமூக ஆய்வு சமூக இயல் நிகழ்வைப் பற்றிய அறிவினை முறையாகப் பெறும் தன்மையை உடையது.*
2. *சமூக ஆய்வான மனிதர்களுடைய ஒழுகலாறு உள்ளுணர்ச்சிகள், பதில்கள் மற்றும் மனப்பான்மைகள் எவ்வாறு உள்ளது. மாறுபட்டச் சூழலில் மேற்கூறியத் தன்மைகள் எவ்வகையில் மறுக்கப்படுகிறது என்பதை அறியச் செய்யும் தன்மை உடையதாகும்.*
3. *சமூக ஆய்வானது புதிய மெய்ம்மைகளைக் கண்டுபிடிப்பதற்குப் பழைய மெய்ம்மைகளைத் திருத்தியயைமப்பதற்கும் பயன்படுகிறது.*

4. *சமூக ஆய்வு சமூக நிறுவனங்களைப் பற்றித் தெரிந்து கொள்ள உதவுகிறது.*
5. *சமூக ஆய்வானது மனிதனின் பலதரப்பு நடவடிக்கைக்கு இடையே நிகழும் தற்செயலான உறவுகளைக் கண்டுபிடிப்பதற்குப் பயன்படுகிறது.*
6. *சமூக ஆய்வு மெய்ம்மைகள் தனிமைப்படுத்திப் படிக்கப்படுவதில்லை. மற்ற மெய்ம்மைகளுடன் எவ்வாறு தொடர்பு கொண்டு வினாக்களை உருவாக்குகிறது.*

*என்பதையும் அறியப் பயன்படுகிறது என்பர். மொத்தத்தில் சமூக உறவு அனுமானங்களைச் சோதிக்கிறது. மேற்கண்டவாறு சமூகப் பார்வையாளர் கருத்து அமைந்துள்ளன. இவ்வடிப்படையில் சமூகத்தின் தாக்குதலுக்கு ஆளான சமுதாயம், வறுமை, சமுதாயத்தில் சாதியப் பாகுபாடு, பெண்ணியம் முதலானக் கூறுகள் சமூக விழுமியக் கூறுகளாக அமைந்துள்ளதை தெளியலாம்.*

**சமூகவியலும் இலக்கியமும்**

> சமூகத்தை அறிவியல் நோக்குடன் ஆராய்வது சமூகவியலாகும். தனிமனிதன் தன்னுடைய தேவைகளுக்காகவும் பாதுகாப்புக்காகவும் சமூகத்தோடு கூடி வாழ்கிறான். அதனால்தான் அரிஸ்டாட்டில் மனிதனை 'சமூகப்பிராணி'[6]

*என்றார். அதனடிப்படையில்தான் மாரிஸ்கின்ஸ்பெர்க் என்னும் சமூகவியல் அறிஞர்,*

> சமூகம் என்பதற்கு, மனித உறவுகள் பின்னிப் பிணைந்துள்ள குழுமம்[7]

*என்று விளக்கம் தருகிறார். ஆகவே தனிமனிதன் சமூகத்தோடு கொண்டிருக்கிற உறவுகளையும் சமூகம் தனிமனிதனுக்கு எத்தகைய நெறிகளைக் (Norms) கற்றுத் தருகிறது என்பதையும் சமூகவியல் தெளிவாக ஆராய்கிறது.*

> சமூகவியல் மனித ஒழுகலாறு சம்பந்தமானது. தனிமனிதனையும் மனித சமுதாயத்தையும் ஆராய்வதையே சமூகவியல் முக்கிய குறிக்கோளாகக் கொண்டுள்ளது[8]

*என்கிறார் க.கைலாசபதி.*

> சமூகவியல் (sociology) சமூக நிறுவனங்கள் அமைப்புகள் போன்றவற்றில் மக்கள் எவ்வாறு அமையப் பெற்றுச் செயல்படுகின்றனர் என்றும் அவர்களின்

> நடத்தை அக்குழுவினுள் அல்லது நிறுவனங்களுக்குள் எவ்வாறு செயல்படுகின்றது என்றும் ஆராய்ந்து அறிந்து கூறுவதாகும்[9]

*என்றும் மேலும் கூறுகிறார்.*

> சமூகவியல் சமூகத்தைக் குழுக்களாகப் பகுத்து ஒவ்வொரு பகுதியையும் முழுமையாக ஆராய முற்படுகின்றது. சான்றாகக் குடும்பம், பல்வேறு குழு அமைப்புகள் நாடு போன்ற பிரிவுகள் அடிப்படையில் சமூகவியல் சமூகத்தினை ஆராய்கின்றது[10]

*என்னும் கருத்து ஒப்புநோக்கத்தக்கதாகும்.*

*சமூகவியல் தனிமனிதனையும் சமுதாயத்தையும் புற நிலையாக நின்று அறிவியல் நோக்குடன் ஆராய்கிறது. இவ்வாராய்ச்சியில்,*

1. *சமயம்*
2. *பொருளாதாரம்*
3. *அரசியல்*
4. *குடும்பம்*

*முதலிய சமூக நிறுவனங்களும் அவற்றின் உட்கூறுகளான நடைமுறைகள், நம்பிக்கைகள், வழக்காறுகள் முதலியவையும் இடம்பெறுகின்றன. இவற்றினுடைய செயற்பாடுகளையும் சமூகவியல் ஆராய்கிறது.*

*மேற்கண்ட சமூகக் கூறுகளாக சட்ட திட்டங்கள், நடைமுறைகள், விதிகள் ஆகியவற்றிற்கேற்பத் தனிமனிதன் தன்னுடைய நடத்தை, எண்ணங்கள் ஆகியவற்றை இயல்பாக அமைத்துக் கொள்ளும் முறை சமூக மயமாதலாகும்.*

> தனிமனிதன் தான் வாழும் சமூகத்தில் உறுப்பினனாக எடுத்துக் கொள்ளும் முயற்சி - பயிற்சி - இதனைச் சமூகமயமாதல் என்று குறிப்பிடலாம்[11]

*என்கிறார் ஒரு சமூகவியலறிஞர்.*

*மனிதன் தன்னுடைய நடத்தை மாற்றங்களுக்காக மட்டும் சமூகத்தோடு தொடர்பு கொள்ளவில்லை. ஆளுமை வளர்ச்சி உருவாகிறது. பண்புநலன்கள், பழக்க வழக்கங்கள், உளப்போக்கு போன்ற ஆளுமைத் தன்மைகள் சமூகமயமாதலினால் உருவாகின்றன.*

*இவ்வாறு, மனிதன் சமூக உறுப்பினராக அமைந்து ஆளுமைத் தன்மைகளைக் கற்றுக் கொள்ளப் பண்பாடு துணை செய்கிறது.*

**பண்பாடு - சொற்பொருள் விளக்கம்**

*மனிதனை விலங்கினின்று வேறுபடுத்துவது பண்பாடு எனப்படும். இப்பண்பாடு காலத்திற்குக் காலம் நாட்டுக்கு நாடு, இனத்திற்கு இனம் வேறுபடும். ஒரு நாட்டின் பெருமைக்கு சிறப்புக் காரணம் அங்கு வாழும் மக்களின் பண்பாடுதான் என்பதை,*

நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவராடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே[12]

*என்னும் ஔவையாரின் பாடல் சுட்டுகிறது.*

*பண்பாடு என்னும் சொல்லாட்சி பண்டைய தமிழ் இலக்கியங்களில் காணப் பெறவில்லை. ஆயின் பண்பு என்ற சொல்லும் 'பாடு' என்ற சொல்லும் தமிழ் இலக்கியங்களில் பயின்று வந்துள்ளன. 'பண்பு' என்னும் சொல் நல்லியல்பு எனப் பொருள்படும். பாடு என்னும் சொல்லிற்குச் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி முப்பத்து மூன்று பொருள்களைத் தருகிறது. அவற்றுள் முறைமை செவ்வி, பயன், உலக ஒழுக்கம், குணம் என்னும் பொருள்கள் பண்பாட்டுடன் தொடர்புடையனவாகும்.*

*பண்பாடு என்னும் சொல் வழக்கு அண்மைக் காலத்தது எனினும் அச்சொல் குறிக்கும் பொருள்கள் பழந்தமிழ்ப் பாடல்களில் பல்கி வந்துள்ளன.*

பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்[13]

*பண்படுதல் பண்பாடு ஆகும். பண்பாடு என்னும் சொல் பண்படு எனும் வினையடியாகப் பிறந்தது. பண் என்ற சொல்லுக்குப் பொதுவாக இசை, உருவாக்குதல், செய்தல் முதலானப் பொருள்கள் அமைந்துள்ளன.*

பண் என்னாம் பாடற்கு இயைபின்றேல் பண்என்னாம்
கண்ணோட்டம் இலாத கண்[14]

பண்பாடு என்றால் இசைந்து ஒழுகுதல் என்று பொருள் கொள்ளுதல் பொருத்தமாகின்றது. பலர் ஒன்று சேர்ந்து இசைந்து வாழும் வாழ்க்கையைப் பண்பட்ட வாழ்க்கை என்றும் அவர்களைப் பண்பட்ட மக்கள் என்றும், அவ்வாறு இசைந்து ஒழுகுதலைப் பண்பாடு என்றும் கொள்ளுதல் பொருந்தும்.

பண்படுவது பண்பாடு ஆகும். பண்படுதல் என்பது சீர்ப்படுதல் எனவும், பண்படுத்தல் என்பது சீர்ப்படுத்தல் எனவும் பொருள்படும். நிலத்தை விவசாயத்திற்கு ஏற்றவாறு செப்பம் செய்வது பண்படுத்தல் எனப்படும்.

> பண்பாடு என்ற சொல்லுக்கு ஆங்கிலத்தில் Culture என்ற சொல் பயன்படுத்தப்படுகிறது. Culture என்பது 'எண்ணங்கள், உணர்வுகள், மதிப்பீடுகள், குறிக்கோள்கள், செயல்முறைகள், இயல்புகள் முதலான பல்வேறு எண்ணற்ற தன்மைகளை உள்ளடக்கியது[15]

என அமெரிக்கக் கலைக்களஞ்சியம் பொருள் தருகின்றது. பண்பாடென்பது பரம்பரையான நல்ல குடித்தன்மையாலும் பிறரிடம் வேறுபாடு காணாத நல்ல ஒழுக்கத்தாலும் பொருந்த அமைவதாகும் என்று சமூக அறிவியல் கலைக்களஞ்சியம் குறிப்பிடுகிறது. பண்பாடு என்பது மனிதன் சமுதாயத்தில் ஓர் உறுப்பினன் என்ற நிலையில் அறிவு நம்பிக்கை, அறவாழ்க்கை, சட்டம், வழக்கங்கள் பற்றிப் பெற்ற ஒருவித வாழ்க்கை முறையாகும் என்பர் டெய்லர். ஒரு சமுதாயத்தின் மக்கள் வாழ்க்கை நடத்தும் நெறி முறை பற்றியதே பண்பாடு ஆகும் என்பர் கார்லைஸ்.

இவ்வாறு ஆங்கிலம் மற்றும் தமிழ் அகராதிகளும், அறிஞர் பெருமக்களும் பண்பாடு என்னும் சொல்லிற்குரிய விளக்கங்களை அளித்திருக்கின்றனர். இவற்றின்வழி பண்பாடு என்னும் சொல் ஆழ்ந்த நுண்ணிய பொருண்மையை உணர்த்தும் ஒரு சொல் என்பதை அறியமுடிகின்றது.

முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனிநா கரிகர்[16]

பெயக்கண்டும் நஞ்சுண்டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டுபவர்[17]

மேற்கண்ட சிந்தனைகளும் ஒப்புநோக்கத்தக்கனவாகும்.

சங்க காலத்தில் பண்பாடு என்னும் சொல் வழக்கில் இல்லாவிட்டாலும் அப்பொருள் குறித்து நாகரிகம், பண்பு, சால்பு ஆகிய சொற்கள் வழக்கிலிருந்தன. இன்று பெரும்பான்மையும் நாகரிகம், பண்பாடு ஆகிய இரு சொற்களும் ஒரு பொருளைக் குறிக்கப் பயன்பட்டாலும் இரண்டிற்கும் இடையே நுட்பமான வேறுபாடு உள்ளது. பண்பாடு உள்ளத்தோடு தொடர்புடையது. உள்ளத்தின் செம்மை உயர்வு பண்பாடு எனத் தகும். உள்ளத்திற்குப் புறம்பான உணவு, உடை, உறையுள் ஆகியவற்றின் செம்மை நாகரிகம் ஆகும். பண்பாடு என்பது பழக்கவழக்கங்களோடு நெருங்கிய தொடர்புடைய ஒரு வாழ்க்கை முறை, வாழ்க்கை நெறி முறையின் வெளிப்பாடு நாகரிகம் எனப்படும். புறத்தோற்றத்தில் ஏற்படும் வளர்ச்சி நாகரிகம் என்றால் அகப் பண்புகளிலே சிறந்து விளங்குவது பண்பாடு ஆகும்.

## குமரி மாவட்ட இசுலாமியர் அறிமுகம்

இசுலாமியர் என்னும் சொல் இசுலாம் மதத்தைத் தழுவிய மக்களைக் குறிப்பிடுகிறது. இந்தியத் துணைக் கண்டம் முழுமையிலும் இசுலாமியர்கள் பரவலாக வாழ்கின்றனர். சமயம் ஒன்றாக இருந்துவரினும் இசுலாமியர்கள் இந்தியத் துணைக் கண்டத்து ஏனைய மக்களைப் போலவே பல்வேறு மொழி பேசுபவர்களாகவும், பல்வேறு பண்பாட்டுக் கூறுகளைக் கொண்டவர்களாகவும் அமைகின்றனர். சமயம், அனைத்து மொழி பேசும் இசுலாமியர்களுக்கிடையே ஓர் ஒற்றுமைத் தோற்றுவித்தாலும் இசுலாமியர்களுக்குள்ளேயும் வேறுபட்ட இனக்குழு அடிப்படையிலான பண்பாட்டு வேறுபாடுகளையும் இனங்காண முடியும். சமண சமயம் இன்று இல்லாவிடினும் இம்மாவட்டத்தில் வளமான பழைமையைக் கொண்டிருந்தது. இப்பழமையை வரலாறு எடுத்துரைக்கிறது. சமகால வாழ்வில் அதன் எச்சங்களையும் இம்மக்கள் வாழ்வில் இனங்காண முடியும்.

பெரும் சமயங்களைப் போலவே சிறு தெய்வ வழிபாடும் இம்மாவட்டத்தில் முக்கியத்துவம் பெற்றுள்ளது. இசுலாம், கிறித்தவம் போன்ற சமயங்களைப் பிற்காலச் சமயங்களாகக் குறிப்பிட வேண்டும். இச்சமயத்தைச் சார்ந்த மக்கள் பெரும்பான்மையினரும், புதிய மதத்திற்குப் பழம் சமயம் ஒன்றிலிருந்து மதம் மாற்றம் மூலம் வந்தடைந்தவர்களாகவே அமைவர். இந்தியத்

*துணைக்கண்டத்து ஏனைய மக்களைப் போலவே இம்மாவட்டத்து மக்களும் பல்வேறு இனக்குழுக்களைச் சார்ந்தவர்களாகவே அமைகின்றனர். இவர்கள் பண்பாட்டைக் காலம் காலமாகத் தொடர்ந்து வரும் இனக்குழு மரபுகள் தீர்மானிக்கின்றன. இனக்குழுக்களைப் போலவே, சமயங்களும் பண்பாட்டின் மீது செல்வாக்கினைச் செலுத்துகின்றன. இனக்குழு கூறுகளும் சமயக் கூறுகளும் பண்பாட்டில் இரண்டறக் கலந்துள்ளன.*

*திருவிதாங்கூர் அரசு இந்தியா விடுதலை பெறும்வரை தனி அரசாகவே திகழ்ந்தது என்றாலும், ஆங்கிலேயரின் மேற்பார்வைக்கு உட்பட்ட அரசாகத் திகழ்ந்தது. குமரி மாவட்டம் திருவிதாங்கூரின் பகுதியாக அமைந்தது. திருவிதாங்கூர் மன்னர்களின் பழைய தலைநகரம் இம்மாவட்டத்தின் மையத்தில் இருந்தது. எல்லா அரசியல் நிகழ்வுகளும் இம்மாவட்டத்தில்தான் நிகழ்ந்தன.*

> குமரி மாவட்ட இசுலாமிய மக்கள் தங்கள் சமயம் மிகப் பழங்காலந்தொட்டே இம்மண்ணில் நிலை கொண்டு விட்டதாக நம்பிக்கை கொண்டுள்ளனர். நபிகள் நாயகம் இசுலாம் சமயத்தைத் தோற்றுவித்து ஒரு நூற்றாண்டிற்குள்ளாகவே இசுலாம் சமயம் இம்மண்ணை வந்தடைந்து விட்டது என உரிமை கோருகின்றனர். அண்ணல் நபி (ஸல்) இசுலாத்தை போதித்த சிறிது காலத்திலேயே இசுலாத்தின் தத்துவங்களை ஏற்றுக் கொண்ட புண்ணிய பூமியாகக் குமரி மாவட்டம் திகழ்கிறது.[18]

*இத்தகைய போக்கு குமரி மாவட்டத்தில் மட்டுமல்லாது தமிழகம் முழுமையும் இனங்காணப்படுகிறது.*

> தென் இந்தியாவில் இசுலாம் சமயத்தின் பரவலை மூன்று காலக்கட்டங்களைச் சார்ந்ததாகக் குறிப்பிட வேண்டும். இசுலாம் சமயம் தோன்றுவதற்கு முன்பாகவே அரேபியர்கள் தென் இந்தியக் கடற்கரையில் வணிகத்தின் பொருட்டு வாழ்ந்திருக்க வேண்டும். தொல்காப்பியம் மரபியலில் ஒட்டகத்தின் பிள்ளைப் பெயரைச் சுட்டுகிறது.[19]

*மேலும் சங்க இலக்கியத்தில் இரண்டு பாடல்களில் ஒட்டகம் என்ற விலங்கு இடம்பெறுகிறது. ஒட்டகம் இயற்கையில் தென் இந்தியாவை வாழும் இடமாகக் கொண்டதல்ல, பாலைவனப் பகுதியை வாழும் இடமாகக் கொண்டது. அங்கிருந்து வந்த மனிதர்களால் ஒட்டகம் தமிழ்நாட்டிற்குக் கொண்டு வரப்பட்டிருக்க வேண்டும். ஒட்டகத்தைக் கொண்டு வந்த மனிதர்கள் தமிழகக்*

*கடற்கரையில் குடியேறி வாழ்ந்திருக்க வேண்டும். கடற்கரையில் சிதைந்து கிடக்கும் தோணிக்கு ஒட்டகம் உவமையாக்குவதைக் குறிப்பிட வேண்டும். எனவே சங்ககாலக் கூட்டத்திலேயே அரேபியர்கள் இந்தியத் துணைக் கண்டத்தின் தென்பகுதிக்கு அறிமுகமானவர்களே. ஆனால் இக்காலக்கட்டத்தில் அரேபியாவில் இசுலாம் தோற்றம் கொண்டிருக்கவில்லை.*

*19 ஆம் நூற்றாண்டின் மத்தியில் திருவிதாங்கூரில் இசுலாம் சமயம் நிலை பெற்றுவிட்டது.*

> திருவிதாங்கூரில் 1861 அளவில் 62638 முசுலீம் மக்கள் வாழ்ந்தனர். இவர்கள் துலக்கர், மாப்பிள்ளை, மேத்தன் என அழைக்கப்பட்டனர். துலுக்கர் என்ற சொல் Turky என்பதிலிருந்து வந்தது. மாப்பிள்ளை என்பது அராபியர்கள் கேரளத்துப் பெண்களை மணந்ததன் காரணமாக வந்தது. மேத்தன் என்பது மெக்காவில் உள்ள ஆண் என்பதைக் குறிக்கும். திருவிதாங்கூரில் 1870 அளவில் 254 மசூதிகள் இருந்தன[20]

*என்று சாமுவேல் மேட்டீர் கூறுகின்றார்.*

*திருவிதாங்கூரில் இசுலாம் சமய மக்களின் தொகையும் அவர்களின் பள்ளிகள் எண்ணிக்கையும் இசுலாம் சமயம் இம்மண்ணில் நன்றாக வேரூன்றிவிட்ட நிலையைக் குறிக்கின்றன.*

> நபிகள் நாயகம் இசுலாம் மார்க்கத்தை நிறுவிய காலக்கட்டத்தில் அரேபியர்கள் இங்கே வந்தாலும் மன்னர் மாலிக் ஹபீப் அவர்களின் மகன் மாலிக் இப்னுதீனார் வந்த நிகழ்ச்சியிலிருந்து தென் கேரள இசுலாமிய வரலாறு ஆரம்பமாவதாகக் கொள்ளலாம். மாலிக், இப்னுதீனார் அவரது குடும்பத்துடன் இசுலாம் மார்க்க அறிஞர்களுடன் இரண்டு கப்பல்களில் கொடுங்கன்னூரில் வந்து இறங்கினர். இவர்கள் கொடுங்கன்னூரில் தங்கிய போது ஒரு பள்ளிவாசலைக் கட்டினர். கி.பி.825இல் நடந்த நிகழ்ச்சி. எனவே இந்தியாவில் கட்டப்பட்ட முதல் பள்ளிவாசல் இது.[21]

*எனவே கி.பி.825ஐ இசுலாம் தென்னிந்திய மண்ணை வந்தடைந்த காலக்கட்டமாகக் குறிப்பிட வேண்டும். கொடுங்கன்னூரில் தங்கிய குழுவினைச் சார்ந்த மாலிக் முகமது திருவிதாங்கூர் மண்ணை வந்தடைந்த போது இசுலாம் இம்மண்ணை வந்தடைந்திருக்க வேண்டும். கி.பி. 16 ஆம் நூற்றாண்டில் இசுலாம் மன்னர்களின்*

*படையெடுப்பு நிகழ்ந்த காலத்தில் இசுலாம் சமயம் பரவலாக்கப்பட்டிருக்க வேண்டும். 1792-ஐச் சார்ந்த திவான் வெற்றி என்னும் கதைப்பாடல் திப்பு சுல்தான் படையெடுப்பின் போது நிகழ்ந்த மதமாற்றத்தையும், அதன் சூழலையும் குறிப்பிடுகிறது. குமரி மாவட்டத்தைச் சார்ந்த பல பள்ளிகள் 300 முதல் 700 ஆண்டு வரையிலான பழமையைக் கொண்டவை என்பதும் குறிப்பிடத்தக்கது.*

*கி.பி.19 ஆம் நூற்றாண்டின் இசுலாம் சமயத்தவரின் மக்கள் தொகை பெருமளவு அதிகரிப்பதன் காரணம் புதிய மதமாற்றம் இக்காலக்கட்டத்தில் நிகழ்ந்திருப்பதை உறுதிப்படுத்துகிறது.*

> சாதிக் கொடுமையிலிருந்து விடுபடுவதற்குத் தாங்களாகவே இச்சமயத்தை ஏற்றுக் கொண்டவர்களும் உண்டு. பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஏராளமான மீனவர்களும், பிற தாழ்ந்த சாதியினரும் இசுலாமிய சமயத்திற்கு மாறினர்.[22]

*ஐ.வி.பீட்டர், பீட்டர் ஆகியோர் மீனவர்களும் தாழ்த்தப்பட்ட சாதியினரும் இசுலாம் சமயத்திற்கும் பெருமளவு மதம் மாறியதைப் பதிவு செய்துள்ளனர். உயர் சாதியினர் இசுலாம் சமயத்திற்கு மதம் மாறியப் பதிவுகளைக் கவனத்தில் கொள்ள வேண்டும். எனவே இம்மாவட்டத்தில் இசுலாம் சமயத்தின் தோற்றம், மற்றும் வளர்ச்சிக்காக வேறுபட்ட காரணங்கள் சுட்டப்பட்டாலும் திருவிதாங்கூரின் சாதி அமைப்பு முக்கியக் காரணமாக அமைகிறது எனலாம்.*

**இசுலாம் சமய மக்களின் வாழ்வியல் நிலைகள்**

*சமகாலத்தில் இசுலாமிய சமயத்தைச் சார்ந்தவர்களின் எண்ணிக்கை 1.5 இலட்சத்திற்கும் அதிகம். குமரி மாவட்ட மக்கள் தொகையில் 5 விழுக்காட்டினைச் சார்ந்தவர்களை இசுலாம் சமயத்தைச் சார்ந்தவர்களாக உள்ளனர். இவர்களுக்கே உரிய தனித்த தொழில் ஒன்றைச் சுட்ட இயலாது.*

> இசுலாமியர் கடுமையான உழைப்பில் நம்பிக்கை கொண்டவர்கள். இவர்களில் பெரும்பான்மையோர் வாணிபத்தில் ஈடுபட்டுப் பெரும் பொருளீட்டினர்.[23]

*சாதி அமைப்பில் வணிகம் அனைத்துச் சாதியினருக்கும் உரித்தானது. இசுலாமிய மக்களும் வணிகத்தில் ஈடுபட்டிருந்தாலும் மிகப் பெரும்பான்மையோர் சிறு வணிகர்களாகவே உள்ளனர். வணிகத்தில் ஈடுபட்டுள்ள பிற இனத்தவர்களோடு*

ஒப்பிடும் போது, இசுலாமிய வணிகர்கள் எண்ணிக்கையில் மட்டுமல்ல முதலீட்டிலும் குறைவாகவே உள்ளனர்.

இசுலாமிய சமயத்தின் ஒரு பகுதியினர் கைத்தொழில் செய்பவர்களாக உள்ளனர். பாய்முடைதல், நெசவு போன்ற தொழில்கள் இன்று இவர்களுக்கே உரித்தானவையாக அமைகின்றன. பாய் பயன்படுத்துவோர் எண்ணிக்கை நாகரிக வளர்ச்சியில் வேகமாக குறைவதன் காரணமாக இவர்கள் வாழ்க்கை நிலை போராட்டத்திற்கு உரியதாக அமைகிறது. துணி நெசவு இசுலாமிய மக்களின் கைத்தொழிலாக இருந்த காலமும் உண்டு. ஆனால் இன்று, இம்மக்கள் இத்தொழிலிலிருந்து வெளியேற்றப்பட்டுள்ளனர். நெசவுத் தொழில் செய்யும் வேறுபட்ட குழுக்களுக்கிடையே புரிந்துணர்வு இருந்தாக வேண்டும். இசுலாமிய மக்கள் சமய அடிப்படையில் தனித்தியங்கியது இத்தொழிலைக் கைவிட்டதற்குக் காரணமாகும்.

அண்டை மாவட்டமான திருநெல்வேலியிலும் இம்மக்கள் நெசவுத் தொழில் செய்து வந்தவர்களாக இருந்துள்ளனர்.

> இம்மக்களின் பிரதான தொழில் நெசவுத் தொழிலாக இருந்து வந்தது. பலதரப்பட்ட மக்கள் இசுலாத்தை ஏற்றுக் கொண்டு தொடர்ந்து தங்கள் தொழிலைச் செய்து வந்தனர். இங்குள்ள மக்கள் 'திரை கடல் ஓடியும் திரவியம் தேடு' என்ற தமிழ் முதுமொழிக்கேற்ப கடல் வாணிபம் செய்து வந்தனர். துணி வியாபாரம் குறிப்பாக, சாரம், துண்டு போன்றவற்றை நெய்து வந்தனர். இரண்டாம் உலகப் போர் இவர்களது பர்மா வாணிகத்திற்கு முற்றுப்புள்ளி வைத்தது. குண்டு வீச்சிற்குப் பயந்து சொத்துக்களை விட்டுவிட்டுக் கால்நடையாகவே இந்திய மண்ணிற்கு வந்து சேர்ந்தனர்.[24]

திருநெல்வேலி மாவட்டத்தில் இரண்டாம் உலகப் போரின் போது சிங்கப்பூர், பர்மா நாடுகளுடனான வணிகம் நடைபெற்றபோது முசுலீம் மக்களின் நெசவுத் தொழிலில் பெரும் பின்னடைவு ஏற்பட்டதாகத் தெரிகிறது.

> அக்காலக் கட்டத்தில் சிறப்புற்றிருந்த நெசவுத் தொழிலும் விசைத்தறி வருகை, நூல் விலையேற்றத்தால் நலிவுறத் தொடங்கியது. சந்தையும் அடைபடவே நெசவுத் தொழில் முற்றிலுமாக நசிந்தது.[25]

விடுதலைக்குப் பின் நெசவுத் தொழிலில் ஏற்பட்ட பின்னடைவுகளைச் சரி செய்யக் கூட்டுறவுச் சங்கங்கள் தோற்றுவிக்கப்பட்டன. கூட்டுறவு விற்பனை மையங்களும் தோற்றம் கொண்டன. ஆனால், கூட்டுறவு இயக்கம் முசுலீம் இன மக்களிடையே வேரூன்றவில்லை. தங்களுக்குத் தெரிந்த கைத்தொழிலை இம்மக்கள் இழக்கும் நிலை ஏற்பட்டது. இதனால் வணிகம் ஒன்றையே சார்ந்திருக்க வேண்டிய கட்டாயமும் தோற்றம் கொண்டது.

மத்திய கிழக்கு நாடுகளில் எரிபொருள் கண்டுபிடிக்கப்பட்டுப் பொருளாதார வளர்ச்சி தோற்றம் கண்டபோது, இம்மக்கள் மத்திய கிழக்கு நாடுகளில் வேலை வாய்ப்பினைப் பெறும் கனவை வளர்த்துக் கொண்டனர். இரண்டாம் உலகப் போருக்கு முன் கிழக்கிந்தியத் தீவுகளில் வணிகர்களாகச் சென்றவர்களைப் போல் அரேபிய நாடுகளுக்கு வேலையாட்களாகச் செல்லத் துவங்கினர். கைத்தொழிலில் ஏற்பட்ட பின்னடைவை ஓரளவு இது ஈடு செய்தது. எனினும், முழுமையான தீர்வாக அமைய வில்லை. முசுலீம் இன மக்கள் விவசாயம் உட்பட உடல் உழைப்பைச் சார்ந்த தொழிலை இம்மாவட்டத்தில் ஒரு போதும் மேற்கொண்டிருக்கவில்லை.

கேரளா - கூலித் தொழில்

திருநெல்வேலி - பீடி கட்டும் தொழில்

கன்னியாகுமரி - பாய்முடைதல்

மேற்கண்டவாறு சிறுபான்மையாகக் குடும்பம் முழுமைக்குமான தொழிலாக அமைகிறது. பெரும்பான்மையான முசுலீம் பெண்கள் தொழில் அற்றவர்களாகவே வாழ்கின்றனர். இந்நிலை சமூக வாழ்வில் அவர்களின் பின்னடைவுக்குக் காரணமாக அமைகின்றது.

## தோப்பில் முகமது மீரான் படைப்புகளில் சமுதாயப் பண்பாட்டுத் தாக்கங்கள்

சமூக வகுப்புகள் என்ன என்பது பற்றிச் சமூகவியலாளர்கள் அளிக்கும் விளக்கங்கள் சிலவற்றைக் காணுதல் அவசியமாகும். சமூக வகுப்புகள் (Social Classes) என்பன சமுதாயத்தின் சிறுபகுதி மக்கள் உயர்நிலை வகித்துக் கொண்டு முழு நன்மைகளைப் பெறுவதையும், பெரும்பகுதி மக்கள் தாழ்நிலை வகித்துக்

கொண்டு மிகக் குறைந்த அளவு நன்மைகள் பெறுவதையும் இவ்விரு நிலைகளுக்கும் இடைப்பட்ட நிலையில் வாழ்பவர்கள் இடைப்பட்ட அளவு நன்மைகள் பெறுவதையும் குறிப்பனவாய் அமைகின்றன.

> சொத்துரிமை, பொருள்கள் வரும் வருவாய் போன்றவற்றால் கிடைக்கப் பெறும் வாழ்க்கை வாய்ப்புகளைப் (Life chances) பகிர்ந்து கொள்ளும் மக்கட் கூட்டமே சமூக வகுப்பு எனப்படும்.[26]

சமுதாயக் கொடைகளின் (Social rewards) சமனற்ற பகிர்வின் வெளிப்பாடுகளாகச் சமூக வகுப்புகள் அமைகின்றன. மார்க்க சமூக வகுப்புகள் வறுமை மற்றும் கருவிகள், இயந்திரங்கள், நிலங்கள் போன்ற உற்பத்திக் காரணிகள் ஆகியவற்றால் சமூக வகுப்புகள் தீர்மானிக்கப் பெறும் என்ற கருத்தைக் கூறுகின்றார்.

> சமுதாயத்திலுள்ள பொருளாதாரச் சலுகைகளை (economic privilege) அதிகமாகவோ, குறைவாகவோ பகிர்ந்து கொள்ளும் மக்களின் வரிசைகளைக் குறிப்பனவாகவும் சமூக வகுப்புகளைக் கருதலாம்.[27]

இவ்விளக்கங்களை நோக்கும் போது சமூக வகுப்புகள் பொருளாதார நிலையை அடிப்படையாகக் கொண்ட மக்கட் பிரிவினை எனப் பொதுவாகக் கூறலாம்.

1. உற்பத்தி அமைப்பில் மக்கள் வகிக்கும் இடம்
2. உற்பத்திக் கருவிகள் பால் அவர்கள் கொண்டுள்ள உறவு முறைகள்
3. உழைப்பில் அவர்கள் செலுத்தும் பங்கு
4. வருமானத்தை அவர்கள் பெறும் முறைகள்

மேற்கண்டவற்றால் ஒவ்வொரு மனிதனும் ஒவ்வொரு வர்க்கத் தட்டைச் சார்ந்தவனாகிறான்.

மக்களின் வாழ்க்கையைத் தீர்மானிப்பதில் பொருளாதாரக் காரணிகளும், சுற்றுப்புறச் சூழல்களும் பெரும்பங்காற்றுகின்றன. மேலும் வகுப்புகளின் தோற்றத்திற்கு அடித்தளமாக அமைவதும் பொருளாதார ஏற்றத்தாழ்வுகளே ஆகும்.

தனியார் உரிமையினால் நாளடைவில் ஏற்றத்தாழ்வுகள் உருவாயின. புராதனச் சமுதாய அமைப்பு (Primitive society) சிதைவுற்று நாகரிகச் சமுதாய அமைப்பு தோற்றம் பெற்றது. நாகரிகச் சமுதாய அமைப்பில்,

1. ஏழை பணக்காரன்
2. ஆளுவோன்

3. ஆளப் பெறுவோன்
4. ஆண்டான் அடிமை
5. சுரண்டுவோன்
6. சுரண்டப் பெறுவோன்

என்ற பிரிவுகள் தோன்றலாயின. மேலும் சமுதாய வளர்ச்சியின் பல்வேறு காலக்கட்டங்களில்

1. அடிமையுடைமை அமைப்பு
2. நிலவுரிமை அமைப்பு
3. முதலாளித்துவ அமைப்பு

போன்ற பல்வேறு சமுதாய அமைப்புக்கள் உருவாகவே பொருளாதார ஏற்றத்தாழ்வுகளும் வளர்ச்சியுற்றன. மேற்கண்டவற்றின் வாயிலாக புராதனச் சமுதாய அமைப்பின் சிதைவில் எழுந்த நாகரிகச் சமுதாய அமைப்பின் தோற்ற நிலையில்தான் சமுதாயத்தில் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் தோற்றம் பெற்றன எனலாம்.

ஒரு சமூகத்தின் பொருளாதாரம் சமூக உறுப்பினர்களின் வேலை வாய்ப்பினைப் பொறுத்தே அமைகிறது. இசுலாம் இனமக்களில் மிகச் சிறுபான்மையினரே பெரும் வணிகர்களாக உள்ளனர். இவர்களுடைய பொருளாதார நிலை குறிப்பிடும்படியாய் அமைந்துள்ளது. சிறு வணிகர்களாக உள்ள பெரும்பான்மையோர் வாழ்க்கைச் செலவிற்கான பொருளை மட்டுமே ஈட்டுபவர்களாக இருக்கின்றனர். எதிர்காலச் சேமிப்போ, வேறு வகையிலான முதலீடுகளோ இவர்களுக்கு இல்லை. இவர்களுடைய எதிர்காலம் பாதுகாப்பற்றதாகவே உள்ளது. அரேபிய நாடுகளில் வேலை செய்பவர்களின் குடும்பப் பொருளாதார நிலை குறிப்பிடும்படியாக அமைந்துள்ளது. ஆனால் ஒரு தனிமனிதன் பெரும் சுற்றத்தைப் பாதுகாப்பவனாக வாழும்படியான கட்டாயம் உள்ளது.

இசுலாம் இன மக்கள் தங்கள் முதலீடுகளை வீடு கட்டுவதிலும் வாகனங்களை வாங்குவதிலும் பெருமளவு செலவிடுகின்றனர். ஒரு வகையில் சமய நம்பிக்கை இதற்குக் காரணமாக அமைகின்றது. வெளியில் காணமுடிகிற இந்த

*ஆடம்பர வாழ்வு அவர்கள் பொருளாதார நிலையைக் குறிப்பதல்ல. பொருளாதாரத்தில் பின்னடைந்த சமுதாயமாகவே இச்சமூகம் காணப்படுகிறது.*

*தோப்பில் முகமது மீரான் தன்னுடைய படைப்புகளில் முசுலீம் மக்களின் சமுதாய வாழ்வியலில் இடம்பெறுகின்ற பொருளாதாரச் சிந்தனைகளைப் பல்வேறு கூறுகளில் எடுத்துக்காட்டுகிறார்.*

> விடிந்தால் பெருநாள் என்ற உண்மை தையற்காரர்களைத் திக்கு முக்காட வைத்தது. தைக்காத துணிகளைப் பார்த்து அவர்கள் மலைத்துக் கொண்டிருந்தனர். தையற்காரர்களின் கால்கள் தையல் இயந்திரங்களை அதிவேகமாக மிதித்தன. வேகமாகச் சுற்றிய சக்கரத்துக்கு ஈடுகொடுத்து ஊசி ஏறி இறங்கியவாறு இருந்தது. தைத்த துணிகள் வேகமாக ஓடிக் கொண்டிருந்தன[28]

*'விளக்கு' என்னும் கதையில் குமரி மாவட்ட மக்களின் தொழில்முறைகளையும் நெசவுத் தொழில், தையல் தொழில் முறைகளையும் முசுலீம் மக்களின் பொருளாதார நிகழ்வுகளையும் அன்றாட வாழ்க்கை நிலைகளையும் எடுத்துக் காட்டுகிறார்.*

> ஒரு நாளைத் தள்ளி நீக்குவதென்றால் ஒரு மலையை உந்தித் தள்ளி வைக்கிற சிரமமும் சாகசமும் என்னைப் பொறுத்தவரை.
>
> ஒரு பாய் முடைந்தால் கிடைப்பது ஒரு ரூபாய். ஆனால் ஒரு பாய் முடைவதற்கு மூன்று தினங்களாவது வேண்டாமா ?
>
> இந்த ஒரு வருமானம் மட்டுமே இப்போது எங்களுக்கிருக்கிறது. இதைக் கொண்டுதான் இரண்டு வயிற்றைக் கழுவ வேண்டும் . . .[29]

*பவர்க்காரி என்னும் கதையில் இம்மக்களுக்கு வருமானம் என்பது பாய்முடைதல் தொழில் அவற்றின் வழி வருவாய் நிலைகள் போன்றவைகள் காட்டப்படுகிறது.*

> குறைந்த விலையிலா ? ஊஹீம் அதிகமான விலையில் நீ ஆச்சரியப்படும்படி வாங்கிக் கொண்டு வந்து காட்டுறேன் . . . நடுக்கடலில் மரத்துக்கு மேல் நின்று கொண்டிருக்கிறோம் என்ற நினைவு வந்த போது கையில் தூண்டிற் கயிற்றை நினைத்தான். கயிற்றில் சிக்கிக் கொண்டு வலிமை காட்டும் பெரிய மீனை நினைத்தான். தன்னை மறந்த நிலையில் வீணாய்க் கழிந்து போன நேரத்தை நினைத்தான் . . .[30]

*மேற்கண்டதில் 'மீன்பிடி' தொழில்முறை சுட்டப்படுகிறது. அத்தொழிலின் வழி நடக்கும் அன்றாட வாழ்வில் மற்றும் சமுதாய நிலைகளையும் படைப்பாசிரியர் கண்முன்னே நிலைநிறுத்துகிறார்.*

*'கறவை தீர்ந்த மாடு' என்னும் கதையில் முசுலீம் மக்கள், பீடி சுற்றும் தொழில் செய்வதைத் தத்ரூபமாகக் காட்சிப்படுத்துவதோடு பொருளாதார சிந்தனைகளையும் எடுத்துக் காட்டுகிறார்.*

> ஒருத்தி பீடி சுற்றி எத்தனைப் பேரைக் காப்பாற்றுவது! அவள் மனம் புறுபுறுத்தது. மூத்தது பெண் ஏழு வயது. பள்ளிக்கூடமோ மதரசாவோ அனுப்ப முடியவில்லை. பீடியின் வாய் அமுக்கித் தருவாள் அவள். அவள் உடனிருந்தால் பத்து பீடி அதிகம் சுற்ற முடியும் . . .[31]

*மைமூன் பெண் கதைமாந்தர் மடியிலிருந்து பீடித்தட்டை எடுத்து மாற்றி வைத்தாள். எழும்பினாள். வீட்டிற்குள் சென்றாள். குழந்தைகளின் உடலைத் தொட்டுப் பார்த்தாள். வேர்க்கவில்லை. எப்படி வேர்க்கும் பசித்துக் கிடக்கவர்களுக்கு எப்படி வேர்க்கும். மேலும் பீடித்தட்டை எடுத்து மடியில் வைத்தாள். பீடி சுற்றத் தொடங்கினாள். வாரம் ஒன்றுக்கு இருபத்தைந்து ரூபாய் பீடி சுற்றுவதால் கிடைக்கும் இந்த வருமானம் தான் உண்டு. இதைக் கொண்டுதான் ஆறு ஏழு வயிறு நிரம்ப வேண்டும். மானத்தையும் மறைக்க வேண்டும். உடுத்தியதை மாற்றி உடுக்க வேறு வழியில்லை என்ற சமூக அவலநிலைகள் பொருளாதாரம், வறுமை நிலை போன்றவற்றைக் கண்முன் காட்டுகிறார்.*

> வெள்ளிக்கிழமை மத்தியானம் கொல்லம்மாவின் (முந்திரி மரம்) கீழ்த் தலைமுடியை அவிழ்த்து நிற்கும் அழகியைப் பலரும் கண்டு பயந்ததுண்டு. அவர்களில் சிலர் மூன்றாவது நாளும், ஏழாவது நாளும் … விளைந்த தேங்காய் வெட்டுவதற்கோ, பனையில் இருந்து பதனி இறக்குவதற்கோ நாங்கள் யாரும் போனதில்லை . . .[32]

*மேற்கண்டதில் (1) பதனீர் தொழில், (2) தேங்காய் வெட்டும் தொழில் (3) நார் உறிக்கும் தொழில் போன்றவைகளைச் சமூக ரீதியில் பொருளாதார நோக்கோடு எடுத்துக்காட்டுகிறார்.*

> இரண்டாம் உலகப் போர் முடிந்த போது எல்லாவற்றையும் விற்று விட்டு ஊர் திரும்பினார். ஊரில் இரண்டு மாடிக் கட்டடம் ஒன்று வாங்கினார். அதில்

தங்கினார். அப்படித்தான் மாளிகை வீட்டுப் பீர்முகமது பிள்ளையாக மாறியது. பணத்தையெல்லாம் தங்கக் கட்டிகளாக்கிக் கொண்டு வந்தார் . . . கயிறு ஃபாக்டரி உயர்ந்தது.[33]

*மேற்கண்டதில் பொருளாதார ஏற்றத்தாழ்வுகளைக் காட்டுகிறார்.*

1. *மளிகைக் கடைத்தொழில்*
2. *துணிக்கடைத் தொழில்*
3. *கயிறு திரிக்கும் தொழில்*

*மேற்கண்ட தொழில்களைப் பொருளாதார ரீதியில் புலப்படுத்துகிறார்.*

எவ்வளவு தண்ணீர் கோரி குறைத்தும், நகரைச் செடி வாடியே காணப்பட்டது. தண்டிலும் திடமில்லை. மண்ணைக் கிளறிய போது வேர்களில் பச்சை தெரிந்தது. ஆனால் இலைகளில் மணம் வீசவில்லை. பக்கத்தில் செல்லும் போது . . . ஓர் இலையைக் கிள்ளிக் கசக்கி முகர்ந்த போது அது இழந்து கொண்டிருக்கும் உயிர் வாசத்தின் கடைசிச் சொட்டு அதில் தங்கியிருந்தது . . .[34]

*'உம்மாவின் ரூஹ்' என்னும் கதையில் வேளாண்தொழில் முறையையும் அவற்றின் கூறுகளையும் எடுத்துக் காட்டுகிறார்.*

காடு மலைகள் இறங்கி வந்த அவருக்கு என்றுமில்லாத தாகம், பசி. கிணறுகளில் ஊற்றுக்கள் வற்றிப் போன அந்த வேனிற் காலத்தில் அவருக்கு ஒரு சொட்டுத் தண்ணீர் கொடுக்க யாருமில்லை. பாறை இடுக்குகளில் உள்ள சுனைகளிலிருந்து நீர் வடிக்கிறதா என்று தேடிப் பாறை ஏறினார் . . .[35]

*'வேள்வியின் விளிம்பில்' என்னும் கதையில் தனிமனித வாழ்வியல் நிலைகளையும் சமூகப் போராட்டங்களையும் விவரிக்கிறார்.*

இந்த முப்பது செண்டு நிலத்தை விட்டுக் கொடுத்தால் மகளுக்கு வரதட்சணை கொடுக்க வேறு நிலம் இல்லை. இருப்பது வருமானமில்லாத வெறும் நிலம். வருமானமில்லாத நிலத்தை யார் வாங்குவார் . . .[36]

*என்பதில் பொருளாதார ஏற்றத்தாழ்வுகளையும் சமுதாய சிக்கல்களையும் புலப்படுத்துகிறார்.*

அம்ம ஊட்டு வஸ்துவுக்கெ அதிரிகுல புளி பழுத்துத் தொளியுது. புளி உலுக்கப் போன ஆளுகளை அங்கெ உள்ள நாடான்மாரு அடிச்சு வெரட்டிப் போட்டானுவொ. ஒண்ணு சகாயிச்சு மானம் காப்பாத்தணும் ...[37]

*'சாய்வு நாற்காலி' புதினத்தில், (1) பொருளாதார ஏற்றத்தாழ்வு, (2) நாடார் - முசுலீம், (3) சிறுதொழில்கள் போன்றவைகளையும் பொருளாதாரச் சிக்கல்களையும் உருவகிக்கிறார்.*

*'கூனன் தோப்பு' என்னும் கதையில் முசுலீம் மக்களின் பொருளாதாரக் கூறுகளைத் தெளிவுப்படுத்துகிறார்.*

வீடுவீடாகச் சென்று அரிசி இடித்துக் கொடுக்கும் கறுப்பியிடமிருந்து உகாங்கண்ணி ஐந்து ரூபாய் கடன் வாங்கியிருந்தான். அதுதான் விலை. வாங்கிய கடனைக் காலையில் திருப்பிக் கொடுத்தான் . . .[38]

*பெண்கள் அன்றாட வாழ்க்கைக்குரிய நிகழ்வுகளையும் உயிர்வாழ சமுதாயத்தில் அவர்கள் போராடும் இன்னல்களையும் இப்புதினத்தின்வழி விளக்குகிறார். இப்படியும் வறுமை இச்சமுதாயத்தில் இருப்பதைச் சுட்டுகிறார்.*

**கல்வி நிலைகள்**

*முசுலீம் சமூகத்தில் நடுத்தர வயதினரும் முதியோர்களும் பெரும்பான்மையும் கல்வியறிவு அற்றவர்களாகவே உள்ளனர். அடிப்படைக் கல்வியைக் கற்றிருந்தாலும் வேலை தேடும் அளவிற்குக் கல்வியை அவர்கள் பெற்றிருக்கவில்லை. அரசு ஊழியர்களின் எண்ணிக்கை மிகக் குறைவு. பெரும்பான்மையும் ஆசிரியர்கள் இவர்களிடம் இல்லை என்றே கூறலாம். இந்நிலையில் பெரும் மாறுதல் அண்மைக் காலத்தில் நிகழ்ந்துள்ளது. கல்வி கற்பதில் முனைப்புக் கொண்டுள்ளனர். பெண்களையும் உயர் கல்வி கற்க அனுமதிக்கின்றனர். பெண்கள் அரசு ஊழியர்களாக வேலை செய்வதிலும் இப்போது தடையில்லை. அரேபிய நாடுகளில் வேலை செய்பவர்கள் தங்கள் குழந்தைகளுக்கு ஆங்கில வழிக் கல்வியைக் கற்பிப்பதற்கு ஆர்வம் காட்டுகின்றனர். இம்மக்களின் எதிர்காலம் கல்வியில் இவர்கள் பெறும் முன்னேற்றத்தையே சார்ந்துள்ளது.*

செல்ல மகனே!

தாயில்லாத பிள்ளை, மேல் படிப்புக்கு அனுப்புவதாக இருந்தால், ஹாஸ்டலில் தங்க வைக்காதீர்கள், நகரத்தில் ஒரு வீடு வாடகைக்கு எடுத்துத் தங்கி, உங்கள் கண் பார்வையில் கல்லூரிக்குப் போய் வரட்டும் என்று உறவினர்கள் சிலர் உபதேசம் செய்தார்கள் . . .[39]

*என்பதில் கல்வியறிவும் அவை குறித்த சிந்தனைகளையும் உணர்த்துகிறார்.*

பள்ளி மேடைகளிலிருந்து பாங்கு ஒலித்து இரண்டு மூன்று நாட்களாகி விட்டன. நேரம் கடந்து செல்வதை யாராலும் தெரிந்து கொள்ள முடியவில்லை. . .[40]

*'கூனன் தோப்பு' நாவலில் பள்ளிவாசல், அரபு பாடசாலைகள் கற்கும் இசுலாமியரின் பண்பாடுகள் சமுதாயத்தில் அவர்கள் கொடுக்கும் முக்கியத்துவங்கள் குறிப்பிடப்படுகின்றன.*

*'ஒரு கடலோர கிராமத்தின் கதை' என்ற புதினத்தில்,*

இந்த ஊரில் ஒரு பள்ளிக்கூடம் வருவதை நான் ஆமோதிக்கவில்லை, பலன் ? ஒரு சவாலாகப் பள்ளிக்கூடம் முன்னால் உயர்ந்து நிற்கிறது. அங்கு முதன் முதலாகத் தலைகுனிய வேண்டி வந்தது.[41]

*'துறைமுகம்' என்னும் புதினத்தில்,*

அந்த நாயருக்குப் பள்ளிக்கூடத்துக்குப் போறேன்னு சொல்லிட்டுப் போறான். வீட்டில் நின்னா சல்லியம் பாரம் கொல்ல மாவிலெ ஏறித் துணியெல்லாம் அண்டிக்கறை ஆக்கான் . . .[42]

*'அஞ்சு வண்ணம் தெரு' என்னும் புதினத்தில்,*

. . . தாருல் சாஹினா ஒன்று மட்டும்தான் தெருவில் தைக்காப் பள்ளியை விட உயர்வாகக் காணப்படுகிறது. நாமும் வாழ்க்கையை இழக்கவா ? மச்சானின் மனசுக்குள் சில தீர்வுகள் உருவாகின. ஒன்று மினாராக்கள் கட்டிக் கொடுப்பது. இல்லாவிட்டால் ஒரு மாடியை இடித்து பள்ளியைவிட உயரம் குறைப்பது . . .[43]

*'குடியேற்றம்' புதினத்தில்,*

மனைவியும் பள்ளிக்கூடம் போகும் இரு புள்ளைகளுடன் நூல் பாலத்தில் அடி தவறாமல் பதனமாக நடக்கும். அவர் பதறிப் போனார். கண்ணீருடன் வந்தேறிய சர்ப்பவதியான மகளைக் கண்டதும் . . .[44]

*தோப்பில் முகமது மீரானின் சிறுகதை, நாவல் படைப்புகளில் கல்விக் குறித்த சிந்தனைகளில்*

1. *அடிப்படைக் கல்வியின் தேவை அவசியம்*
2. *பெண் கல்வியின் இன்றியமையாமை*
3. *தற்காலத்தில் கல்வியின் வளர்ச்சி நிலைகள்*
4. *கல்வியும் வாழ்வியலும்*
5. *கல்வியும் வேலை வாய்ப்புகளும் சமூக மேம்பாடுகளும்*

*குறித்த பதிவுகளை சமுதாய நோக்கில் எடுத்துக் காட்டுகிறார்.*

**பெண்களும் குடும்ப நிலையும்**

இசுலாமிய சமயம் பெண்களுக்கு சம உரிமை வழங்கினாலும், சமூக வாழ்வில் பெண்கள் இரண்டாம் தர குடிமக்களாகவே வாழ்கின்றனர். மிக அண்மைக் காலம் வரை வயது வந்ததும் பெண்கள் கல்வி நிலையங்களுக்குச் செல்ல அனுமதிக்கப்படுவதில்லை. வயது வந்த ஓரிரு ஆண்டுகளில் திருமண வாழ்விற்குத் தள்ளப்படுகின்றனர். நடுத்தர வயதுக்குள்ளாக, பல குழந்தைகளுக்குத் தாயாகி விடுகின்றனர். முதுமையும் அடைந்து விடுகின்றனர். கணவர்கள் பெரும்பாலும் வணிகர்களாக இருப்பதினால், குடும்பப் பொறுப்பு முழுவதும் பெண்களுடையது. பெண்கள் பர்தா அணியும் பழக்கம் அண்மைக் காலத்தில் தோற்றம் கண்டது. அரேபிய நாடுகளுக்குச் சென்று வந்தவர்களே இப்பழக்கத்தைத் தோற்றுவித்தனர். அதற்கு முசுலீம் பெண்கள் அவர்களுக்கே உரிய முறையில் ஆடை அணிந்திருந்தனர். கிறிஸ்தவப் பெண்களைப் போலவே தலையில் முக்காடு போடும் பழக்கமும் இருந்து வந்தது. பர்தா அணியும் பழக்கம் உலக அளவில் முசுலீம் மக்களின் ஒருங்கிணைப்பைக் குறிக்கின்றது. சமகாலத்தில் இன அடையாளத்தைவிடச் சமய அடையாளத்திற்கு முக்கியத்துவம் தருவதை இது உணர்த்துகிறது.

மனித வாழ்க்கையில் மிகவும் பழமையும், சிறப்பும் கொண்ட அமைப்பாகக் குடும்பம் இருந்து வருகின்றது. குடும்பத்தைச் சமூக நிறுவனமாகவும் கருதுகின்றனர். குடும்பம் என்னும் அமைப்பு கட்டிக் காக்கப்படுவது தொடர்ந்து பெண்களால் நடைபெற்று வருகின்றது. பெண்கள் சமூகத்தின் சக்தி வாய்ந்த உறுப்பினர்களாக உள்ளனர். பெண்கள் மனிதர்களிடம் உறவுநிலை மேம்படவும் இணக்கமான வாழ்க்கை நடைபெறுவதற்கும் குடும்ப அமைப்பின் மூலம் பாடுபடுகின்றனர்.

சமூக உறவுகள் சீர்பட அமையவும் மனிதர்கள் சக மனிதரோடு அன்பு பாராட்டவும் குடும்பம் கருவியாக அமைகின்றது. இதனை தோப்பில் முகமது மீரான் தன் படைப்புகளில் பதிவு செய்துள்ளார். மனித வாழ்வியலின் மறுமலர்ச்சியைத் தோற்றுவிக்கும் குடும்பம் பெண்களால் நிலைநிறுத்தப்படுவதை ஆராயும் வகையில் பெண்களின் இயக்கம் குடும்பத் தளத்தில் முகிழ்த்துச் சமுதாயத் தளம் நோக்கிப் பயணிப்பதை அறியும் வகையில் அணுகப்படுகிறது.

**குடும்பமும் அமைப்பும்**

> குடும்பம் என்பது அடிப்படை உறவுடைய கணவன், மனைவி, பிள்ளைகளைக் கொண்ட சிறிய அளவுடைய ஒன்றாகும். பரந்துபட்ட நிலையில் ஒருங்கிணைந்து வாழும் உறவினர்களையும் தந்தெடுக்கப்பட்ட நபர்களையும் குறிக்கும்[45]

என்று சமூகவியல் அகராதி குடும்பம் பற்றி விளக்குகின்றது. குடும்பம் என்பது திருமணத்தின் மூலம் ஆணுக்கும், பெண்ணுக்கும் இடையே நிலையான நெருக்கமான இணைப்பினால் அவிழ்க்க முடியாதபடி பிணைக்கப்பட்ட ஒன்றாக இருக்கின்றது. அஃது அவர்களுடைய உறவுகளை ஒழுங்குபடுத்துகின்றது. அந்த உறவு ஆணுக்கும், பெண்ணுக்குமான ஈடுபாட்டையும், கவர்ச்சியையும் பொதுநல உணர்ச்சியினையும் கணவன் மனைவி என்னும் உயிரோட்டமிக்க உறவினையும் முதன்மையாக்குகின்றது.




> எதுக்கும் இகழ்ச்சியாகச் சொல்லுவாங்க பக்கத்து வீட்டுக்காரவங்க. இப்படி அணு அணுவாகச் செத்துக்கிட்டு இருக்கிறதெ விட ஒரே அடியா செத்துடலாமே! துக்கம் தொண்டையை அடைத்தது அவளுக்கு . . .[46]

முசுலீம் சமூகப் பெண்கள் வேலைக்குச் செல்லும் நிலைகளையும் அதனால் ஏற்படுகின்ற இன்னல்களையும் உணர்த்துகிறார்.

சிறந்த படைப்பாக மனிதனைப் படைத்த ஆண்டவன் அவனுக்கு இதயம் ஒன்றைக் கொடுத்து, அதில் வேதனை என்ற கூரம்புகளை ஏன் ஆழப் பதிய வைத்துள்ளான். இன்னும் எலும்புக்கும் தோலுக்கும் சதைக்கும் உள்ளே ஈவிரக்கமற்ற இதயங்களையும் ஏனோ ஆண்டவன் மறைத்து வைத்துள்ளான் . . .[47]

*'தஜ்ஜால் மேல் விழுந்த மலை' என்னும் சிறுகதையில் மூத்தமகள் ஸைனபாவுக்குக் கல்யாணம் பண்ண வேண்டுமென்ற கோரிக்கையை இந்த மஹல்லா வாசிகளிடம் கொடுத்து ஒன்றரை வருஷம் ஆகியும் ஒன்றுமே நடக்கவில்லை.*

செதில் பிடிச்ச ஒரு ஆயுசு, பதினெட்டு வயதில் ஐந்து ரூபாய் சம்பளத்துக்கு மோதினாராகச் சேர்ந்தது. அறுபது வயதில் நாற்பத்தைந்து ரூபாய் சம்பளமும் ஏழு பிள்ளைகளும் ஒன்பது வயிறுகளும், அத்துடன் கல்யாணம் பண்ணிக் கொடுக்க வேண்டிய மூன்று மகள்கள் . . .[48]

*என்பதில் குடும்பமும் அதில் ஏற்படுகின்ற சமுதாய வாழ்வியல் போராட்டங்களையும் எடுத்துக்காட்டுகிறார்.*

ஒரு நேரப் பசியெல்லாம் சகிப்போம். சகித்தா தான் என்ன? தான் சாப்பிட்டுவிட்டு வந்ததாக நினைத்துத்தான் அவர் அழைக்கவில்லை. இல்லாவிட்டால் அழைத்திருப்பார். நல்ல மனிதன். தயாளன் நிர்மலமான சிரிப்பு. அந்த முகத்தில்தான் என்ன ஐசுவரியம் . . .[49]

புகையில்லாத நெருப்பு எது
பசித்து வாழும் மக்கள் வயிறு அது

(பட்டுக்கோட்டை கலியாண சுந்தரம்)

*என்னும் கருத்து ஒப்புநோக்கத்தக்கது.*

*'கூனன் தோப்பு' என்னும் கதையில் சமுதாய நோக்கில் பெண்களுக்கு நடக்கும் வாழ்வியல் சிக்கல் அகம் சார்ந்த போராட்டங்களையும் எடுத்துரைக்கிறார்.*

பெண்மையின் இதய தாகம் சுரக்கும் கண்ணீரிலும், வறுமையின் கூரிய பற்களின் கடி கொண்டு ஒழுகும் நினைத்திலும் பொருமிய கடிதங்கள் ஒவ்வொரு வருடமும் கையில் வந்து வீழ்ந்தன. பட்டின, உடுதுணை இல்லை.

முகத்தை ஒரு கண் பார்க்க ஆசை . . . இப்படி எல்லாம் தேத்தண்ணிக் கடையில் எரியும் பாய்லரில் கரி போடும் வாய்வழியாக அவை உள்ளே சென்றன. கடிதங்கள் கனலில் பற்றி எரிந்தன. கரி தட்டிய போது சாம்பல் காற்றில் மிதந்தது. சேமது நானாவுக்கு வீடு நினைவில்லை. குழந்தைகள் நினைவில்லை. மனைவியும் நினைவில்லை . . .[50]

*என்பதில் குடும்பமும், அதில் ஏற்படுகின்ற சுமைகள், துக்கங்கள் இன்ன பிறவற்றையும் காணமுடிகிறது.*

கணவனில்லாமல் நாலு குழந்தைகளைப் பெற்ற கோங்கண்ணியும் நாஹீ ஹாஜியாரின் மகன் ஹமீதும் ஹமீது என்று தெரிந்ததும் காதர் பிள்ளை அதிர்ந்து நின்றனர். நம்ப முடியவில்லை. பகல் உதிக்கும் சூரியனைக் கூட நம்ப முடியவில்லை . . .[51]

*குடும்ப வாழ்வில் கணவனுக்கும், மனைவிக்கும் இடையே ‘சந்தேகம்’ என்னும் பேய், அதனால் வரும் இடர்பாடுகள் பெண்கள் எதிர்நோக்கும் சமூக ரீதியான சிக்கல்கள், சமுதாயத்தில் பெண் ரீதியான அவமானங்கள் அதைத் தாங்கிக் கொள்ளும் பெண் இனம் இன்ன பிறவற்றையும் பெண்ணிய நோக்கில் எடுத்துரைக்கிறார்.*

*‘சாய்வு நாற்காலி’ என்னும் புதினத்தில்,*

கணவன் மனைவி தங்களுக்குள் வெறுப்புகளை, வெளியே காட்டிக் கொள்ளாமல் கொஞ்சம் நாட்கள் வாழ்ந்தனர். தினமும் இரவு ராத்திரியும், ஓதலும் ஊதலும் பீங்கான் எழுத்தும் அவளுக்கு எந்த மாற்றமுமில்லை. கணவனைக் கண்டதும் அவளுடைய உடலில் வியர்வை கொட்டும். முகபாவனை மாறும் . . .[52]

*மேற்கண்டதில் குடும்ப வாழ்க்கையில் கணவன் - மனைவி உறவு நிலைகளில் ஏற்படும் வாழ்வியல் அவலங்களை எடுத்துக்காட்டுகிறார்.*

ஒரு பெண்ணின் வாழ்க்கையில் துயரங்களும் சோதனைகளும் துவங்குவதும் முடிவதும் முன்பின் தெரியாத ஓர் ஆடவனுடைய கையிலிருக்கும் தாலிக் கயிற்றுக்குக் கழுத்தை நீட்டிக் காட்டும் நிமிடம் முதல் தன்னுடைய துயரம் துவங்கியதும், இந்த நீசக்கரத்திலிருந்த தாலி, கழுத்தில் பூட்டப்பட்ட வினாடி முதற்கொண்டுதான் அது புனிதமான மாங்கல்யமாக இருக்க வில்லை . . .[53]

*என்று பெண்ணின் குடும்ப வாழ்வியலை எடுத்துரைக்கும் படைப்பாளர் தாலிக்கயிறு கொலைக் கயிறின் கண்ணியென்று நாட்களின் நகர்தலில் தெரிய வந்த போது கழுத்தை உருவ முடியாமல் நாற்பது ஆண்டுகால நரக நெருப்பில் செய்த பாதகத்தை மறைக்க மடாயி பாபாவிற்கு கைமடக்குக் கொடுப்பதற்காக அதைக் கழற்றி விற்ற போதிலும் இப்பவும் அது கழுத்தில் மாட்டப்பட்ட கொலைக் கயிறாகவே கழுத்தை இறுக்கிக் கொண்டிருக்கிறது. இந்த வாழ்க்கை முடிவு வரை துக்கங்கள் துயரங்கள் வேதனைகள் இவற்றின் கால்களுக்கிடையில் ஒரு கால்பந்தாக மிதி வாங்கிக் கிடக்க வேண்டிய துர்விதி. இனி வாழக்கூடிய ஒவ்வொரு வினாடியிலும் சுற்றும் வளரும் நரக நெருப்பின் வெக்கையில் தோல் கருகி, எலும்புருகி துடிதுடித்து, வினாடிகளை நகர்த்த வேண்டிய நிலை, ஈரலைக் கறம்பிக் கொண்டிருக்கிறது. நோய் அணுக்கள், ஈரல் முழுவதையும் ஒரே வீச்சில் தின்று விடுமேயானால் கண்ணை மூடவிடலாம். அவையும் தன்னை இந்நிலையில் போட்டு சோதித்துக் கொண்டிருக்கின்றனவே என்று சமுதாயத்தில் பெண்களின் நிலைப்பாட்டினைக் காட்டுகிறார்.*

### சமய, சமுதாய மதிப்புகள்

*சமூகவியலாளர்கள் சமுதாயத்தின் இன்றியமையாப் பண்புகளுள் பின்வருவற்றையும் அடக்கிக் காட்டுவர்.*

1. *சமுதாயம் ஒரு தொடர்ச்சியைக் கொண்டுள்ளது. தனிப்பட்ட முறையில் ஒவ்வொரு பிரிவினரையும் ஒவ்வோர் உறுப்பினரையும் கற்பதன் மூலம் சமுதாயத்தின் உண்மையான அல்லது முழுமையான உருவத்தை அறிய முடியும். மக்கள் சமுதாயத்தில் பிறக்கின்றனர். வாழ்கின்றனர், இடமாற்றம் செய்கின்றனர், இறக்கின்றனர். ஆனால் சமுதாயம் தொடர்ந்து வாழ்கின்றது.*
2. *சமுதாயத்தில் நிலவும் பண்பாடு பொதுவாகச் சமுதாய உறுப்பினர்களால் ஏற்றுக் கொள்ளப் பெறும் மதிப்புக்களைத் தன்னகத்தேக் கொண்டுள்ளது. சமுதாயத்தில் வாழ்கின்ற மக்கள் இம்மதிப்புக்களை இன்றியமையாதன என்னும் அடிப்படையானவை என்றும் கருதுகின்றனர்.*
3. *சமுதாயம் முடிவான மதிப்புகளை* (Ultimate values) *நிறைவேற்றும் இடைநிலையான மதிப்புகள்* (Intermediate values) *பலவற்றைக் கொண்டுள்ளது.*

4. *சமுதாயம் வாழச் சில அடிப்படையான செயல்பாட்டுத் தேவைகள்* (Basic functional needs) *நிறைவேற்றப்பட வேண்டும். சமுதாய ஒழுங்குகள் காக்கப்பட வேண்டும்.*

**சமயமும் மதிப்புக்களும்**

*சமயமே இம்மக்களை ஒருங்கிணைக்கிறது. வேறுபட்ட சாதியிலிருந்து மதமாற்றத்தின் மூலம் முசுலீம் சமயத்திற்கு வந்திருந்தாலும் சாதி வேற்றுமை இவர்களிடையே அறவே இல்லை. புதிய சமயத்தில் சாதி அடையாளங்களை முழுமையாகத் துறந்துள்ளனர். கிறித்தவ இனமக்கள் மதம் மாறினாலும் சாதி அடையாளத்தைத் தக்க வைத்துக் கொள்வது இங்குக் குறிப்பிடத்தக்கது. 'ஜமாத்' சமூக வாழ்வில் இவர்களைக் கட்டுப்படுத்தும் அமைப்பாக உள்ளது. ஜமாத்தின் அனுமதியுடனே திருமணம் செய்ய முடியும். சமூக பொதுச் சொத்துக்களையும் ஜமாத் கட்டுப்படுத்துகின்றது. சமூக உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் ஜாமாத்திற்குக் கட்டுப்பட வேண்டும்.*

*'துறைமுகம்' என்னும் புதினத்தில் சமயக் கூறுகளைத் தெளிவுப்படுத்துகிறார்.*

> தலையைத் துணியால் மறைத்து சுப்ஹீ தொழ போனவர்களும் தொழுதபின் திரும்பியவர்களும் பள்ளிச் சுவரைப் பார்த்த போது ஒரு மின்தாக்கம் ஏற்பட்டது போல் திடுக்கிட்டனர். பள்ளிச் சுவரிலுமா சர்வ சக்தனாகிய அல்லாஹீவின் திரு இல்லச் சுவரில் தூபீரீங்களின் காஜியால் எழுதப்பட்ட நீண்ட வரிகளில் கண்களை ஓட்டினர் . . .[54]

*'அஞ்சு வண்ணம் தெரு' என்னும் கதையில் முசுலீம் சமயத்தின் நம்பிக்கைகள் விளக்கப்படுகிறது.*

> கட்டாந்தரையில் வளர்ந்தோங்கி நிழல் பரப்பி நிற்கும் வேப்பமரத்தடியில் ஒரு ஜோதி தெரிந்தது. தாஹாநபி அவர்கள் அங்கு திடீரெனத் தோற்றமளித்தார்கள். வேப்பமரத்தடி ஒளிமயமாக விளங்கியதைக் கண்ட மக்களுக்கு எங்குமில்லாத ஆச்சரியம் தங்கள் கண்களையே நம்ப முடியவில்லை . . .[55]

> வழக்கம் போல் மெஹ்ராஜ் மாலையிலுள்ள சில வரிகளை உரக்க உருவிட்டுக் கொண்டு படுத்தப்படியே உறங்கி விட்டார். குவாஜா அப்துல் லத்தீப் ஹஜ்ரத், ஹஜ்ரத் அவர்களுக்கு நேராக ஒரு ஒளி வந்தது. ஆகாசமும் வீடும் தெருவும் வேம்படிப் பள்ளியும் அந்த ஒளி சுருங்கிச் சுருங்கி பிரகாசம் சொரியும் ஒரு மனித வடிவமானது . . . பிறகு உயிருள்ள மனிதனாக வந்து கூப்பிட்டது . . . முன்னால் ஒளியாலுள்ள மனிதரிலிருந்து கொட்டும் பிரகாசப் பிரவாகம்.[56]

*சமுதாயத்தின் இன்றியமையா நிறுவனங்களுள் ஒன்றாகும். சமயம் தனி மனிதர்களுக்குச் சுகம் அளிக்கக் கூடிய தன்மையுடையதாகத் திகழ்கிறது. வாழ்க்கையின் பொருளையும் விளக்கத்தையும் அளிப்பதன் மூலம் சமய முறைகள் நியமங்களையும், மதிப்புக்களையும் புனிதமுடையனவாய் மாற்றுகின்றன. சமுதாயத்தில் நிலவும் சமூக ஒழுக்கங்களுக்கு நியாயத்தை அளிக்கின்றது. சமுதாயம் சில நிலைகளிலிருந்து சில சமயம் வழுவும் போது காக்கப்பட வேண்டும். சடங்குகளின் மூலமும், சமய விழாக்களின் மூலமும் சமயம் சமூக நியமங்களையும் மதிப்புக்களையும் வழுவாமல் காக்கின்றது. சமூக உறுப்பினர்கள் சமுதாயத்தில் நிலவும் மேலோங்கிய மதிப்புக்களையும் நியமயங்களையும் ஏற்கவும், அங்கீகரிக்கவும் செய்கின்ற சமூகக் கட்டுப்பாட்டுக் கருவியாகவும் சமயம் செயலாற்றுகின்றது.*

*சமய அமைப்புக்கள்* (Religious structures) *ஒரு சமுதாயத்தின் சமூக மதிப்புக்களைப் பிரதிபலிக்கின்றன. எல்லாச் சமூகங்களும் பழங்காலம் முதல் இக்காலம் வரையிலும் வாழ்க்கையில் பொருளுக்கும் இயக்கத்திற்கும் சமய நிறுவனங்களை நிறுவியுள்ளன. ஓர் உயிரின் வாழ்க்கையைச் சமுதாய வாழ்க்கையுடன் இணைத்து வளர்ப்பதாகச் சமயம் செயலாற்றுகின்றது. சிறந்த சமய முறைகள் சமுதாய நடைமுறைகள் கால்கொள்ளத் துணை செய்கின்றன.*

**பண்பாடும் நம்பிக்கைகளும்**

> பண்பாடு என்பது சமுதாயத்திலிருந்து உறுப்பினர்களால் கற்கப் பெறுவனவும் பங்கிடப் பெறுவனவும் ஆகும். சமுதாயத்தில் வாழும் மனிதர்கள் மதிப்புக்களையும் நம்பிக்கைகளையும் நடவடிக்கைகளையும் (Behaviours) கற்பதால்தான் மனிதர்களாக வாழ்கின்றனர்.[57]

*மக்களின் வரலாற்றில் அவர்கள் படைத்துக் கொண்ட*

1. கருவிகள்
2. சமூகப் பழக்கவழக்கங்கள்
3. நம்பிக்கைகள்
4. ஒழுக்கங்கள்
5. கொள்கைகள்

முதலியவற்றின் சாராம்சங்களைப் பண்பாடு எனப் பொதுவாகக் கூறலாம்.

1. அடையாளங்கள்
2. மதிப்புகள்
3. செயல்பாடுகள்

ஆகியவற்றைக் கடத்தக் கூடியதும், அவற்றுடன் தொடர்புடையனவற்றை உள்ளடக்கியதும் பண்பாடு எனலாம். எனவே சமுதாயத்தில் வாழ்கின்ற உறுப்பினர்களால் சமுதாயத்திலிருந்து பெறப்படுவதும் பண்பாடாகின்றன.

1. அறிவுரைகள்
2. நம்பிக்கைகள்
3. கலைகள்
4. ஒழுக்கங்கள்
5. சட்டங்கள்
6. வழக்கங்கள்

மேற்கண்டவற்றின் கூட்டே பண்பாடு எனப்படும்.

> தம் வாழ்க்கை அனுபவங்களால் சமுதாயத் தேவைகளை நிறைவேற்றுவதாகச் சில சட்டங்களையும், நடைமுறைகளையும் வகுத்துக் கொள்கின்றனர். இந்த நம்பிக்கைகளும் வழக்கங்களும் சட்டங்களும் நடைமுறைகளும் பண்பாடு என வழங்கப் பெறுகின்றன.[58]

மனித இனத்தின் வாழ்க்கையைச் செம்மைப்படுத்தும் நம்பிக்கைகள், வழக்கங்கள், நிறுவனங்கள் அனைத்தையும் பண்பாடு என்ற சொல் குறிக்கின்றது. வாழ்க்கைச் சூழல்களுக்கேற்ப நாம் மேற்கொள்ளும் வழிகள் அனைத்தையும் மொத்தமாகப் பண்பாடு எனலாம்.

1. எதிர்பார்ப்புகள் (expectations)
2. நம்பிக்கைகள்
3. கருத்துகள்
4. புரிந்து கொள்ளல்கள் (understandings)

5. *யூகங்கள்* (speculations)
6. *இலக்குகள்* (goals)
7. *விருப்பங்கள்* (interests)
8. *நோக்கங்கள்* (motives)

   i. *மொழி*
   ii. *கருவிகளைச் செய்தல்*
   iii. *தொழில்கள்*
   iv. *கலைகள்*
   v. *அறிவியல்*
   vi. *கூட்டங்கள்*
   vii. *அரசு*
   viii. *ஒழுங்குகள்*
   ix. *சமயம்*
   x. *உருவக் கருவிகள்*
   xi. *கைவினைப் பொருட்கள்*

*மேற்கண்டவற்றை உள்ளடக்கிய அனைத்தும் பண்பாட்டினுள் அடங்கும் எனலாம்.*

**பண்பாடும் அவற்றின் கூறுகளும்**

சமூகவியலாளர்களால் பண்பாடு குறித்து அளிக்கப் பெறும் விளக்கங்கள் மூலம் பண்பாட்டினுள் அடங்கியுள்ள கூறுகளை இனங்கண்டு கொள்ளமுடிகின்றது. வழக்கங்கள், நம்பிக்கைகள், தொழில்நுட்பங்கள், அறிவியல் பொருட்கள், உற்பத்திகள், கைவினைப் பொருட்கள் போன்ற அனைத்தையும் பண்பாட்டின் கூறுகள் எனக் கொள்ளலாம். இலாப்பியர் (T.lapiere) என்ற சமூகவியலறிஞர் பண்பாட்டின் கூறுகளை மூன்று உட்தொடர்புடைய முறைகளாகப் (Interrelated system) பாகுபாடு செய்துள்ளார்.[59]

1. *கருத்துக்கள்*
2. *நம்பிக்கைகள்*
3. *மதிப்புகள்*
4. *விரும்பத்தக்கவை*
5. *விரும்பதகாதவை*

ஆகியனவற்றைக் கற்கும் வழிகள் அனைத்தும் கருத்து முறை (ideological system) என்ற பாகுபாட்டிற்குள் அடக்கப் பெறுகின்றன. இவை அனைத்தும் மனிதச் சிந்தனைகளுக்கும் செயல்களுக்கும் அடிப்படையாக அமைகின்றன. பண்பாட்டை உருவாக்கும் கூறுகளாகிய,

1. உணவு
2. உணவு தயாரிக்கும் முறை
3. பொழுதுபோக்கு
4. அரசியல்
5. ஒழுக்கம்
6. சமய நடவடிக்கைகள்
7. சட்டங்கள்
8. பழக்க வழக்கங்கள்

போன்றவைகளையும் இம்முறை குறிக்கின்றது.

**இசுலாமியர் நம்பிக்கைகளும் பண்பாடும்**

நாட்டார் நம்பிக்கைகள் பண்பாட்டின் முக்கியக் கூறுகளாக அமைகின்றன. மக்களின் வெவ்வேறு செயல்களில் அறிந்தோ அறியாமலோ நம்பிக்கைகள் வெளிப்படுகின்றன. நம்பிக்கைகளைச் செயல் வடிவிலான வெளிப்பாடுகளின் மூலம் தான் உணர்ந்து கொள்ள இயலும். ஆனால் அச்செயல்பாட்டிற்கான காரணங்கள் மனித மனங்களில் உறைத்திருக்கும். இச்செயல்பாடுகள் வாய்மொழியாகவோ, நடத்தைச் சார்ந்தோ வெளிப்படும். இவற்றைத் தொகுத்து முறையாக ஆய்விற்கு உட்படுத்துவதின் மூலம் குறிப்பிட்ட நம்பிக்கைகள் புழங்கும் மக்களின் பண்பாட்டினை அறிந்து கொள்ள முடியும்.

கள ஆய்வின் வழி குமரி மாவட்ட இசுலாமிய மக்கள் பல்வேறு நம்பிக்கைகளின் நடுவில் வாழ்ந்து கொண்டிருப்பதையும் உணர முடிகிறது. குமரி மாவட்ட இசுலாமிய மக்களின் நம்பிக்கைகளைத் தொகுத்து வகைப்படுத்தலின் வழி இம்மக்களின் மனதையும், சமூக வாழ்வியல் முறைகளையும் அறியலாம்.

**நம்பிக்கை வாழ்வியல்**

*நமிபிக்கைகள் அவற்றைக் கடைபிடிக்கும் மக்களால் விவாதங்களுக்கு இடமின்றி உண்மையென நம்பிக் கடைபிடிக்கப்படுகின்றன. சமூக மனம் பகுத்தறிவிற்குட்பட்டு நம்பிக்கைகளில் உண்மைகளை இனங்காண்பதில்லை. மாறாக, நம்பிக்கைகளை உணர்வு அடிப்படையில் அது ஏற்க தக்கனவாகின்றன.*

சிலவற்றை மறுக்க முடியாத உண்மை என்று கருதி ஏற்றுக் கொள்வதே நம்பிக்கை என்று வரையறுக்கலாம். ஒன்றை உண்மை என்று நம்புவதில் இரு கூறுகள் அடங்கியுள்ளன. அதாவது அறிவுப்பூர்வமான ஒரு கூறும் உணர்ச்சிப்பூர்வமான மற்றொரு கூறும் நம்பிக்கை அடங்கியுள்ளன.[60]

*மேற்கண்டவற்றில் உணர்ச்சிப் பூர்வமான கூறே நம்பிக்கைகளைத் தீர்மானிக்கிறது. வெளியிலிருந்து பார்க்கும் பார்வையில் சில நம்பிக்கைகளைப் பொய்யான நம்பிக்கைகளாக இனங்காண முடிந்தாலும், நம்பிக்கைகளை உண்மைகளாகக் கொள்கின்றனர். நம்பிக்கைகள் உண்மை, பொய் என்பனவற்றிற்கு அப்பாற்பட்டனவாக விளங்குகின்றன.*

1. *நம்பிக்கைகள்*
2. *மூட நம்பிக்கைகள்*

ஃபிரேசரும் (1927:166) டைலரும் (1958: 72) மூட நம்பிக்கைகளைப் பண்டைக் காலத்தின் எச்சங்கள் என்று கூறுகின்றனர். அதாவது மிகவும் நாகரிக மக்களிடையே எஞ்சி நிற்கும், விலங்காண்டி காட்டாண்டி நிலைகளின் நம்பிக்கைகளும், பழக்கங்களும் அவ்வெச்சங்களாகும்.[61]

1. *மாதவிலக்கான பெண்கள் பூக்கும் செடிகளுக்கு அருகில் செல்லக் கூடாது.*
2. *விளக்கு ஏற்றியபின் குழந்தைகளை வெளியே கொண்டு செல்லக் கூடாது (மீறினால் பட்சிதோசம்) ஏற்படும்.*
3. *ஆவி இருத்தல், பில்லி, சூனியம்*

*போன்றவைகளும் பின்பற்றப்பட்டு வருகின்றன.*

**வகைமை நோக்கில் நம்பிக்கை**

*வழக்காறுகளை அவை வழங்கும் சூழலின் அடிப்படையிலேயே வகைமை செய்தல் வேண்டும். நம்பிக்கைகள் வாழ்வின் ஒவ்வொரு காலத்திலும் நாட்டார் அறிந்தோ, அறியாமலோ வெளிப்படுகின்றன. ஆனால் வழக்காறுகளை அவை*

புழங்கும் சூழலிலிருந்துதான் திரட்ட முடியும். இச்சூழலை அடிப்படையாகக் கொண்டு வழக்காறுகளை வகைமை செய்வதே பொருத்தமானது.

1. கண்ணேறு கழித்தல்
2. ஆவிகள் குறித்த அச்சம்
3. மந்திரம்
4. நம்பிக்கை மருத்துவம்
5. குழந்தைப் பேறு
6. குழந்தை வளர்ப்பு
7. தீட்டு வருவதை உணர்த்தும் குறிகள்

மேற்கண்ட வகைகளில் இசுலாம் மக்களின் நம்பிக்கைகளை வகைப்படுத்தலாம்.

**கண்ணேறு கழித்தல் நம்பிக்கை**

கண்ணேறு கழித்தல் குறித்த நம்பிக்கைகள் வாழ்வின் பல்வேறு சந்தர்ப்பங்களில் செயல்பாடுகளாக வெளிப்படுகின்றன. வாழ்வியல் சடங்குகள் ஒவ்வொன்றிலும் கண்ணேறு கழித்தல், சடங்கின் ஒரு பகுதியாக அமைவது குறிப்பிடத்தக்கது.

> ஏதாவது ஓர் ஆண் அல்லது ஒரு பெண் மற்றொரு தனிமனிதருக்கு அல்லது அவருடைய உடைமைகளுக்கு வேண்டுமென்றோ, விருப்பமின்றித் தன்னியல்பாகவோ தீங்கிழைக்க முடியும் என்பதே கண்ணேறு[62]

என்று ஹூர்து வரையறுக்கிறார்.

குமரி மாவட்ட இசுலாமியர் வாழ்வியல் வாழ்க்கை வட்டச் சடங்குகளில் இது தவறாது இடம்பெறுகிறது.

1. ஒரு முட்டையைச் சுன்னத் சடங்கின்போது சுன்னத் செய்யவிருக்கும் சிறுவனது தலையைச் சுற்றி எறிவர். இது அவனைக் கண்ணேறுவிலிருந்து பாதுகாப்பதற்காக நிகழ்த்தப்படுகிறது.
2. கர்ப்பிணிப் பெண், குழந்தைப்பேற்றிற்காகத் தாய்வீட்டிற்கு வரும் போது தாய்வீட்டின் படியை மிதித்தவுடன் திருஷ்டி சுற்றும் சடங்கு நிகழ்த்தப்படுகிறது. இச்சடங்கு ‘சாபி, ஹனபி’ என்னும் இருவர் சடங்குகளிலும் தவறாது இடம்பெறுகிறது.

3. *குழந்தையின் தொட்டிலில் தொப்புள் கொடி நூலால் சுற்றப்பட்டுத் தொங்கவிடப்படும். தொப்புள் கொடிக்கும் கண்படுதலைத் தடுக்கும் சக்தி உண்டு என்ற நம்பிக்கையின் அடிப்படையில் இது நிகழ்த்தப்படுகிறது.*
4. *குழந்தைகளுக்கு ஆறு மாதம் நிறையும் போது சோறூட்டும் சடங்கை நிகழ்த்துகின்றனர். அப்போது உயிருள்ள கோழியை மூன்று முறை குழந்தையின் தலையைச் சுற்றி ஏழைகளுக்கு வழங்குகின்றனர்.*

*மேற்கண்ட நிகழ்வுகள் குமரி மாவட்ட இசுலாமியர் வாழ்வில் ஒவ்வொரு சடங்கிலும் தவறாது இடம்பெறுகின்றன.*

> கண்ணேறு கழித்தலுக்கு விலக்கப்பட்ட காலமும் குமரி மாவட்ட இசுலாமியர் வாழ்வில் உண்டு. குழந்தை பிறந்து 41 நாள் வரை குழந்தைக்கோ குழந்தையின் தாய்க்கோ 'திருஷ்டி' சுற்றுவதில்லை. இக்காலம் தீட்டு நாள்களாகக் கருதப்படுகிறது. தீட்டுக்காலம் முடியாமல் 'திருஷ்டி' சுற்றினால் அதனால் தீமையே விளையும் நோயும் அதிகரிக்கும். எனவே தீட்டு நாள் முடிந்தவுடன் கடுகு, மூன்று வேப்பிலை, மூன்று மிளகு, மூன்று அகத்தியிலை அல்லது முந்திரி இலை உப்பு இவற்றைத் தடவித் தீயில் போடுவர்.[63]

*இது எல்லா கண்ணேறுகளையும் அதனால் விளையும் தீங்குகளையும் போக்கி விடும் என்ற நம்பிக்கை குமரி மாவட்ட இசுலாமியர்களிடையே உள்ளது.*

*மேலும் சில அறிகுறிகளைக் கொண்டு கண்ணேறுபட்டுள்ளதை நாட்டார் உணர்ந்து கொள்கின்றனர். குழந்தை இரவு நேரம் இடைவிடாது அழுவது கண்ணேற்றின் வெளிப்பாட்டுக் குறியாக அமைகிறது. மேற்கண்டவாறு கண்ணேறு விழுந்துள்ளதை உறுதிப்படுத்தியபின் அதை களைவதற்கான சடங்கு நிகழ்த்தப்படுகிறது.*

> ஒரு வெள்ளைத் துணியை எடுத்துக் குழந்தையைச் சுற்றிப் பின் வயித்தைதத் தடவும் போது பேய்க் கண்ணு, ஊரார் கண்ணு, வந்தார் கண்ணு, இருந்தார் கண்ணு எனச் சொல்லி, பின் அதைத் தீ பத்த வச்சு சொம்பில் போடணும். கொஞ்ச நேரம் கழிச்சு ஒரு பாத்திரத்துல கொஞ்சம் தண்ணி விட்டு அதில் கழுத்தித் தட்டணும், துணி தண்ணியை உறிய உறிய குழந்தை அழுகையை நிறுத்தும்.[64]

*குழந்தையின் அழுகையை நிறுத்த மற்றொரு சடங்கும் நிகழ்த்தப்படுகிறது.*

குழந்தையும் தாயையும் நிர்வாணமாக விட்டு தாய் ஒரு முட்டையை எடுத்து, குழந்தையின் தலை உடம்பு முழுசும் மூன்று தடவைச் சுற்றி, பின் தலை வழியாக இரண்டு காலுக்கும் இடை வழியா எடுத்து, இப்படி மறிக்கடக்கா மூன்று முறை எடுத்து மூணு தலையைச் சுற்றிட்டுத் தீயில் போட்டுட்டுத் திரும்பிப் பார்க்காம வேற ரூமுக்கு வந்திரணும். முட்ட வெடிச்சுத் செதறுற அளவுக்குக் கண்பேறும் போகும். எல்லாரும் தூங்குன பொறகுதான் செய்யணும். அந்த ரூமுல அடுத்த நாள் வர யாரும் போகக் கூடாது[65]

*கண்ணேறு கழிக்கும் சடங்கில் சில அறிகுறிகள் மூலம் அதன் தீமை அகற்றப்படுகிறது.*

*கண்ணேறு கழித்தல் குறித்த நம்பிக்கையில் குமரி மாவட்ட இசுலாமியர் அனைத்துச் சமூக மக்களின் நம்பிக்கையுடன் உடன்படுகின்றனர். சமய மாற்றம் இதில் எவ்வித மாற்றத்தையும் விளைவிக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.*

## ஆவிகள் குறித்த அச்சமும் நம்பிக்கைகளும்

‘*அனிமிசம்*’ (Animism) *என்ற ஆவியியம் உலகளாவிய செல்வாக்கினைக் கொண்டது. சமயத்தின் தொடக்க நிலையாக ஆவியியம் கருதப்படுகிறது.*

ஆவி உயிர்கள் மீதான நம்பிக்கையாகிய ஆவியியம் என்ற கருத்தாக்கம் சமயம் பற்றிய குறைந்தபட்ச வரையறையாகும்[66]

*என ஆவியியம் சமயத்தின் முன் வடிவமாக உணர்த்தப்படுகிறது. தமிழ்நாட்டிலும் கேரளத்திலும் நிறுவனச் சமயங்களுக்கு இணையாக ஆவி வழிபாடு உள்ளது.*

*இறந்தபின் உயிர் ஆவி நிலையை அடைந்து இயங்குகிறது என்பதே ஆவியியத்தின் அடிப்படை.*

ஓர் உடம்பை விட்டு உயிர் பிரியும் போது என்ன நிகழ்கின்றது ? ஒருவனின் உயிர், ஒருவனின் மூச்சு எங்கே செல்லும் ? தொல் பழங்கால மனிதன் இதனைக் கவனித்தறிந்து, இறப்பு இறுதியானது என்பதை நம்ப மறுத்தான். மேலும் இறந்த ஒருவன் இங்கும் அங்கும் இயங்கிப் பேசுவதை ஒருவன் கனவில் காணக்கூடும். தொல் பழங்குடி மனிதனுக்கு விழிப்புநிலை கனவுலகைவிட உண்மையில் குறைந்ததன்று.[67]

*ஆவிகள் தங்களைச் சுற்றி இயங்குகின்றன என்ற நம்பிக்கை போன்றவை இவர்களிடமும் ஆழமாகப் பதிந்துள்ளன.*

*குமரி மாவட்ட இசுலாமியர் ஆவிகளை வழிபடுபவர்களல்லர். இசுலாம் சமயம் நன்கு வரையறுக்கப்பட்ட கோட்பாட்டினை உடையது. எனினும் ஆவிகள் பேய்கள் குறித்த நம்பிக்கை போன்றவைகள் இவர்களிடமும் ஆழமாகப் பதிந்துள்ளன.*

செத்த அன்னிக்கு வந்தவங்க அடக்கம் முடிஞ்சதும் போயிரணும். இல்லைனா மூணா நாளு விருந்து முடிச்சப்ப போணும். அடுத்த நாளு போனா அந்த ஆவி கூடயே வரும்.[68]

*நாட்டாரின் இவ்வாய்மொழி ஆவி குறித்த நம்பிக்கையைத் தெளிவாக உணர்த்துகிறது.*

*ஆவிகள், கனவுகள் மூலம் மனிதருக்குத் தங்கள், இருப்பை உணர்த்தும் என்ற நம்பிக்கையும் குமரி மாவட்ட இசுலாமியர்களிடையே நிலவுவதை அறியலாம்.*

அடக்கம் செய்யப்பட்ட தாயின் பிறையில் வருடா வருடம் நடைபெறும் கந்தூரி விழாவிற்கு கொடி கட்டுவதற்கு இரண்டு நாட்களுக்கு முன்...[69]

பக்தி மேலோங்க பயந்தபடி பதில் கூறிவிட்டு நபி பெருமாளைக் கண்ணால் கண்டுவிட்ட பெரும் ஆனந்த அதிர்ச்சியில் கீழே விழுந்துவிட்டார்[70]

*போன்றவைகள் இறைநம்பிக்கையும், முன்னோர் நம்பிக்கைகளையும் விளக்குகிறது.*

கல்லறைப் பக்கம் கர்ப்பிணிப் பெண் போய் விட்டு வீட்டிற்கு வந்த ஓடனே ஒரு முட்டையை எடுத்து, தலையைச் சுற்றி நாலு பக்கமும் ஒக்காட்டு காட்டி விட்டு பின் கல்லறைப் பக்கம் வீசி எறிவோம் . . .[71]

*பூ தலையில் வைப்பதற்கு முன் மூன்று முறை துப்புனப் பிறகுதான் வைக்கணும். பூ சுத்தமானது. சுத்தத்தின் காரணமாகப் பேய் அதை விரும்பக் கூடும். இரவில் எங்குப் போனாலும் பேசக் கூடாது. காரணம் இறந்தவர்கள் கேட்பார்கள் முதலான நம்பிக்கைகள் இருந்து வருகின்றன. ஆவிகள் ஏமாற்றும் குணமுடையன. வெளியிலிருந்து வீட்டுக்கு வரும் மனிதர்களுடன் ஆவிகளும் வீட்டிற்குள் புகுந்துவிடும். இரும்புத்துண்டு தொறப்பா போன்றவை ஆவியின் வருகையைக் கட்டுப்படுத்தக் கூடும்.*

*குமரி மாவட்ட இசுலாமியரிடையே வழங்கும் நம்பிக்கை தொடர்பான வழக்காறுகள் ஆவி குறித்ததான நம்பிக்கையை உறுதிப்படுத்தவனவாக அமைகின்றன. சமய மாற்றத்திற்கு முன் இருந்த நம்பிக்கைகளோடு சமய மாற்றத்தின் காரணமாகப் புதிய நம்பிக்கைகளும் இணைந்துள்ளன.*

**மந்திரம் குறித்த நம்பிக்கைகள்**

*குறிசார் நம்பிக்கைகள் எதிர்காலத்தை முன்னிறுத்துகின்றன. மந்திர நம்பிக்கைகள் இதற்கு மாறாக எதிர்காலத்தை மாற்றி அமைக்கின்றன.*

1. *மழை பெய்வதற்குக் கொடும்பாவி கொளுத்தல்*
2. *மாந்திரிகம் சார்ந்த நம்பிக்கைகள் நோய் தீர்க்கும், பேய் ஓட்டும்.*
3. *குறி பார்க்கும் சடங்குகளில் ஒரு குறிப்பிட்ட சொல் அல்லது சொற்றொடரை மீண்டும் மீண்டும் உச்சரித்தல்.*

> விஷக்காய்ச்சல் மேலும் பரவாமலிருக்கவும், வந்தவர்களுக்கும் காய்ச்சல் வேகமாக இறங்கி குணமடைவதற்கும் கோபம் கொண்டு தெருவைப் பாராமலிருக்கும் அஞ்சு வண்ணம் தெருவின் ஆதி தாயை திருப்திப்படுத்த தாயிடம் மன்னிப்புக் கேட்டு, தாயின் மனம் ... நிசப்தத்தில் அழுது வேண்டினால் தான் தாய்க்கு இரக்கம் தோன்றும்...[72]

*என்பதில் நம்பிக்கை, வழிபாட்டுச் சிந்தனைகள் எடுத்துக்காட்டப்படுகிறது.*

> நாய் குரைத்துக் கொண்டேயிருந்தது. உடன் வேறு கொஞ்சம் நாய்கள் நுளைக் குடியிலிருந்து பதிலுக்குக் குரைத்தன.
> கடற்கரை வழியாச் சென்ற உருவம் முன்னைவிட வேகமாக நடந்தது.
> ஷைத்தானாடா ?[73]

> அவன் பல உருவங்களில் வந்து ரத்தம் குடிப்பான். ஆடு, எருமை, காளை, பன்றி, கழுதை என்று பல மிருகங்களின் உருவத்திலும் வருவான். துர்மரணமடைந்து தெருவில் நாறிக் கிடந்தவனுடைய சடலம். ஷஹாதத்து கலிமா சொல்லாமலும் பள்ளிவாசல் மய்யத்தாங்குழியில் அடக்கம் செய்யாமலும் முள்க்காட்டில் நாய்க்கு ராமானம் யாரோ தூக்கிக் குழியெடுத்து மூடப்பட்டவனுக்குச் சொர்க்கம் இல்லையென்றும் எந்த உருவம் எடுத்தும் அவனால் நடமாட முடியுமென்றும் . . .[74]

> வெள்ளிக்கிழமை ஜீம்ஆ தொழுகை நேரம் அல்லாஹ் எல்லா ஷைத்தான்களையும், மலக்குகளை ஏவிச் சங்கிலியில் கட்டிப் போடுவான். தொழுகைக்குப் பின் கட்டவிழ்த்து விடப்படும் . . .[75]

*மேற்காணும் வகையில் நம்பிக்கை, வழிபாடு, மந்திரம், கடவுள், முன்னோர் பற்றிய வழிபாடு போன்றவைகளையும் இனங்காணமுடிகிறது.*

*இங்கு இமாம் பூசாரிக்கு நிகராகிறார். குப்பியில் தண்ணீரை அடைத்து மந்திரம் சொல்வதன் மூலம் சக்தி ஏற்றி வீட்டில் புதைத்து வைப்பது இசுலாமியச் சடங்காக அமைகிறது. மெக்காவிலிருந்து கொண்டு வரும் தண்ணீரும் புனித நீராகக் கருதப்படுகிறது. ஓதுவதின் மூலம் குப்பியில் அடைத்த தண்ணீருக்கும் சக்தி ஊட்டப்படுகிறது.*

*இறைவனின் திருநாமத்தை 99 தடவை எழுதி, இசுமி கட்டும் வழக்கம். இதற்கு மாற்றுக் குறியாக அல்லாது இதனோடு இணைந்து செய்யப்படும் குறியாக அமைகிறது. இசுமி கட்டுதல் திரிபு வடிவமாக அமைகிறது. சமய மாற்றத்திற்குப்பின் இவ்வாறு திரிபடைந்ததின் மூலம் வழக்காறு தொடர்ந்துள்ளது.*

**மருத்துவம் குறித்த நம்பிக்கைகள்**

*குமரி மாவட்ட இசுலாமிய மக்களிடையே நோய்க்கான மருத்துவமும், நம்பிக்கையின் அடிப்படையில் நிகழ்த்தப்படுகிறது. இம்மருத்துவம் சடங்கு அடிப்படையில் நிகழ்த்தப்படுகிறது. மருத்துவக் குணம் கொண்ட பொருள்கள் இச்சடங்கில் இடம்பெற வேண்டும் என்பதில்லை.*

> குழந்தைக்கு உளுக்கும் போட்டிச்சினா மாமன்காரனோட துணியப் போட்டு ரெண்டு பேரு ஆட்டணும். அல்லது கழுவுல குழந்தையப் போட்டு கூட துணைக்குச் சங்கப் போட்டு, மூணு முற ஆட்டி மூணு தடவப் போட்டு எடுக்கணும்[76]

*என்ற நம்பிக்கை வழங்கி வருகிறது.*

*குழந்தையைப் புடைப்பதன் மூலம் அதன் உடம்பிலுள்ள தீய விளைவுகளை நீக்க முடியும் என்ற நம்பிக்கையில் இது நிகழ்த்தப்படுகிறது. இந்த நம்பிக்கையைக்*

குமரி மாவட்ட இசுலாமியர் பிற சமூகத்தோடு பகிர்ந்து கொள்கின்றனர். மற்றும் கர்ப்பிணிப் பெண் ஆறு (மாலை) மணிக்கு மேல் வெளியே செல்லல் கூடாது.

1. தேரை தோசம்
2. கைகால் மெலிவு
3. வீங்கிய வயிறு
4. முகம் மெலிவு
5. பெரிதான தோற்றம்
6. அம்மை நோய்

போன்ற நோய்களும் அதற்கான மருத்துவம் வாழ்வியல் சார்ந்த நம்பிக்கைகளும் பின்பற்றப்பட்டு வருகின்றன.

7. குழந்தைப் பேற்றிற்கான நம்பிக்கை

பிள்ளைப் பூச்சியைப் பழத்தில் வைத்து முழுங்கும் நம்பிக்கை இருக்கிறது.

‘அஞ்சு வண்ணம் தெரு’ புதினத்தில் நோயும், மருத்துவ நம்பிக்கையும் எடுத்துரைக்கிறார்.

> வைசூரி (அம்மை) வந்தாலும், வாந்தி பேதி (காலரா) வந்தாலும் மஹமூதப்பா பிறையில் கொடியேறும் போது தெருச்சனங்கள் அடக்கம் செய்யப்பட்ட தாய்க்கு உசர் அப்பம் நேர்ச்சை கொடுப்பதாக நேர்தல் வழக்கம் . . . மாறி மாறி அடியும் நடக்கும். மனசு குளிர்ந்து விட்டால் தாய் அஞ்சு வண்ணம் தெருவிற்குள் கொள்ளை நோய் நுழைய உத்தரவு கொடுக்கமாட்டார்கள்.[77]

உலகெங்கும் வைசூரி நோயைப் பரப்பும் மண்டைக் காட்டு அம்மைகூட அடக்கம் செய்யப்பட்ட தாய் போடும் கட்டளையை மீறுவதில்லை என்னும் உயர்ந்த தெய்வ நம்பிக்கை இருந்து வழங்கி வந்ததைக் காணமுடிகிறது. வேப்பிலை வைத்து வழிபாடு செய்த முறைகளையும் காணலாம்.

### குழந்தைப் பேறும் குழந்தை வளர்ப்பும்

குடும்பம், உறவுநிலை என்னும் தலைப்பில் முன்பு அணுகினாலும் சிறப்பான நிலையில் காணும் போது, உயிரினங்கள் அனைத்தும் இளங்கன்றுகளைப் பாதுகாப்பாக வளர்ப்பதில் முனைப்புக் கொள்கின்றனர். மனித சமூகம் பழங்குடி நிலையில் குழந்தை வளர்ப்பைச் சமூகக் கூட்டுப் பொறுப்பாகவே மேற்கொண்டுள்ளது. எனவே,

1. குழந்தைப்பேறு
2. குழந்தை வளர்ப்பு

தொடர்பாக, குமரி மாவட்ட இசுலாமியர்களிடையே, பல்வேறு நம்பிக்கைகள் வழக்கிலுள்ளன. இந்நம்பிக்கைகளை,

1. சமயம் சார்ந்த நம்பிக்கைகள்
2. சமயம் சாராத நம்பிக்கைகள்

என இரண்டாக வகைப்படுத்தலாம்.

குழந்தை பிறந்ததும், வலது காதில் பாங்கும் இடது காதில் இஹாமத்தும் ஓதுவது என்பது சமயம் சார்ந்த நம்பிக்கையாக அமைகிறது.

1. ஆரோக்கியம்
2. சமயப் பற்று

இரண்டும் குழந்தைக்குக் கிட்டும் என்னும் நம்பிக்கை குமரி மாவட்ட இசுலாமியர்களிடையே உள்ளது.

குழந்தையைத் தர்காவில் உறையும் புனிதரின் அருள் பாதுகாக்கும் என்ற நம்பிக்கையும் உள்ளது. இதற்கான சிற்சில சடங்குகளும் நடைபெறுகின்றன.

1. குழந்தை இரவுல பயந்து அழுதா யாசின் ஓதிக்கட்டுதல்
2. மேலும் கரஞ்சா தர்காவுக்குக் கொண்டு போய் ஓடியடிப்போம்
3. தர்காவுக்குக் கொண்டு போய் அந்த மகான அடக்குன எடத்துல மூணு முறை குழந்தையைச் சுத்துதல்.
4. அப்போது 31 ரூபாய் கொடுப்பது.
5. தண்ணீல பூவப் போட்டுத் தருவா அந்தப் பூவ தள்ள சாப்பிடணும். தண்ணிய வீட்டுல ஒரு இடத்துல வைக்கணும்.
6. அப்போது குழந்தை அழாது

குழந்தை இரவில் பயந்து அழுவது, தீய ஆவிகளைக் கண்டு என நம்பப்படுகிறது. தர்காவுக்குக் குழந்தையைக் கொண்டு செல்லும் போது தீய ஆவி குழந்தையை விட்டு விலகிவிடுகிறது. கோரியை மூன்று குழந்தையைக் கொண்டு சுற்றும் போது தர்காவில் உறையும் மேலான சக்திக்கும் அருளுக்கும் உட்படுகின்றனர். கோரியின்மீது இடப்பட்டிருக்கும் பூ அச்சக்தியைச் சேமித்து வைக்கிறது. அதை

தண்ணீரில் விட்டு வீட்டிற்கு எடுத்துச் செல்வதன் மூலம் மேலான சக்தி, குழந்தை, வீடுகளையும் பாதுகாக்கிறது.

> பிறந்த குழந்தையைத் தாயைத் தவிர மாமன் சித்தி வெளியில கொண்டு போவலாம் ஏன்னா அவங்க மேல காத்து கறுப்பு அண்டாது. ஆனா அவங்களும் இரும்புத் துண்டை வைத்திருப்பாங்க . . .[73]

காத்து கறுப்பு என்பது பேய்களைக் குறிக்கின்றன. சங்க காலம் முதல் தொட்டுத் தொடர்ந்து வரும் தமிழர்களின் நம்பிக்கைகள் ஆகும்.

**தீட்டு**

குமரி மாவட்ட இசுலாமிய மக்களிடையே தீட்டு குறித்ததான நம்பிக்கைகள் நிலவி வருகின்றன. மாத விலக்கான நாட்களில் தீட்டு தமிழர் வாழ்வில் சங்க காலம் முதல் தொடர்ந்து வருகிறது. இதே காரணத்தினால் தான் பெண் அனைத்துச் சமயங்களிலும் வழிபாட்டினை முன்னெடுத்துச் செல்லும் தகுதி கொண்டவர்களாகக் கருதப்படுதவில்லை. மாத விலக்கான நாட்களில் வழிபாடு தொடர்பான எதையும் செய்யும் உரிமை அவர்களுக்கு மறுக்கப்பட்டது. 'தொழக் கூடாது. பள்ளி, தர்கா போகக் கூடாது'[79] என்னும் கட்டுப்பாடு இசுலாமிய சமூகத்தில் இன்றும் உள்ளது.

> தீட்டுத்துணி பாதுகாக்கப்படுகிறது. அத்துணி அசுத்தம் அடைந்தால் அது பெண்ணிடமும் தீய விளைவுகளைத் தோற்றுவிக்கக் கூடும். துணியை பத்திரப்படுத்தி வைக்கணும். திருமணத்துக்கு முன்ன துணிய பல்லி, பாச்சா மோந்து பாத்தா குழந்தை கிடைக்காது. திருமணத்துக்குப் பின் குழந்தை பொறந்த பின் முகந்து பாத்து கொள்ளப்படும்.[80]

திருமணம் ஆகாத பெண்ணுக்குக் குழந்தைப் பேற்றை இல்லாது ஆக்கும் போது, குழந்தை பிறந்த பெண்ணிற்கு நோய் வரும் முதலான நம்பிக்கை வழங்கி வருகிறது.

**வருவதை உணர்த்தும் குறிகள்**

குமரி மாவட்ட இசுலாமியர் பல வாழ்வியல் நிகழ்வுகளை வருவது உணர்த்தும் குறிகளாக நம்புகின்றனர். களஆய்வின் வழியும் இத்தகைய நம்பிக்கைகளைத் திரட்டி முடிந்தது. கனவு எதிர்காலத்தை உணர்த்தும் என்பதில் நம்பிக்கைக் கொள்கின்றனர். மேலும்,

1. வருவதை உணர்த்தும் குறிகளை வாழ்வில் மனிதனால் தடை செய்ய இயலாத நிகழ்வுகள்
2. கனவில் வெளிப்படும் குறிகள்

என இரண்டாக வகை செய்து கொள்ள இயலும்.

1. காகம்
2. பல்லி

தொடர்பான நம்பிக்கைகளும் இருந்து வருகின்றன.

மனிதனால் தடை செய்ய இயலும் நிகழ்வுகளும் வருவது உணர்த்தும் குறிகளாக அமைகின்றன.

1. திருமணம் முடிந்து பதினாறு நாள் வரை மீன் உண்பது.
2. பெண்கள் வெறுங்குடத்துடன் வரும் போது எதிரே செல்வதும்
3. இரவு நேரத்தில் தலை வாருதல்
4. நகத்தை வெட்டி வீட்டிற்குள் எரிவது

மேற்கண்டவை தீங்கை முன்னறிவிக்கும் குறிகளாகக் கருதப்படுகின்றன. ஆனால், இத்தகைய செயல்களைச் செய்யாதிருந்தால் வரப்போகும் தீமையைத் தவிர்த்து விடவும் கூடும்.

சகுனம் எதிர்ப்புப் பார்த்தல் போன்ற நம்பிக்கைகளையும் குமரி மாவட்ட இசுலாமியர்களிடையே காணமுடிகிறது.

1. பூனை குறுக்கிடுதல்
2. கால் தட்டுதல்

போன்ற நம்பிக்கைகளும் இவர்களிடம் உள்ளன. ஆனால் இதற்காக நிகழ்த்தப்படும் பரிகாரங்கள் வேறுபடுகின்றன. தர்காவிற்குச் சென்று காணிக்கை இடுவதின் மூலம் வரவிருக்கும் தீமையைத் தவிர்த்துவிட முடியும் என்னும் நம்பிக்கைக் கொள்கின்றனர்.

**இசுலாமியர் தர்காக்களும் வழிபாட்டு நம்பிக்கைகளும்**

இசுலாம் ஒரு நிறுவன சமயம். அது தனக்கேயுரிய ஒழுங்கமைப்பினையும், உறுதியான சமயக் கோட்பாடுகளையும் கொண்டுள்ளது.

1. இசுலாமியச் சமயக் கோட்பாட்டின் அடிப்படையில் இன்று தர்க்காக்களின் இருப்பு கேள்விக்குள்ளாக்கப்படுகிறது. எனினும் தர்க்காக்கள் மக்களை ஈர்க்கும் வழிபாட்டிடங்களாகவே இன்றும் நிலை பெறுகின்றன.
2. தர்கா வழிபாட்டு முறை, தர்க்காக்களைப் பொறுத்து மாறுபடுகிறது.
3. எழுத்து வடிவிலான வழிபாட்டு முறை இதற்கில்லை. தர்காக்கள் அவற்றைச் சார்ந்த வாய்மொழி வழக்காறுகளில்தாம் நிலை கொள்கின்றன.
4. அனைத்துத் தர்கா வழிபாடும் ஒன்று போல் அமைவதில்லை. தர்காக்கள், பள்ளி வாசலைப் போன்று ஒழுங்கமைவிற்கு உட்பட்ட வழிபாட்டிடமாக அமைவதில்லை.
5. ஒவ்வொரு வாரத்திலும் ஓரிரு நாட்களில்தான் வழிபாடு நிகழும். சிறப்பு வழிபாடு வருடத்திற்கு ஒருமுறை நடைபெறும். விழாக்களின் போது தான் நிகழும்.
6. விராலிக்காட்டுவிளை வர்தாரி பெத்த அப்பா தர்காவில் வறத்த மாவு முக்கியமாகப் படைக்கப்படுகிறது.
7. கலைமான் சாகில் தர்காவில் நெல்படைப்புப் பொருளாக அமைகிறது.

தர்கா வழிபாட்டின் போது, இயற்கைக்கு அப்பாற்பட்ட சக்திகளின் மீது வழிபாட்டுக் குழுவினர் முழுமையான நம்பிக்கை கொள்கின்றனர்.

> சமய வழிபாட்டு அனுபவங்களோடு பல வழிபாட்டு நடத்தைகளும் அடிப்படையாகக் காணப்படுகின்றன. சாந்தி செய்தல் (Propitation), தூய்மை, கழுவாய் தவிர்த்தல், விளக்குத் துறவு, கோரிக்கைக் கூத்தாட்டம் (Orgies), வெளிப்படுத்தல் (Revelation), குறிகூறல் (Divination), சடங்கு, மாந்திரம் போன்றவை அந்த அடிப்படைத் தத்துவங்களாகும்.[81]

மேற்கண்ட வழிபாட்டினை 'தர்கா' வழிபாட்டிலும் இனங்காண முடிகிறது.

தர்கா சமாதியில் இருக்கும் புனிதர் வாழும் காலத்தில் விரும்பி உண்ட உணவுப் பொருட்கள் குறை தீருவதற்கு வேண்டுதலாகப் படைக்கப்படுகின்றன.

> புலியூர்க்குறிச்சி ஹானஸா ஒலியுல்லா தர்காவில் அவர் விரும்பி உண்ட சேவல் கோழி பிரியாணியைக் குறைதீர்த்ததின் நன்றிக் கடனாகப் படைக்கின்றனர்.[82]

மேலும் தர்காவில் நிறைந்திருக்கும் புனித ஆன்மாவிற்கும், நாட்டார் தெய்வங்களுக்குமிடையே தொடம்பும் சில தர்காக்களில் கற்பிக்கப்படுகிறது.

'சேனம்மா' தர்காவில் புனிதரான சேனம்மாவிற்கும் அதன் அருகில் இருக்கும் மாடனான சேனாண்டனுக்கும் இடையே நட்பு இருப்பதாக நம்பப்படுகிறது.

**அரேபியப் போர் தொடர்பான வரலாறுகள்**

தோப்பில் முகமது மீரான் படைப்புகளில் 'குடியேற்றம்' என்னும் புதினத்தில் போர், போராட்டங்களை எடுத்துக்காட்டுகிறார். பல தர்காக்களில் தர்காவின் தோற்றம் குறித்த அச்சு வடிவமான கையேடு உள்ளது. பெரும்பாலான இக்கையேடுகள் குறிப்பிட்ட தர்காவையும், அரேபியாவில் நடந்த போரையும் தொடர்புப்படுத்தியுள்ளன. அரேபியாவில் நபிகளின் காலத்தில் நடந்த புனிதப் போர்களில் கலந்து கொண்டவர்களின் போரில் வீழ்ந்ததனால், அவர்கள் உடலின் ஒரு துண்டு இங்கு வந்து வீழ்ந்ததாகவும் அதற்குக் கட்டப்பட்ட சமாதி இது என்றும் குறிப்பிடுகின்றனர். அரேபிய மண்ணில் இசுலாமியச் சமயம் நிலைபெறுவதற்கான போர்க்களங்களில் கலந்து கொண்டவர்களின் நினைவிடங்களாகத் தர்காக்கள் ஏற்பினைப் பெறுகின்றன.

பஞ்சலிங்கபுரம் - ஷால்ஹமீது தர்கா சான்றாகக் கூறலாம்.

**அன்றைய அராபிய சமூகச் சூழல்**

ஒரு மதத்தின் தோற்றத்தின் காலம், அக்காலத்தின் சமூகப் பொருளாதார அரசியல் சூழல், சமூக சக்திகள், உற்பத்தி சக்திகளின் வளர்ச்சிக் கட்டம், அதன் மீது அன்று கட்டப்பட்டிருந்த மேல் கட்டுமானம், ஆதிக்க சக்திகளின் செயல்பாடுகள், அன்றிருந்த கலாச்சாரம், நாகரீக கட்டம், இத்தியாதி சூழல்களின் அடிப்படையில் தான் முழுமையாகப் புரிந்து கொள்ள இயலும்.

> 'இஸ்லாம்' என்றால் அராபிய மொழியில் அடிபணிதல், முழுமையாக ஒப்புக் கொடுத்தல், கீழ்ப்படிதல் என்று அர்த்தமாகும். அல்லாஹ் அதாவது பெயரில்லாத, உருவமில்லாத, நிறமில்லாத, அடையாளம் காட்ட முடியாத, வடிவமில்லாத இப்பிரபஞ்சத்தின் ஒரே சக்தி பிரபஞ்சத்தை படைத்தவன், ஞானமானவன் எல்லாம் அறிந்தவன், கருணை மிக்கவன், தீர்ப்புக் கூறுபவன் இத்தகு அல்லாஹ்வுக்கு கீழ்ப்படிதல், முழுமையாக அடிபணிதல் சரணடைதல் (Obedience, submission, surrender) என்பதே இஸ்லாம் எனப்படுவது[83]

என்னும் நம்பிக்கையை இசுலாம் மக்களிடையே காணப்படுகின்றன.

*அரேபியாவின் பிரமாண்ட பாலைவனப் பகுதியின் ஓரத்தில் அமைந்திருந்த நகரமான மெக்காவில் தான் இஸ்லாம் தோற்றமெடுத்தது. இப்பாலைவனமே 'அல்-ராப் அல்கரி* (Al-Rabalkhali) *அதாவது காலில் பிரதேசம் என்று அன்று அறியப்பட்டிருந்தது. மெக்காவும், மெதினாவும் அரேபியாவில் வட பகுதியைச் சார்ந்தவையாகும்.*

*கால்நடை மேய்ப்பதும் கொள்ளையடிப்பதும் கூட இவர்களின் வாழ்க்கைத் தொழிலாக இருந்தது. ஒட்டகம், குதிரை, ஆடு, மாடு வளர்ப்பதும், இதர இனக் குழுக்கள் மீது திடீரெனப் படையெடுத்துச் சூறையாடுவதும் வாழையடி வாழையாக இவர்களின் பொருளாதார அடிப்படையாகிவிட்டிருந்தன.*

> இம்மக்களின் சமூக வாழ்க்கை புராதனமானது. பல அம்சங்களில் அருவருக்கத் தக்கவையாகவும் இருந்தது. சிசுக்கொலை சர்வ சாதாரணம். பெண்கள் கால்நடைகளாகவே பார்க்கப்பட்டனர். ஆண்களின் உடற்பசிக்குத் தீனியாகவே பார்க்கப்பட்டனர். மதுவும் சூதாட்டமும் பெருகி இருந்தன. நாட்டுப்பற்று தனிநபர் உரிமை தெளிவாகவில்லை என்று கே.எல்.கவுபா (Khalid Latif Gauba) பாலைவனத்தின் நபி (Prohet of the Desert) என்ற தனது புகழ்பெற்ற நூலில் குறிப்பிடுகின்றார்.[84]

*வடக்கு, தெற்கு அராபியப் பிரதேசங்களின் அக்கால வாழ்நிலை வேறுபாடுகளை ஆய்வு செய்யுங்கால் வாழ்க்கைக்குத் தேவையானவற்றை உருவாக்கிக் கொள்கின்ற உற்பத்தி முறையைச் சுற்றியே, உற்பத்திப் பொருள்களைச் சார்ந்தே ஒரு சமுதாயம் அமைகின்றது எனக் காணலாம். இதில்,*

1. *மதம்*
2. *கலாச்சாரம்*
3. *அரசு*
4. *வேளாண்மை*
5. *பயிர் விளைச்சல்*
6. *பண்ட மாற்றம்*
7. *கிராமங்கள்*
8. *வாணிப நகரங்கள்*
9. *சமூக உறவுகள்*
10. *சமூகவமைப்புகள்*
11. *வழிபாட்டுத் தலங்கள்*

*12. தெய்வங்கள்*

*13. சடங்கு சாத்திரங்கள்*

*14. அரசு*

*15. ஆட்சி முறை*

*16. சட்டதிட்டங்கள்*

*17. ஒழுங்கு கட்டுப்பாடு*

*போன்ற பொருத்தமான அமைப்பு முறையை விவசாய சமூகம் ஏற்படுத்திக் கொள்கிறது என்பது தெளிவாகும்.*

> ஆனால் மெக்கா நிலப்பரப்பு விவசாய மற்ற, மழைநீர் இல்லாத பாலைவன பூமி. ஆயினும் தெற்கிலிருந்தும், வடக்கே சிரியா, பாபிலோனியா போன்ற பிரதேசங்களிலிருந்தும் வந்து சேர்ந்த விக்கிரக வழிபாடு, கல்லால் உருவாக்கப்பட்ட மனித உருவச் சிலைகள் முகமது நபிகள் போதனைகளை துவக்கியபொழுது மெக்காவிலும் சுற்றிய பிரதேசங்களிலும் நிறைய காணப்பட்டன. இவை பெதூயின்கள் உருவாக்கிக் கொண்ட தெய்வங்கள் அல்ல. மெக்காவின் க அபாவிலேயே 360 விக்கிரகங்கள் இருந்தன.

*இதில் முதன்மை முக்கியத்துவம் பெற்றிருந்த கடவுள் வடிவமான ஹோபால்* (Hobal) *எனப்பட்ட உருவச்சிலை சிரியாவின் பெல்கா பகுதியிலிருந்து மழை வரவழைப்பதற்காக கொண்டு வரப்பட்டதாக தெரிகிறது.*

> பத்ர் போரின் மாபெரும் வெற்றி முகமதுவின் அந்தஸ்தை, புகழை, அராபியர் மத்தியில் உயர்த்திக் காட்டியது. சுற்று வட்டாரத்தில் இருந்த பெதூயின் இனக்குழுக்கள் முகமதுவை இறைத்தூதனாக ஏற்றுக் கொண்டனர்.[86]

*அன்றைய அராபிய சூழலில் ஒரு சிறந்த சமுதாயத்தையும் கட்டுப்பாட்டுடன் சட்ட ரீதியாக இயங்கும் ஓர் அரசையும் அமைக்கும் பணியில் இவற்றைக் காணமுடிகிறது.*

**இஸ்லாமிய நவீனமய சீர்திருத்தம்**

*தனிமனித வழிபாட்டு உரிமை என்பது நவீன கால தனிமனித உரிமை என்ற கருத்தியலுக்கு இட்டுச் செல்லும் ஒரு சாதனமாகும். ஆதலால் நவீனமயம் மற்றும் மதச் சார்பின்மை ஆகியவற்றை அத்தியாவசியமாக்கும் சமுதாயச் சூழல்கள் தோன்றிவிட்ட கூட்டத்தில் தனிமனித மதநம்பிக்கை இதன் வளர்ச்சிக்கு உதவும் தடைக்கல்லாக இராது.*

*ஆயினும் நபிகளுக்குப் பிறகு வந்த கலீபாக்கள் ஆட்சியாளராகவும், மத பீடங்களாகவும் செயல்பட்டு வந்தனர். ஆனால் அஸ்லாம் சாம்ராஜ்ய வடிவம் எடுத்து வந்த கட்டத்தில் எதிர்ப்பு கிளம்பியது. இவை குறிப்பாக விரிந்து வரும் சமூக ஏற்றத்தாழ்வுகளுக்கு எதிராகவே துவங்கின என்று ஈரானின் இஸ்லாமிய அறிஞர் முகமது ஷல்குனி கூறுகிறார்.*

*அண்மைக் காலத்தில் குறிப்பாக 20 ஆம் நூற்றாண்டில் குரானைப் பற்றிய புதிய வியாக்கியானங்கள், பகுத்தறிவுக்கு ஒத்த வகையில் வெளிவரத் தொடங்கியுள்ளன. இவை இசுலாமை புதிப்பிப்பவை என்று நவீனமய இசுலாமியர்கள் மத்தியில் வரவேற்பைப் பெற்று வருகின்றன.*

> குரான் முகமது நபிகளுக்கு வெளிப்படுத்தப்பட்ட அல்லாவின் வார்த்தைகள் அப்படியே எழுதப்பட்டுள்ள நூல் என்று முஸ்லீம்கள் நம்புகின்றார்கள். கிறிஸ்தவர்களும், யூதர்களும் இறைத் தூதர்களின் போதனைகள் இறைவனின் வெளிப்பாடுகள் என்றுதான் கூறுகின்றனர் என்று இ.செல்னர் சுட்டுகிறார்.[87]

*குரானின் மூன்றில் ஒரு பகுதி கட்டளையிடுகின்ற வசனங்கள் (அஹ்கம்) இதிலும் பெரும் பகுதி வழிபாட்டுப் பிரார்த்தனை (இபாதத்) மற்றும் மத ஆசாரங்களைப் பற்றியதாகும். சுமார் 6,600 குரான் வசனங்களில் சுமார் 200 சமூகப் பிரச்சனைப் பற்றியவையாக உள்ளன.*

*எனவே குரான் ஒரு சமூக சட்ட விதிகள் அடங்கிய புனித நூல் ஆகும். சட்டப் புத்தகம் என்றும் சொல்லலாம். அரசியல் கூட்டமைப்புச் சட்ட நூல் என்று கூட சொல்லலாம். நபிகள் நாயகம் மத போதகர், ஆட்சித் தலைவர், படைத்தலைவர், சமூகக் கூட்டங்களையும் விதிகளையும் உருவாக்கியவர் ஆகிய ஒற்றை ஆணையாளர்.*

*இந்த கூட்டங்களும் விதிகளும் முகமது நபிகளுக்குப் பின் சில நூற்றாண்டுகளில் தொகுக்கப்பட்டு பல வியாக்கியானங்களுக்கும், விமர்சனங்களுக்கும் விளக்கங்களுக்கும் உட்படுத்தப்பட்டு வந்தன.*

*10 ஆம் நூற்றாண்டிற்குள் குரானின் தொகுப்புகள் உறுதி செய்யப்பட்டன. நிலையானவையாக்கப்படடன. அதற்குப் பிறகு என்றுமே மாறாதவையாக, மாற்ற முடியாதவையாக இறைவனின் அணையாக நம்பப்பட்டு வருகின்றன.*

> Verily never God will change the condition of a people until they change it themselves. ஒரு சமுதாயம் தங்களுடைய நிலைமையை தாங்களே மாற்றிக் கொள்ளாதவரை அல்லா ஒரு போதும் மாற்றிடமாட்டான்.[88]

*ஆகையினால் மக்கள் தான் தங்களது முன் முயற்சியால் தங்களது நிலைமைகளை, அவலங்களை மாற்ற நடவடிக்கை எடுக்க வேண்டும் என்பது எடுத்துரைக்கப்படுகிறது.*

*இஸ்லாம் ஒரு மகத்தான மதம். ஒரு புரட்சிகர மதம். இஸ்லாமியர் உலக நாகரிகத்திற்கு முன் களந்திற்கும் சிறந்த பங்காற்றியுள்ளனர். இந்திய கலாச்சாரம் இசுலாமின் வருகைக்குப் பின் மகத்தான செழுமை பெற்றது, வளம் பெற்றது.*

> உலகளாவிய ரீதியில் ஐரோப்பா, ஆப்பிரிக்கா, ஆசியா ஆகிய மூன்று கண்டங்களிலும் மேற்கே அட்லாண்டிக் சமுத்திர கடற்கரையிலிருந்து கிழக்கே பசிபிக் சமுத்திரத்தின் கடைகோடி வரை 140 கோடி உலக மக்களை ஈர்த்த மதமாகும் இஸ்லாம்[89]

*என்னும் சிந்தனைகள் இஸ்லாம் சமயத்தின் தோற்றம், வளர்ச்சி, சமுதாய நோக்கோடு அணுக ஆதாரங்களாக அமைகின்றன.*

> அல்லாஹ்வைத் தவிர எந்த இறைவனும் கிடையாது. முஹம்மத் (ஸல்லல்லாஹீ அலைஹி வஸல்லம்) அவர்கள் அல்லாஹ்வின் திருத்தூதர் கலிமாவில் இடம்பெற்றிருக்கிற ‘இலாஷ்’ என்னும் சொல்லுக்கு இறைவன் என்பது பொருள். உரிமையுடையவனாயும், ஆணையாளனாயும், படைக்கிறவனாயும், பரிபாலிக்கிறவனாயும் இறைஞ்சுதல்களைக் கேட்டு அங்கீகரிப்பவனாயும் இருக்கின்ற இறைவனே வணங்கப்படும் தகுதியுடைபவன். எனவே நீங்கள் ‘லா இலாஹி இல்லல்லாஹீ’ என்று சொல்லும் போது அதன் பொருள் இந்தக் கட்டத்தில் இப்படி விரிவடைகிறது.[90]

*கலிமாவைக் கூறுவதன் மூலம் உலகத்தைப் படைத்த அதே இறைவன்தான் எங்கட்கும் அகில உலகத்துக்கும் அதிபதி, நாங்களும், எங்களுடைய பொருள்கள்*

அத்தனையும் அவனுக்கே உரியவை. அவன் படைப்பவன் நற்றேுகள் அளிப்பவன், வாழ்வும் சாவும் அவனிடமிருந்தே வருகின்றன. யாருக்கு எது கிடைத்தாலும் அதனைக் கொடுப்பவனும் இறைவன் தான். யாருக்கேனும் பயப்பட வேண்டும் என்றால், அவனுக்குதான் பயப்பட வேண்டும். யாரிடமேனும் கேட்க வேண்டும் என்றால் அவனிடம் தான் கேட்க வேண்டும். யாருக்கேனும் தலைவணங்க வேண்டும் என்றார். அவனுக்குத்தான் தலை வணங்க வேண்டும். வணக்கத்திற்கும், வழிபாட்டிற்கும் அவனே தகுதியுடையவன் என்னும் சிந்தனைகள் இசுலாம் சமூக மக்களோடு இயைந்து காணப்படுகின்றன.

மேலும், நாகூர் நாயகத்தின் அருள் மொழியில்,

> இஸ்லாத்துக்கு இரண்டு பக்கங்கள் உண்டு ஒன்று அகம், மற்றது புறம். அகத்தைச் சுத்தமாக வைத்துக் கொண்டு புறத்தை அழுக்கடையச் செய்தீர்களானால், நீங்கள் இஸ்லாத்தைப் பேணியவர்களாக மாட்டீர்கள். புறத்தைக் கவனித்துக் கொண்டு அகத்தை மறந்தாலும் அப்படியே[91]

என்பதும்,

> இந்தக் கட உலகை சூட்சும உலகங்கள் சூழ்ந்துள்ளன. அவற்றைப் பார்க்கக் கூடிய ஆற்றல் சாதாரண மனிதனுக்குக் கிடைப்பதில்லை என்பது தான் குறைபாடு. ஆனால் ஆத்ம ஞானப் பயிற்சிகளின் மூலம் இந்தக் குறைபாடு நீங்கி சூட்சும உலகங்கள் புலப்படத் தொடங்கும் இதைத்தான் திரைவிலகுதல் என்கிறோம்.[92]

> சமூகத்திலும், மார்க்கத்திலும் குழப்பத்தை உண்டாக்கும் கூட்டத்தினரோடு சேர வேண்டாம். மார்க்க சட்டதிட்டங்களும் ஆன்மிகப் பாதையும் ஒன்றோடொன்று முரண்பட்டதோ வேறு வேறானதோ அல்ல.[93]

மேற்கண்ட சிந்தனைகள் குமரி மாவட்ட இசுலாம் சமயத்தினருடைய சமுதாய வாழ்வில் பின்பற்றப்பட்டு வருகின்றன.

> இறைவனின் மீது நம்பிக்கை வைத்து அவனுடைய திருத்தூதரைப் பின்பற்றி ஒழுகுபவர்களுக்கு இறைவனின் சாந்தி உண்டாவதாக அல்லாஹ்வைத் தவிர்த்து வணக்கத்திற்குரியோன் வேறு எவருமில்லை என்றும், நான் எல்லா மக்களுக்கும் எச்சரிக்கை செய்து, நான் அவர்களை நல்வழிப்படுத்துவதற்காக அனுப்பப் பெற்ற அவனது திருத்தூதன் என்றும் சான்று பகர்கின்றேன்[94]

என்னும் கோட்பாடுகளைப் பின்பற்றி வாழ்வதும் புலப்படுகிறது.

**தற்கால சமுதாய நோக்கில் முசுலீம்களின் கல்வி, பொருளாதார நிலைகள்**

*கடந்த 60 ஆண்டுகளாக முசுலீம் சமுதாயம் தொடர்ந்து கல்வியிலேயும் பொருளாதாரத்திலும் பின் தங்கி வருகின்றது. இந்தியாவில் வாழும் அனைத்து பிற்பட்ட சமூகங்களைவிட முசுலீம் சமுதாயம் பின்தங்கி உள்ளது.*

*தலித் சமுதாயம் மற்றும் மலைவாழ் மக்களை விட முசுலீம் சமுதாயம் பின் தங்கியதற்கு முக்கியக் காரணம் முசுலீம்களின் கல்வியைப் பற்றிய போதிய விழிப்புணர்வின்மை, கல்வியை மறந்ததால் இந்த கடைசி நிலையில் உள்ளது. 2006 ஆம் ஆண்டு வெளியிட்ட கச்சார் குழு அறிக்கையில் முசுலீம்களின் கல்வி பொருளாதார நிலை தெளிவாக படம்பிடித்துக் காட்டப்பட்டுள்ளது.*

1. *முஸ்லீம்களில் 41% படிப்பறிவில்லாதவர்.*
2. *8 ஆம் வகுப்பு வரை படித்தவர்கள் 15%*
3. *+2 வரை படித்தவர்கள் 7.8%*
4. *டிப்ளமோ வரை படித்தவர்கள் 4.4%*
5. *பட்டப் படிப்பு படித்தவர்கள் 1.7% பேர் மட்டுமே*
6. *38.4% பேர் வறுமையில் வாழ்கின்றனர்.*
7. *கிராமப்புற முசுலீம்களில் 62% பேர் அடிப்படை வசதியில்லாத வீடுகளில் வாழ்கின்றனர்.*
8. *பாதுகாப்புத் துறையில் 4% பேர் முசுலீம்கள்*
9. *தமிழக உள்துறையில் உயர் பதவிகளில் ஒருவர் கூட முசுலீம்கள் இல்லை (2006 கணக்குப்படி)*
10. *கீழ்மட்டப் பதவியில் 26% பேர் உள்ளனர்.*

*மேற்கண்டவைதான் முசுலீம் சமூகத்தின் தற்போதைய நிலை. இது தொடர்ந்தால் இன்னும் சில ஆண்டுகளில் முசுலீம் சமுதாயம் மிகவும் பின் தங்கி விடும். சில பெற்றோர்கள் உடனே கிடைக்கும் இலாபத்திற்காக படிக்கும் பிள்ளைகளை வேலைக்கு அனுப்புகிறார்கள். இதன் அபாயத்தை அவர்கள் உணர்வதில்லை. இன்றைக்கு அத்தியவாசிய பொருட்களின் விலை பல மடங்கு உயர்ந்துள்ளது. இடத்தின் மதிப்பும் பல மடங்கு உயர்ந்துள்ளது. இதனால் வீட்டு வாடகையும் உயர்ந்து வருகின்றது.*

*எதிர் காலத்தில் நாம் சம்பாதிக்கும் 3 ஆயிரம், 5 ஆயிரம் ரூபாயை வைத்துக் கொண்டு வாழ்வது என்பது சாத்தியமற்றது. இதனால் முசுலீம்கள் நிரந்தர நரகத்திற்கு அனுப்பும் வட்டியில் சிக்க நேரிடும். மேலும் பொருளாதாரத் தேவையால் சமூகச் சீர்கேடுகள் அதிகரித்து விடுகின்றன.*

**கல்வி முன்னேற்ற நிலைகள்**

*கல்வி முன்னேற்றம் என்பது வெறும் அறிவை வளர்க்கும் முயற்சி அல்ல, கல்வியில் முன்னேறினால்தான் பொருளாதாரத்தில் முன்னேற முடியும். அரசு நிர்வாகத்தில் நுழைந்து நமது சமூகப் பாதுகாப்பை உறுதி செய்ய முடியும். சிறந்த கட்டமைப்பை உருவாக்கிட முடியும்.*

*பெரும்பாலான முசுலீம் இளைஞர்கள் வெளிநாடுகளில் வேலை செய்து வருகின்றனர். இந்தியாவில் வேலை இல்லை என்று இவர்களாக முடிவு செய்து கொண்டு வெளிநாடு சென்று மிகவும் கஷ்டப்பட்டு கொண்டு இருக்கிறார்கள்.*

*ஒரு தந்தை தனது பிள்ளைகளுக்குச் சிறந்த வழிகாட்டியாக இருந்து வளர்த்தால்தான் பிள்ளைகள் அறிவுள்ள, ஆற்றல் உள்ள, ஒழுக்கமுள்ள மார்க்க அறிவுள்ளவர்களாக ஆவார்கள். அந்த பிள்ளைகள்தான் குடும்பத்தையும் சமூகத்தையும் முன்னேற்றக் கூடியவர்களாக ஆவார்கள்.*

**வெளிநாட்டுப் பயணம்**

*குடும்பத்தைப் பிரிந்து வெளிநாடுகளில் முசுலீம் இளைஞர்கள் வேலைக்குச் செல்வதால் இந்த சமூகம் முதுகெலும்பில்லாத பாதுகாப்பற்ற சமூகமாக மற வாய்ப்புள்ளது. சமுதாயத்திற்கு ஒரு ஆபத்து கலவரம் என்று வந்தால் பாதுகாக்க ஆண்கள் அற்ற அவலநிலை உருவாகின்றது. இத்தகைய அபாயத்தை முசுலீம் இளைஞர்களும், மாணவர்களும், பெற்றோர்களும் உணர்தல் வேண்டும்.*

**சமூக முன்னேற்றத்திற்கான தீர்வுகள், கல்வித் துறை**

*இந்தியாவில் அரசு துறையிலும், தனியார் துறையிலும் எவ்வளவோ வேலைகள் இருக்கின்றன. இந்தியா என்பது நமது நாடு. இந்திய விடுதலைக்காகப்*

*பெரிதும் பாடுபட்டது முசுலீம் சமுதாயம். இங்குள்ள அனைத்து வளங்களும் தமக்கும் சொந்தமானவை. இவைகளைப் பெறுவதற்கு முறையான கல்வி அவசியம்.*

**மருத்துவத் துறை**

*மருத்துவத் துறையில் முசுலீம்கள் 4.4% தான் உள்ளனர். சங்பரிவாரங்களின் திட்டங்களில் ஒன்று முசுலீம் கர்ப்பிணிப் பெண்களுக்கு தவறான மருந்தை கொடுத்து எதிர்கால முசுலீம் சமுதாயத்தை ஊனமுற்ற சமுதாயமாக மாற்ற வேண்டும். மேலும் முசுலீம்களுக்குத் தவறான மாத்திரைகளை கொடுத்து உடல் ரீதியாக அவர்களை பலவீனப்படுத்த வேண்டும் என்று ஒரு இரகசிய சுற்றறிக்கையை இந்தியா முழுவதும் அனுப்பியது. இது சில இடங்களில் நடந்து கொண்டும் இருக்கின்றது. அதிகமாக முசுலீம் மருத்துவர்களை உருவாக்குவது மிகவும் அவசியமானது.*

*ஆகவே முசுலீம்கள் விழித்து கொள்ளுங்கள். இந்த அவலநிலை தொடர்ந்தால் இன்னும் சில ஆண்டுகளில் முசுலீம்கள் அனைத்து துறைகளிலும் பின்னுக்கு தள்ளப்பட்டு இந்தியாவில் தனிமைப்படுத்தப்பட்ட சமூகமாவார்கள். படிப்பறிவு இல்லாமல் ஆரோக்கியம் இல்லாமல் சமூக கட்டமைப்பு இல்லாமல் பாதுகாப்பற்ற சூழ்நிலையில் இந்த சமூகம் வேட்டையாடப்படும் அபாயம் உள்ளது. எனவே கல்வியில் அதிக கவனம் செலுத்தி நமது பாதுகாப்பை உறுதி செய்ய வேண்டும்.*

**சமுதாயத் தீர்வுகள்**

*பல்வேறு முஸ்லீம் அறிஞர்களும், கல்வியாளர்களும் ஆய்வு செய்து பல்வேறு தீர்வுகளை வெளியிட்டுள்ளனர். இருந்தும் இந்த சமுதாயம் இன்னும் பின்தங்கிகொண்டு தான் இருக்கிறது. இதற்கு காரணம் நடைமுறைக்கு சாத்தியமில்லாத தீர்வுகளை சொல்வதுதான். முசுலீம் இயக்கங்கள் ஒன்றுபட வேண்டும் முசுலீம் அரசியல் கட்சிகள் ஒன்றுபட வேண்டும் போன்ற தீர்வுகள் உபயோகமற்றது. இப்படி சிலர் முயற்சி செய்து தோல்வியைத் தழுவி உள்ளனர். தலைவாக்ளிடம் காணப்படும் பெருமை, ஆதிக்கச் சிந்தனை, உலக ஆதாயம்*

